ஓர் அழகு நங்கையின் மேனியோடு நீங்களும் விளங்கலாம்!

## நாளொரு மேனியாக
## வனப்பெய்துங்கள் . . .

ஆம், சோபிக்கும் எழில்
மேனி பெற விரும்பும் உங்
கள் கனவும் நனவாக முடியும்!
குளித்திடும் ஒவ்வொரு தடவை
யும் ரெக்ஸோனா உபயோகியுங்கள்—
அதன் கேடில் சத்து நிறைந்த நுரை
யை எப்போதும் உங்கள் சருமத்தின்
மீது மிருதுவாகத் தேய்த்து, நீரா
டுங்கள். நாளொரு மேனியாக
உங்கள் சருமம் மேலும்
மேலும் மென்மை
மிகுந்த புது வனப்
பெய்தும்.

1955 ரெக்ஸோனா
அழகுப் போட்டி
யில் வெற்றிபெற்ற
அழகியான "மிஸ்.
ரெக்ஸோனா"




பெரிய சைஸிலும்
கிடைக்கும்.

. . . இயற்கை
யான வழி

# ரெக்ஸோனா

உபயோகித்தல்

கேடில்* கலந்த சோப் இது ஒன்றே.

RP. 139-50 TM



# சுடர் புத்த ஜயந்தி மலர்

## பொருளடக்கம்




துன்முகி வருஷம்
விலை ரூபாய் 1

# INDEX TO ADVERTISERS




We thank all the Advertisers for their ready and generous assistance and wish them all success in their undertakings during the year. —The Editor, "CHUDAR."




"மறந்துமழை மாறா மகத நன்னாட்டுக்
கொருபெருந் திலகமென் றுரவோ ருரைக்கும்
கரவரும் பெருமைக் கபிலையம்பதி"

என்ற சிறப்புக் கொண்ட கபிலவாஸ்து எனும் நகரத்தில், சாக்கிய மரபில், சுத்தோதனன் என்பான் மாயாதேவியை மணந்து, அரசு புரிந்து வந்தான். இவர்கள் நெடுங்காலம் வரையில் புத்திரப் பேறின்றி இருந்தபோது, பிரபா பாலர் என்னும் போதிசத்துவர், உயிர்களைத் தீய வழியினின்றும் நீக்கி நல்வழியில் புகுத்துவதற்கு இவ்வுலகில் அவதரிக்க விருப்புற்று, மாயாதேவி சுத்தோதனன் எனும் இருவருடைய கனவிலுந் தோன்றி, தாம் அவர்களுக்குப் புத்திரராக அவதரிக்கப்போதல் உணர்த்திப் பின்னர் அரசமாதேவியின் வயிற்றிற் புகுந்தனர்.

கருவுற்ற மங்கையர்களுக்கு உளவாகும் வருத்தமும் வயாவும் மாயாதேவிக்கு இலவாயின. கருவுயிர்க்கும் காலம் அருகவும் அரசன் அவளை உலும்பினி என்னும் பூஞ் சோலைக்கு அழைத்துச் சென்று, பலவகை மலரும் கொணர்ந்து காட்டி அவளை மகிழ்வித்தான். அங்குள்ள அசோக மரமொன்றைச் சுட்டிக் காட்டி "இம்மரப் பூவொன் றைப் பறித்துத்தா" என அரசன் வேண்டவே, பூப்பறிக்க அவள் தன் வலக்கையை உயர்த்தினள். அப்போது அவளுடைய வலப்பக்கத்தின் வழியே ஆண் மகவு வடிவாக பிரபா

பாலர் வெளிப்போந்து ஆங்கு முளைத்திருந்த நீலத்தாமரை மலரொன்றிற் சென்றிருந்தார். அப்பால் அம்மலரின் நீங்கி சிங்கக் குட்டிபோல் ஏழடி நடந்துவந்து தாம் புத்தாவதார மென்பதை அருகுளோர் அறியக்காட்டினர்.

கௌதம புத்தர் **பிறந்ததினம்** (கி. மு. 623) ஈசான சகாப்தம் 68-ம் ஆண்டு **வைகாசி மாதத்திற் பூர்ணிமை**யும் விசாக நக்ஷத்திரமுங்கூடிய வெள்ளிக்கிழமை யென்பர்.

கி. மு. 249ம் ஆண்டில் அசோகர் உலும்பினிவனம் அடைந்து, புத்தபிரானை மனமார வணங்கி, ஒரு கற்றூண் நாட்டி அதில் தாம் இங்குப் போந்த செய்தியைக் குறித்துள்ளார். இதை 'ரூமிந்தேய் ஸ்தம்பம்' என்பர், வரலாற்று நூலார். புத்தர் தோன்றிய ஞான்று நன்னிமித்தங்கள் பல நிகழ்ந்தன :

*" மைந்திருள் கூர்ந்த மனமாசு தீர*
*புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்*
*திங்களு ஞாயிறுந் தீங்குறு விளங்கத்*
*தங்கா நாண்மீன் தகைமையின் நடக்கும் ;*
*வானம் பொய்யாது மாநிலம் வளம்படும்*
*ஊனுடைய யுயிர்கள் உறுதுயர் காணா*
*கறவைகன் றூர்ந்திக் கலம் நிறை பொழியும்*
*பறவை பயன் துய்த் துறைபதி நீங்கா "*

கருவுயிர்த்த ஏழாம் நாளில் மாயாதேவி உவகைப் பெருக்கினால் உயிர் துறந்தாள்.

*" உலும்பினி வனத்துள் ஒண்குழைத் தேவி*
*வலம்படு மருங்குல் வடுநோ யுறாமல்*
*ஆன்றோன் அவ்வழித் தோன்றின னாதலின்*
*ஈன்றோள் ஏழாநாள் இன்னுயிர் வைத்தாள் "*

இப்பெருமை புத்தன் தாய்க்கு மாத்திரம் உரியதன்று !

*" புத்தன்தாய், நண்டு, இப்பி, வாழை, புனமூங்கில்,*
*கத்தும் விரியன், கடுஞ் சிலந்தி—இத்தனையும்,*
*வேலாலும் வாளாலுமின்றியே தாங்கொண்ட*
*சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு "*

என்று ஒரு இனத்தையே சிருஷ்டி செய்து விட்டான் கவி.

"மானிடராகிய மரத்தில் பல நூற்றுண்டுகளுக்கு ஒரு முறையே மலரும் மலர் இக்குழந்தை. இவன் துறவு பூண்டு

உலோக ரக்ஷகனக இருப்பான்” என்று அஸிதர் எனும் முனிவர் வாயிலாக அறிந்த சுத்தோதனன் தன் தனயனை உலக வழியிற் புகுத்தற் பொருட்டு பலவாறு முயன்று வந்தான்.

நாளடைவில் சுத்தோதனன் கௌதமரைத் தன் இள வரசராக நியமித்து, யசோதரை என்னும் மங்கையையும் மணம் புரிவித்தான். அப்போது புத்தபிரான் வயது பத்தொன் பது.

கௌதமர் யசோதரைபால் காதல் கூர்ந்து மதிமயங்கிக் கிடக்க, ஒருநாள், உலும்பினி வனத்திலுள்ள அரண்மனையில் வந்து தன்னைக் காணும்படி, அரசன் திருமுகம் அனுப்பினன். தந்தையைக் காண விழைந்து பல்லக்கிலேறிச் செல்லுகையில், பிணியாளன், முதியோன், அழுகிக் கிடந்தபிணம் இவற்றைக் கண்டு “இப் பிணி மூப்பு சாக்காட்டிற்குக் காரணமாகிய பிறப்பிற்கு இடங்கொடாத நல்வழியை யறிந்து உலகத்தை உய்வித்தல் எப்பொழுது கூடுமோ?” என்று கவலையுற்று மீண்டுவந்தார். இளவரசரின் மனம் துறவில் பற்றுக் கொண் டது. சரேலெனத் தந்தையை யணுகி, “ஐய, பிறப்புப் பிணி மூப்பு சாக்காடாகிய துன்பங்களை ஒழித்தற்குரிய வழியை என்மனம் நண்ணிற்று. இனி இவ்வரசையும், உலகத்தையும் விட்டு நான் விலக வேண்டிய நன்னளை எதிர்நோக்கி நிற்கின்றேன்” என உரைத்தார்.

உரோகிணி நதி சென்று நீராடித் திரும்பும் கௌதமரை ஒருநாள் ஒருவன் அணுகி “உமக்கு மகன் பிறந்தான்” எனவும் “ஐயோ, இவன் என் புத்தியாகிய சந்திரனை விழுங்கவந்த இராகு” வென்று சொல்ல, அதனல் அப் புதல் வன் இராகுலன் என்று பெயர் பெற்றான் என்பர். அரண்மனை சேர்ந்து ஆடல் பாடல் விருப்பற்று இருந்து வரும் நாளில், ஈசான சகாப்தம் 96-ம் வருஷம் விசாக பூர்ணிமையன்று, கௌதமர், மனைவி மக்களை விட்டு, பிறவிப்பிணி மருத்துவனக வேண்டித் துறவு பூண்டார். அப்போது அவருக்கு வயது இருபத்தொன்பது.

புத்தர் பலநாள் நடந்து, புத்தகயாவுக்கு அண்மையி லுள்ள உருவேலாவனத்தைச் சார்ந்து நைரஞ்சரை யென் னும் ஆற்றின் கரையை யடைந்து, ஐந்து கிளைகளையுடைய அரசமரத்தடியில் இருந்துகொண்டு, இருபத்தெட்டு நாட்கள் இரவும் பகலும் துயில் கொள்ளாமல், நாடியபொருளை நாட்டத் தில் கொண்டு தியானித்திருப்ப, இருபத்தொன்பதாம் நாள்

இரவில் ஞானோதயம் பெற்றார். புத்தருக்கு ஞானோதயமான தினம் வைசாக சுத்த பூர்ணிமை என்பர். ஒவ்வொரு வருஷத்திலும் இந் நன்னாள் திருநாளாகவே பௌத்தர்களால் கொண்டாடப் படும்.

*" மதிநாள் முற்றிய மங்கலத் திருநாள்*
*பொதுவறி விழந்து புலமுறு மாதவன் "*

துக்கம், துக்க காரணம், துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்ற ஞானத்தைப் பெற்றபின் உலகமாந்தரை நல்வழிப்படுத்த நிச்சயித்தார். தாம் அறிந்து கைக்கொண்ட தருமமாகிய சக்கரத்தை எவ்விடத்தும் உருட்ட நினைத்து; ஸாரநாத்துக்குச் சமீபமாயுள்ள மான்காடு என்ற விடத்தில் இருந்து கொண்டு, அங்குவந்தோர் அனைவர்க்கும் தமது சித்தாந்தத்தை உபதேசித்து வந்தார்.

*" இன்னார்க்கும் இனியனாய் இறந்தார்க்கும் இன்தீம்பால்*
*குன்றாமல் பொழிந்திட்ட குன்றாய குணத்தினான் "*

என்று மக்கள் வாயார வாழ்த்தினர்.

பல நகரங்களுக்குச் சென்று, பல சிஷ்யர்களைத் திரட்டி, சங்கம் நிறுவி, தர்மம் போதித்து வரும் நாளில், யசோதரை, இராகுலன் முதலானவர்களும் புத்தரின் பாதம் நண்ணிப் புண்ணிய வாழ் வெய்தினர்.

*" அருளாழி பயந்தோய் நீ; அறவாழி நயந்தோய் நீ;*
*மருளாழி துறந்தோய் நீ; மறையாழி புரிந்தோய் நீ,*
*மாதவரின் மாதவன் நீ; வானவருள் வானவன் நீ;*
*போதனருட் போதனன் நீ: புண்ணியருட் புண்ணியன் நீ.*

என்று துதித்து உலகம் போற்றிற்று.

தமது எண்பதாவது வயதில் குசீநகரத்தை யடைந்து " இனி முட்டையினின்றும் வெளிப்படும் குஞ்சுபோலத் தடை யின்றிச் செல்வேன் " என்று சொல்லி, அதற்கு வருந்திய ஆனந்தனைப் பார்த்து " இவ்வுலகில் ஒன்றும் நிலையுள்ள தன்று. மிகவும் நெருங்கியுள்ள ஒவ்வொரு பொருளினின்றும் நாம் நீங்கவேண்டும். அதுவே பேரின்பத்திற்குக் காரண மாகும் " என்று சொல்லிவிட்டு அருகில் நின்ற சிஷ்யர்களை நோக்கி: " நீங்கள் துன்பம் அடையாதீர்; இது மகிழ்தற் குரிய காலம்; அடையக் கருதிப் பலநாளாக முயன்று வந்த பெரும் பேற்றை இப்போது அடைய விருக்கிறேன்; இவ் வைம்புலச் சிறையினின்றும் நீங்கி என்றுமழியாத இன்பமய

மான நிருவாணத்தை அடையப்போகிறேன்" என்று பல வாறு கூறி எல்லாப்பற்றையு மொழித்து நிருவாண மெய்தினர்.

புத்தர் நிருவாணம் அடைந்த காலம் ஈசான சகாப்தம் 148-ம் வருஷத்தில் வைகாசி மாதத்தில் பூர்ணிமையும் விசாக நக்ஷத்திர மும் கூடிய நன்னாளென்பர். அப்போது அனுருத்தன் என் பான்:

"போதிமேவினை; புன்மையகற்றினை;
சோதிவானர் தொழவெழுந்தருளினை;
ஆதிநாத! நின் அடியிணைப் பரவுதும்."

என்று புகழ்ந்து பாடினன்.

"புத்தனே சரணம்;
புத்த தர்மமே சரணம்;
புத்த சங்கமே சரணம்."

என்று வழிபடுவர் புத்தரின் பக்தர்கள்.

—எஸ். ஸ்ரீநிவாசன்.

---

## பௌத்தத்தினுடைய சில முக்கிய உறுப்புகள்

பௌத்தத்தினுடைய அடிப்படையான தத்துவம் நான்கு வாய்மைகள் (பரம சத்தியங்கள்) ஆகும். அவை, துக்கம், துக்க காரணம், துக்க நிவர்த்தி, துக்க நிவர்த்தி மார்க்கம் என்பன.

**துக்கம்** என்பது என்ன?

பிறப்பு துக்கம், மூப்பு துக்கம், நோய் துக்கம், இறப்பு துக்கம், விருப்பம் இல்லாதவற்றுடன் சேர்ந்து இருப்பது துக்கம்; விரும்பியவற்றைப் பெருமல் இருப்பது துக்கம்; சுருக்கமாகக் கூறினால் ஐம்பொறிகளின் கூட்டுறவினால் ஏற் படுகிற பற்றுகள் எல்லாம் துக்கம் உடையன.

**துக்க காரணம்** என்பது என்ன?

காம விகாரச் சிற்றின்பத் தொடர்புடையதும், இங்கு அனுபவித்த பிறகு பிறிதோரிடத்தில் அனுபவிக்கப்படுவதும், மீண்டும் மீண்டும் பிறப்பதற்குக் காரணமும் ஆக உள்ள ஆசைதான் துக்கத்திற்குக் காரணம்.

**துக்க நிவாரணம்** என்பது என்ன?

சிறிதும் மிச்சமில்லாதபடி ஆசையை அடியோடு களைந்து, அதிலிருந்து வில கித் தப்பித்து, விடுதலை அடைவதுதான் துக்க நிவாரணம் ஆகும்.

**துக்க நிவாரண மார்க்கம்** என்பது என்ன?

இது, அஷ்டாங்க மார்க்கம் என்னும் எட்டுவித வழிகளை உடையதாகும். அவை, நற்காட்சி, நல்லொழுக்கம், நல்வாய்மை, நல்வாழ்க்கை, நற்செய்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுணர்ந்தோர் தலைப்பாடு என்பன.



# புத்த விஜயம்

பொங்குமின்பப் பொலிவினிலே
புத்திளமைக் குழைவினிலே
தங்கநிகர் மேனியிலே
தங்குமிதழ் நகையினிலே
மங்கையிவள் போலிந்த
மாநிலத்தில் இல்லையென,
எங்கெங்கும் எல்லோரும்
ஏற்றுகின்ற எழிலரசி;

களிக்கின்ற காமத்தின்
கனிரசமாம் கட்டழகி
அளிக்கின்ற இன்பத்தை
ஆருரைக்க வல்லாரே!
புளிக்கின்ற தன்மையிலாப்
பொருளெனவே அக்கடலில்
குளிக்கின்றார்: அவள் காலில்
குவிக்கின்றார் பொருளெல்லாம்.

கண்டவர் மயங்குகின்ற
கட்டழகி நினைத்திட்டாள்:
'மண்டலத்தை ஆளுகின்ற
மன்னரெலாம் என்னடிமை;
விண்டுரைக்க முடியாத
விந்தையென எனைப்புகழ்வர்;
விண்ணவர்தாம் நிகர்ப்பாரோ
வேல்விழியாள் என் சிறப்பை!'

ஒரு நாள்—

தீராத துன்பத்தைத்
 தீர்த்திடவே மெய்கண்டு
பாரெல்லாம் உயிரளிக்கப்
 பாடுபடும் புத்தர்பிரான்
ஊர்நாடி வருகின்ற
 உண்மையினைக் கேட்டறிந்தாள்;
ஆரணங்கு பார்க்கின்ருள்
 ஆவலுடன் அத்திரையில்.

மோனத்தில் தவமிருந்து
 முற்றுணர்ந்த ஐயனவன்,
ஞானத்தின் திருவுருவாய்
 நாற்சந்தில் வருகின்ருன்;
வானத்து தேவரெல்லாம்
 வணங்கிடும் வடிவுடனே,
தேனொத்த தண்மொழியால்
 தீதழிக்க வருகின்ருன்.

கண்ணிழந்த காமத்தின்
 கதியினை என்னென்பேன்!
பெண்ணவள்தான் கொண்டிட்ட
 பேதமையை என்னென்பேன்!
எண்ணத்தில் காமத்தை
 எந்நாளோ எரித்திட்ட
புண்ணியன்பால் இச்சைகொண்டாள்
 பொய்நெறியில் வழிகண்டாள்.

மேவுமெழில் மேனியினை
 மேன்மேலும் மெருகிட்டு
பூவிதழ்க் கடையினிலே
 புன்முறுவல் தான்காட்டி,
காவியுடை புத்தனிடம்
 கைகுவித்துக் கேட்டிடுவாள்:
'பூவுலகம் போற்றும்ஐய
 புகுவீரோ என்னில்லம்?'

கரியவிழிக் காமியவள்
 கூறியதைக் கேட்டிடவும்,
துரியநிலை எய்திவிட்ட
 தூயோனும் மொழிந்திடுவான்:

'வருவதிந்நாள் இல்லையம்மா,
வருந்திடவே வேண்டாம்;
உரிய நாளும் உண்டந்நாள்
உனைநாடி வந்திடுவேன்'

பின்னொரு நாள்—

வருவோரும் போவோரும்
வட்டமிட்ட பொற்கொடியாள்,
உருமாறி உடலழுகி
ஊர்ப்புறத்தே கிடக்கின்றாள்;
கருமத்தை எண்ணியெண்ணிக்
கண்ணீர் வடிக்கின்றாள்;
கருணையினால் கனிவுடனே
கண்ணெடுத்தும் பார்க்கிலரே.

ஆழ்ந்திருந்த துன்பத்திற்கு
ஆறுதல்போல், அந்நொடியில்
சூழ்ந்திருந்த இருளிடையே
சுடர்விளக்காம் ஒரு ஜோதி,
வாழ்விழந்த தனைநோக்கி
வருவதையே கண்டிட்டாள்;
வீழ்ந்திருந்த தனக்குற்ற
விடுதலையும் உணர்ந்திட்டாள்.

அன்புடனே இருகரங்கள்
அணைக்கின்ற அவளுடலை
துன்பத்தின் சுமையெல்லாம்
தொலைகின்ற தந்நிலையில்,
இன்பந்தான் உளமெல்லாம்
ஈடற்றுப் பரவிடவும்,
'என் பாவம் தீர்த்தென்னை
ஏற்றிட்ட தா'ரென்பாள்.

அன்னையினும் தயவுடனே
அகிலமெலாம் காத்திடுவோன்,
புன்னகையால் உள்ளத்தின்
பொய்யெல்லாம் தீர்த்திடுவோன்,
'முன்னொருநாள் அழைத்திட்டாய்
மோகத்தால் புத்தனையே,
இந்நாளில் வந்தேன்நான்
இது உரிய நாள்' என்றான்.

—மு. ஸ்ரீனிவாஸன்.

# கமலக் காணிக்கை



சரத் ருது சமயம். தோட்டந் தோப்புகளில் செடி கொடி மரங்கள் வெற்றுத் தோற்றத்துடன் காணப்பட்டன. அவைகளில் புஷ்பங்கள் ஒன்றுமில்லை. ஆனல் அங்கிருந்த ஒரு சிறு குளத்தில் மாத்திரம், ஒரு அழகான தாமரைப் புஷ்பம் மலர்ந்திருந்தது. இவ்வளவு அழகான புஷ்பம் வஸந்தத்திலும் இருந்ததில்லை. தோட்டக்காரன் அப்பூவைக் கண்டு மட்டில்லா ஆனந்தம் அடைந்தான்.

"இம்மலரை நான் அரசனுக்கு அளிப்பேன். அரசர்க்கு மலர்கள் என்றல் மிகவும் பிரியம். அரசர் மனம் பூரித்து எனக்கு ஏதாகிலும் வெகுமதி வழங்குவார்" என்று எண்ணமிட்டுக் கொண்டே, தோட்டக்காரன் அம்மலரைப் பறித்து எடுத்துக் கொண்டு, அரண்மனை வாயிலை அடைந்து, அரசர் வரும் வழியை நோக்கி நின்று கொண்டிருந்தான்.

நகரத்துக்கு வெளியே வட விருக்ஷத்து நிழலிலே, பகவான் புத்த தேவர் எழுந்திருளியிருந்தார். அரண்மனையிலிருந்து மங்கள வாத்திய கீதம் எழுந்தது. குங்குமம்,சந்தனம், மற்றும் பூஜா திரவியங்கள் நிறைந்த தாம்பாளங்களை ஏந்தி மங்கள கீதங்கள் பாடிக்கொண்டு, பலர் புறப்பட்டனர். பகவான் புத்தரின் தரிசனத்துக்காக, பிரஸன்னஜித் மஹாராஜா வெளியே வந்தார்.

தாமரைப் பூவின் இதழ்கள் நன்கு மலர்ந்திருந்தன. அந்தப் பூவை வெகு கவனமாகத் தோட்டக்காரன் வைத்துக் கொண்டிருந்தான். மலரிலிருந்து ஒரு மகரந்த தாது கூடக் கீழே விழாதபடி அவன் அதை ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டிருந்தான். அச் சமயம் ஒரு வியாபாரி கமலத்தின் வனப்பைப் பார்த்து மனம் மகிழ்ந்தான். தோட்டக்காரனிடம அவன் வந்து "இம் மலரை விற்க உத்தேசமா? இன்று பகவான் புத்தர் இங்கே எழுந்தருளி இருக்கிறர். சொல், என்ன விலைக்குத் தருவாய்", என்று கேட்டான்.

"ஒரு வராகன் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையுடன்

இந்த மலரை எடுத்துக்கொண்டு இன்று கிளம்பினேன்."

"சரி, சம்மதம்" என்று வியாபாரி கூறினன். இதற்குள் அங்கே வந்து சேர்ந்த அரசனுக்கும் அந்தப் புஷ்பத்தைக் கண்டு அதில் மனம் சென்றது.

"இந்த மலருக்கு என்ன விலை கேட்கிறய்" என்று அரசன் தோட்டக்காரனைக் கேட்டார்.

தோட்டக்காரன் மிகவும் பணிவுடன், "மஹாராஜ், இந்த வியாபாரி இம்மலருக்கு ஏற்கனவே விலை பேசிவிட்டார்" என்று சொன்னன்.

"என்ன விலைக்குக் கேட்டார்?"

"ஒரு வராகனுக்கு."

"நான் பத்து வராகன் தருகிறேன்" என்று மன்னர் சொன்னர்.

"அப்படி யென்றல் நான் இருபது வராகன் தருகிறேன்" என்று வியாபாரி சொன்னன்.

இந்தப் போட்டியைப் பார்த்த தோட்டக்காரன், "நீங்கள் இருவரும் என்னை மன்னியுங்கள். இந்த மலரை நான் விற்க விரும்பவில்லை," என்று சொல்லவே, அவர்கள் இருவரும் ஏமாற்றத்துடன், மேலே நடந்து சென்றனர்.

மலரை ஏந்திக் கொண்டு தோட்டக்காரனும் மேலே நடக்கலுற்றன். நடக்கும்போது அவன், "புத்தபகவானுக்குச் சமர்ப்பிப்பதற்காக இவர்கள் இருவரும் இப்படிப் போட்டியிட்டார்களே! அவர் எவ்வளவு உயர்ந்த மகாத்மாவாக இருக்கவேண்டும். நானே என் இம்மலரை அவருக்குச் சமர்ப்பிக்கலாகாது?" என்று எண்ணமிட்டான்.

வட விருக்ஷத்தின் குளிர்ந்த நிழலில் புத்தர் பிரான் பத்மாஸனமிட்டு எழுந்தருளி இருந்தார். அவரது நெற்றியிலிருந்து தேஜோ மயமான தொரு ஒளி வீசிக் கொண்டிருந்தது. முகத்தில் ஆனந்தமும் சாந்தியும் நிறைந்திருந்தன.

அவரது சரணங்களில் தோட்டக்காரன் தண்டனிட்டு, புஷ்பத்தை அவருக்குச் சமர்ப்பித்தான். அந்தச் சமயத்தில் மரத்தின்மீது அமர்ந்திருந்த பக்ஷிகள் பாட ஆரம்பித்தன. குளிர்ந்த காற்று வீசி கமல மலரின் இன்ப வாசனையைச் சுற்றும் பரப்பியது.

பகவான் புத்தர், சந்தோஷத்திலாழ்ந்தார். புன்னகைபூத்து, அவர் தோட்டக்காரனை நோக்கி, "ஏதாகிலும் சொல்ல விரும்புகிறயா? ஏதாவது கேட்க வேண்டுமா? " என்று கேட்டார்.

தழுதழுத்த குரலில் தோட்டக்காரன், "ஒன்றும் இல்லை பிரபோ. தங்கள் பாத கமலத்தின் அருள் மட்டுமே வேண்டும்" என்று பதில் கூறினன்.

[தக்ஷிண பார்த் ஹிந்தி பிரசார் சபையார் வெளியிட்டுள்ள 'குஸுமமஞ்சரி' என்ற சிறு புத்தகத்திலிருந்து மொழிபெயர்ப்பு.]



# நட்புக் கனி

அ. வி. குப்புஸ்வாமி

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு புத்தர்பிரான் போதித்த அஹிம்சா நெறியைக் காந்தியடிகள் இருபத்து ஐந்து வருஷங்களுக்கு முன்பு, அரசியல் துறையில் கையாண்டு, இந்நாட்டிற்குச் சுதந்திரம் ஈட்டுத் தந்தார். கீதையை உபதேசம் செய்து தர்ம யுத்தத்தில் அர்ஜுனனை இறங்கச் செய்தார் கண்ண பிரான். நேருஜி, ஸர்தார் படேல், ராஜன் பாபு முதலான தேசிய வீரச் சிங்கங்களுக்கு அஹிம்ஸா நெறியை உபதேசம் செய்து, ஸத்தியாக்கிரஹப் போரில் அவர்களை ஈடுபடச் செய்தார் காந்திமகான். ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாழ்க்கையிலும், புத்தர்பிரான் வாழ்க்கையிலும் நிகழ்ந்த பல சம்பவங்களை, காந்திமகான் வாழ்க்கையிலும் ஒருவாறு நாம் காண முடியும். சரித்திர நிகழ்ச்சிகள் காலச் சக்கரத்திலே சுழன்று சுழன்று திரும்பத் திரும்பத் தோன்றும் என்பர் சரித்திர அறிஞர்கள். அவ்வண்ணமே மகாத்மாக்களின் வாழ்க்கைச் சரிதங்களிலும் சில சம்பவங்கள் திரும்பத் திரும்பச் சுழன்று வந்து தோற்றுகின்றன. இது சம்பந்தமாக காந்தியடிகளின் வாழ்க்கையில் நேரிட்ட ஒரு சிறு சம்பவம் நினைவுக்கு வருகின்றது. தில்லித் தமிழ்ச் சங்கத்திற்கும் இந்த நிகழ்ச்சிக்கும் ஒரு வகையில் தொடர்பு இருப்பதால் இதைச் ''சுடரில்'' எழுதலாம் என்று எண்ணினேன்.

மத்திய இந்தியாவில் உள்ளது மதுரா க்ஷேத்திரம். அங்கு அவதரித்து மேலைக் கடல் ஓரத்தில் துவாரகையில் அரசு செலுத்தினர் கண்ண பிரான். அதுபோல மேற்குக் கடல் அருகேயுள்ள போர்பந்தரில் ஜனித்த காந்திமகான், தில்லி நகரில் ''பங்கிக் காலனியில்'' தங்கி, இந்தியாவின் முடி சூடா மன்னராக, தேசத்தின் முழுக் கவனத்தையும் கவர்ந்திழுத்து வந்தார். அச்சமயம், லண்டன் நகரத்திலிருந்து ''காபினெட் மிஷன்'' கோஷ்டியினர் தில்லிக்கு வந்து தேசத் தலைவர்களுடன் இந்திய சுதந்திரம் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்தி வந்தனர். காந்திஜி தங்கியிருந்த பங்கிக் காலனிச் சிறு குடிலில், இத்தேசத்தின் சுதந்திரத்திற்கு அஸ்திவாரம் கோலப்பட்ட நாட்கள் அவை. தேனீக் கூடுபோல ''பங்கி காலனி'' இரவு பகல் ஓய்வற்றுக் கலகலவென்றிருந்தது. எந்நேரமும் அங்கு தேசத்

தலைவர்களும், சர்க்கார் அதிகாரிகளும் வருவதும் போவதுமாக இருந்தனர்.

தில்லித் தமிழ்ச் சங்கமும் அந்த சமயத்தில்தான் பிரபலமடைய ஆரம்பித்தது. ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்கள் நினைவுச் சின்னமாக ஒரு இலவச வாசகசாலையும் புத்தகாலயமும் ஏற்பாடு செய்யத் தில்லித் தமிழ்ச் சங்கம் சிறிது நிதி திரட்டியிருந்தது. அதிருஷ்டவசமாய்த் தில்லி சர்க்கார் ஒரு சிறு கட்டிடத்தையும் இதற்கென உதவ முன் வந்தனர். இக் கட்டிடத்தில் ஸ்ரீ சத்தியமூர்த்தி இலவச வாசகசாலையைத் திறந்துவைப்பதற்கு, காந்தியடிகளை அழைக்கவேண்டும் என்பது எனது அவா. சங்கத் தலைவரும், கமிட்டியினரும், "முயன்று பார்ப்போம்," என்று ஆமோதிக்கவும் செய்தனர். காரியதரிசி என்ற ஹோதாவில் இதை ஏற்பாடு செய்வது என் பணியாயிற்று.

பிரார்த்தனைக் கூட்டம் முடிந்ததும் காந்திஜி சற்று ஒழிவுடன் இருப்பார்கள், அதுவே அவரைக் கண்டு கேட்கத் தகுந்த சமயம் என்று விசாரித்து அறிந்துகொண்டு, ஒரு நாள் மாலை, பங்கி காலனி போய்ச் சேர்ந்தேன். பிரார்த்தனை முடிந்து காந்தியடிகள் தம் சிறு குடிலுக்குத் திரும்பினார்கள். கூட்டமும் கலைந்தது. காந்திஜியுடன் ஆலோசனைக்கு வரும் தேசத் தலைவர்களின் தரிசனத்திற்காக, ஒரு சிலர் மட்டும் பிரார்த்தனை மைதானத்துக்கு அருகேயிருந்த வண்டிப் பாட்டையில் நின்றுகொண்டிருந்தனர். மற்றொரு புறத்தில் ஒரு கிழவர் தனியே நின்றுகொண்டிருந்தார்.

மகாத்மாஜியைக் காண விரும்புவோர், முதலில் அவரது காரியதரிசியைப் பார்த்து அனுமதி பெறவேண்டும். காரியதரிசி ஸ்ரீ பியாரிலால் அவர்களைக் காண்பதே மிகவும் சிரமம். இருந்தபோதிலும் என் பெயரையும் வந்த காரணத்தையும் ஒரு சீட்டில் எழுதி அவருக்கு அனுப்பினேன். பதிலுக்குக் காத்துக் கொண்டிருந்தேன்.

அங்கு தனியே ஒருபுறம் நின்றிருந்த பெரியவரும், காந்தியடிகளைச் சந்தித்துப் பேச வந்திருப்பவர் எனத் தெரிந்தது. அங்கு நடமாடிக் கொண்டிருந்த ஆச்ரமச் சிப்பந்திகளுடன், அவர் குஜராத்தி பாஷையில், தாம் காந்திஜியைப் பார்த்துப் பேச விரும்புவதாயும், தமக்கு ஒரு சிறு அவகாசம் ஏற்பாடு செய்து தரும்படியும் கேட்டுக்கொண்டிருந்தார். எனக்குக் குஜராத்தி மொழி தெரியாது. ஆயினும், விஷயத்தை ஒருவாறு ஊகித்துக் கொள்ள முடிந்தது. அச்சிப்பந்திகளில் ஒருவரேனும் அவருக்குச் செவி மடுத்ததாகத் தெரியவில்லை. அச்சமயம், ஆச்ரமக் காரியாலயத்திலிருந்து வெளியே வந்த ஒரு ஆச்ரமவாசியை, அப்பெரியவர் நெருங்கி, தம் வேண்டுகோளைத் தெரிவித்தார். தாம் ஒரு நிமிஷ நேரம் மட்டும் அண்ணல் காந்தியடிகளைப் பார்த்துப் பேச விரும்புவதாகவும், எப்படியாவது காந்திஜியின் பேட்டிக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்றும், கெஞ்சும் குரலில் அவரைக் கேட்டுக் கொண்டார், அந்த ஆச்ரமவாசி, சாந்த குணம் படைத்தவராய்க் காணப்பட்டார். "என்ன காரியமாய் நீங்கள் பாபுஜியைக் காண விரும்புகின்றீர்கள்?" என அவர் கிழவரை வினவினார்- அதற்கு அப்பெரியவர், "குறித்த அலுவல்கள் ஒன்றும் எனக்கு இல்லை. ஹரித்வாரம், ரிஷிகேசம் முதலான இடங்களுக்குப் போய் என் யாத்திரையை முடித்துக்கொண்டு ஊர் திரும்பிக் கொண்டிருக்கிறேன். தில்லியில் மகாத்மாஜி அவர்களை தரிசனம் செய்து, ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசவேண்டும் என்ற ஆவலில் இங்கு வந்திருக்கிறேன். சீக்கிரமே ஊர் திரும்பவேண்டும்" எனப் பதில் சொன்னார். அதற்கு ஆச்ரமத் தொண்டர், "ஸ்வாமி, தினம் ஆயிரம் பேருக்குமேல் காசியிலிருந்தும் ஹரித்வாரத்திலிருந்தும் யாத்திரை முடித்

துக்கொண்டு தில்லி மார்க்கமாகத் திரும்புகிருர்கள். இவர்கள் ஒவ்வொரு வரும் ஒரு நிமிஷம் காந்திஜியைப் பார்த்துப் பேசவேண்டுமென்று ஆரம் பித்தால், சூரிய பகவான் பாபுஜிக்குத் தினத்திற்கு நூறுமணிநேரம் கொடுத் தால்கூடப் போதாதே! ஆகவே, ஒரு காரியமும் இல்லாமல் அவரைத் தொந்திரவு செய்வது சரியல்ல. எதற் கும், இந்த ஏற்பாடுகளுக்கும் எனக் கும் சம்பந்தம் இல்லை. நீர் ஒரு சீட்டு எழுதி அந்தரங்கக் காரியதரிசிக்கு அனுப்பிப் பாருங்கள். கூப்பிட்டால் உமது அதிருஷ்டம்'' என்று கூறி விட்டு அவர் அங்கிருந்து சென்ருர்.

குஜராத்திப் பெரியவர் உடனே ஒரு சீட்டு எழுதி காரியதரி சிக்கு அனுப்பினர். அவரும் நானும் பின்பு வெகுநேரம் காத்திருந்தோம். காரியதரிசியிடமிருந்து ஒரு பதிலும் வரவில்லை. மணி சுமார் ஏழு ஆயிற்று. இனி இன்று பாபுஜியைக் காண முடி யாது என்று தெரிவிப்பது போன்ற முகத்துடன், அப்பெரியவர் வீதியை நோக்கி நடக்கலானர். பின்பு சற்று நேரம் காத்திருந்துவிட்டு நானும் என் சைகிளைத் தட்டி ஏறினேன்.

அடுத்த நாள் சனிக்கிழமை. பிரார்த் தனைக் கூட்டம் ஆரம்பிப்பதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே நான் பங்கிக் காலனிப் போய்ச் சேர்ந்தேன். முதல் நாள் பார்த்த குஜராத்திப் பெரி யார் எனக்கும் முன்பே, காந்திஜி தங்கியிருந்த குடிலுக்கு எதிரே இருந்த ஓர் பாட்டையில் காத்துக்கொண்டிருந் தார். வலதுபுறமாகச் சரித்து ஊன் றிய தமது கைத் தடியின்மீது அவர் சாய்ந்துகொண்டிருந்தார். முதல் நாள் மாலை நான் அனுப்பிய சீட்டிற்கு ஒரு பதிலும் கிடைக்காததால், இன்று மகாத்மாஜியின் காரியதரிசியவர்க ளுக்கு விவரமான ஒரு கடிதம் எழுதி எடுத்து வந்திருந்தேன். அதில், பதி லைக் கேட்டுக்கொண்டு போவதற்காக வெளியில் காத்துக்கொண்டிருப்பதாக எழுதி இருந்தேன். காவல் புரிந்து கொண்டிருந்த சிப்பந்தி மூலம், அந்தக் கடிதத்தை உள்ளே அனுப்பினேன். பிரார்த்தனை நேரம் நெருங்கியது. பிரார்த்தனை மைதானத்திற்கும் போகாமல் பெரியவர் அங்கேயே நின்றுகொண்டிருந்தார். பிரார்த்தனை முடிந்து காந்திஜி தம் குடிலுக்குள் வந்து அரை மணிநேரம் கழித்து, ஓர் ஆச்ரம வாசி கிழவரிடம் வந்து, தன்னு டன்கூட அவரை வரும்படிக் கூப்பிட் டார். அவரைத் தொடர்ந்து பெரிய வரும், குடிலுக்கு முன்னே முற்றத்தி லிருந்த படிகளில் ஏறிக்கொண்டிருந்த போது, அண்ணல் காந்திஜி, தாமே வெளியே வந்து, கைகூப்பி வணங்கி, பொக்கை வாய்ச் சிரிப்புடன் அந்தப் பெரியாரை வரவேற்று, அவரைத் தழுவி ஆலிங்கனம் செய்துகொண் டார். அதைக் கண்ட எனக்கு தேவ ராஜப் பிள்ளை இயற்றியுள்ள குசேலோ பாக்யானத்தில் உள்ள இக்கவி நினை வுக்கு வந்தது :—

திலகமன் டோயவையன் திருவடி
வணங்கிப் பின்னர்
நிலவுமெய்ப் புளகம் போர்த்து
நிறம்புறத் தழுவிக்கொண்டான்
குலமறைத் தலைவனென்றும் கூர்ந்த
மெய் நட்பனென்றும்
மலர்தலை யுலகம் கூறும் வாய்மை
காத்தருளினனே.

முன்னர், துவாரகை நாதனை ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவந்தி நகரித்திலி ருந்துத் தம்மைக் காண வந்த சுதா மாவை எதிர்கொண்டழைத்து தழு விக்கொண்டதைப் போன்ற இக் காட்சியை, அன்று அங்கே பார்த்த ஒவ்வொருவருக்கும் மெய் சிலிர்த்தது.

அணைத்துத் தழுவிக்கொண்ட தம் தோழரைத் தமது சிறு குடிலுக்குள் அழைத்துக்கொண்டு, சுமார் இருபது நிமிஷ நேரம், அண்ணல் அளவளாவிக் கொண்டிருந்தார். அடிகளின் இவ்வ ளவு சிறந்த அன்புக்குரிய இப்பெரி யார் யாராக இருக்கக்கூடும் என்று என் மனம் என்ன என்னவோ எண்ண மிட்டது. அக்காட்சியைத் தற்செய லாகக் கண்ட ஆச்ரம வாசிகளும்,

வியப்புடனும், உருக்கத்துடனும், தங்களுக்குள் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்து அவர்களுக்குங்கூட இந்நிகழ்ச்சி ஒரு புதுமை நிகழ்ச்சியாக இருக்கவேண்டும் என எண்ணினேன்.

சுமார் இருபது நிமிஷ நேரத்துக்குப் பிறகு, தேச பிதா வெளி வாயில் வரையில் பக்கத்தில் தொடர்ந்து வர, வெளியே வந்தார் அக்குஜராத்திப் பெரியவர்.. இரவெல்லாம் சூரியனைக் காணாமல் காலையில் கதிரவனைக் கண்டதும், தன்மீது படிந்திருந்த பனித் துளிகளைச் சொட்டும் சூரிய காந்த மலர்போல், அப்பெரியாரின் முகம் காந்தியடிகளையே பார்த்து நின்றது. சச்சிதாநந்த வாரிதியில் நீராடித் தீர்த்த யாத்திரையின் முழுப் பலனையும் பெற்றதான சந்தோஷத்துடன் கரையில் ஏறி வரும் ஒரு பக்த சிகாமணிபோல அவர் விளங்கினார்.

அவர் பின்னே தொடர்ந்து சென்று அவரது ஊர் பெயர் முதலிய விவரங்களை அறியவேண்டும் என்று என்னை ஆசை உந்தித் தள்ளியது. இருந்தபோதிலும் முன்பின் அறியாத அவரை நெருங்கிப் பேச நாணம். அவர் மேன்மையை நேரில் கண்டு பின் அருகே நெருங்க அச்சம். அப்பெரியவர் மெய்ம் மறந்து வீதி நோக்கி நடந்தார். பின்னர் வெகுநேரம் நான் காத்துப் பார்த்தும், காரியதரிசியிடமிருந்து எனக்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை. எட்டு மணியாயிற்று. அன்றும் ஏமாற்றத்துடன் வீடு திரும்பினேன். எண்ணி வந்த காரியம் முடியாவிட்டாலும், வாழ்க்கையில் காண முடியாத ஒரு காட்சியைக் கண்ட சந்தோஷத்தில், இன்பமடைந்திருந்தது என் மனம்.

காந்திஜி யவர்களைப் பார்த்து அழைப்பது நமக்கு எட்டாத ஒரு முயற்சி. சங்கத் தலைவர் ஸ்ரீ சுப்ரமண்யன் அவர்களையே இப்பணியை மேற்கொள்ளும்படி கேட்டுக் கொள்வதுதான் யுக்தம் என்று எண்ணி, அடுத்த தினத்திலிருந்து அம்முயற்சியை விடுத்தேன்.

சில தினங்கள் கழிந்து ஒரு நாள், உத்தியோகத் துறையில் நண்பரான ஸ்ரீ அஜித்ராய் என்பவரிடம், காந்திஜியை இரண்டு தினங்கள் பார்க்கச் சென்றும் காண இயலாது போனது பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது அவர், "மஹாத்மாஜியைப் பார்ப்பது மிகவும் சுலபம். அவருக்கு விவரம் தெரிந்திருந்தால் உம்மை அவசியம் அழைத்துப் பேசி இருப்பார். ஆனால் ஆச்ரமத்து துவார பாலகர்கள் காந்திஜிக்குச் செய்தியனுப்பினால் தானே அது முடியும்! அவர்களே தராதரம் பார்க்காமல் எல்லா வேண்டுகோள்களையும் மறுத்துவிடுகிறார்கள்," என்று கூறினார். மேலும் அவர் சொன்னார்: "சமீபத்தில் ராஜ்கோட்டிலிருந்து, வயதான பெரியவர் ஒருவர் இங்கு வந்திருந்தார். அவர் சுமார் எழுபத்தைந்து வயதுக் கிழவர். ஆரம்பப்பள்ளி ஆசிரியராக வேலை பார்த்துப் பென்ஷன் பெற்றவர். மிகவும் எளிய குடும்பத்தினர். வறுமையில் வாடுபவர். காந்திஜி சிறு வயதில் ராஜ்கோட்டில் படித்தபோது, காந்திஜியுடன் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர். அவர் மூன்று நாள் முயன்றும் காந்திஜியைப் பார்க்க அனுமதிக்கவில்லை. மூன்றாம் நாள் இவரே ஒரு கடிதம் காந்திஜிக்கு எழுதி, ஒரு நிமிஷ நேரம் பேட்டி தருமாறு கேட்டிருந்தார். கடிதத்தைப் பார்த்த காந்தியடிகள், தாமே வெளியே வந்து, இவரை அழைத்துப் போய்ப் பேசினாராம். வறுமையால் வாடியிருந்த அந்தப் பெரியவர், தம் கஷ்டங்களைக் குறித்து ஒரு வார்த்தைகூட காந்திஜியிடம் சொல்லவில்லை. தம்முடன் பால்யத்தில் படித்த ஒரு நண்பர், உலக மஹா புருஷராக விளங்குகிறார்; அவர் அருகே சென்று ஒரு நிமிஷமேனும் அவருடன் ஒன்றிரண்டு பால்ய நினைவுகளைப் பேசவேண்டும் என்ற ஒரே ஒரு ஆசைதான் அவருக்கு இருந்தது. ஒன்றிரண்டு சிபார்சுகள் பிடித்து காந்திஜியின் ஆச்ரமக் காரியதரிசிகளிடம் சொன்ன பின்புதான் அவருக்கு ஒரு பேட்டி கிடைத்தது."

பங்கிக் காலனியில் நான் பார்த்த பெரியவரும், ஸ்ரீ அஜித்ராய் அவர்கள் விவரித்தவரும் ஒருவரே என்பதை அறிந்து, நான் சந்தோஷப்பட்டேன். காந்தியடிகளிடம் அவர் விடைபெற்று பங்கிக் காலனியிலிருந்து வெளியே சென்ற காட்சி திரும்பவும் என் மனக் கண் முன்னே வந்து நின்றது. அதே வேளையில், குசேலோபாக்கியானப் பாட்டு ஒன்றும் நினைவில் எழுந்தது :

அக்காலும் கண்ணனுந்தன்
  னணி வாயில் வரைவந்து
மிக்கார்வத் தொடுமடியில் விழ்ந்து
  வணங்கிட மகிழ்ந்து
நொக்காசி பலகூறித் துவார
  பாலகர் வாயில்
எக்காலு மின்பமறுன் கடங்
  தப்பா லேகிடுங்கால்.

---



## புத்தரின் பொன்மொழிகள்

இன்பத்தையோ துன்பத்தையோ எவனும் கைப் பற்றிக் கொண்டிருக்க வேண்டாம். இன்பத்தைக் காணவிட்டாலும் துக்கம்; துன்பத்தைக் கண்டாலும் துக்கம்.

சுய நலத்தினுல் ஜனங்கள் துக்கப்படுகிறுர்கள்.

மனம், வாக்கு, காயம் — இம் மூன்றிலும் பிறருக்குத் துன்பம் செய்யாமல், இம் மூன்றையும் கட்டி ஆள்பவனையே பிராமணன் என்போன்.

அர்த்த மற்ற சொற்களால் ஆக்கப்பட்ட நூறு பாடல்களை மனப்பாடம் செய்து ஒப்பிப்பதைவிட, அர்த்தமுள்ள அறநெறிப் பாடலின் ஒரே சொல்லே மேலானது. அதைக் கேட்பவன் உபசாந்தி அடைகிறுன்.

அறிவாளி தன் மனச் சிந்தனைகளைக் காத்து வருவானுக, ஏனெனில், அவை ஊடுருவி அறிவதற்கு அரிதானவை; தந்திர நுட்பம் வாய்ந்தவை; மனம் போன போக்கெல்லாம் பாய்ந்து திரிபவை. நன்கு பாதுகாக்கப் பெற்ற சிந்தனைகள் ஆனந்தத்தைக் கொண்டு வருகின்றன.

சமத்துவ நிலைச் சாதனையைப் பயில்வாயாக; அதனுல் எதிர்ப்புணர்ச்சியெல்லாம் கைவிடப்படும்.



# ராமபிரான் செய்த முடிவு

ஓ. வி. அளகேசன்

அயோத்தியா காண்ட ஆரம்பத்தில் ராம பிரானுடைய கல்யாண குணங்களை யெல்லாம் வால்மீகி பகவான் தம்முடைய அமுதக் கவிதையிலே வடித்துக் கொடுத்திருக்கிறார். பின்னால் வருகிற நிகழ்ச்சிகள் எல்லாம் அக் குணங்களுக்கு விளக்கமாகவும் விமரிசன மாகவுமே அமைந்துள்ளன. ராமனுடைய முக்கிய குணம் யாது? 'சத்திய பராக்கிரமன்' என்று வால்மீகியும், 'நல்லற மூர்த்தி' என்று கம்பரும், ராமனைப் பாடுகிறார்கள். ராமன் எப்போதும் உண்மையிலே உறுதியாக நிற்பவர்; எத்தகைய இடுக்கண் நேரிட்டாலும் அறத்தினின்றும் வழுவாதவர் ; இந்த உண்மையை அவருடைய ஒவ்வொரு நினைப்பிலும், சொல்லிலும், செயலிலும் நாம் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம். இது எல்லோருக்கும் முடியாது ; ஏன், ஒரு சிலருக்குக் கூட முடியாது. இதுவே அவருடைய சிறப்பு.

இனி இதிலிருந்து என்ன ஏற்படுகிறதென்று சற்று கூர்ந்து பார்ப்போம். உண்மையிலும் அறத்திலும் பிறழாது நிற்கவேண்டும் என்று முடிவு செய்வது கஷ்டம், ரொம்ப ரொம்பக் கஷ்டம். ஏனெனில், அதை நிறைவேற்றுவதில், சாமானியர்களால் ஏற்க முடியாத சோதனைகளையும் துன்பங்களையும் ஒருவன் ஏற்க வேண்டி வரும். ஆனால், அப்படி ஒரு முடிவுக்கு வந்தவுடனே மற்ற விஷயங்கள் சுலபமாகி விடுகின்றன. கஷ்டமெல்லாம், முடிவுக்கு வருவதில்தான் இருக்கிறது ; முடிவுக்கு வந்த பிறகு கஷ்டமெல்லாம் தீர்ந்துவிடுகிறது என்று கூடச் சொல்லலாம். மேலாகப் பார்க்கும் போது, முடிவு செய்வது சுலபம் ; ஆனால் அம்முடிவை நிறைவேற்ற ஆரம்பிக்கும்போது தான் கஷ்டமும் ஆரம்பிக்கிறது என்று சொல்லத் தோன்றும். இது சாமானிய வாதம். செய்யப்போகும் முடிவின் விளைவறிந்து செய்பவர்களுக்கு, இது பொருந்தாது. அவர்களுடைய

கஷ்டமெல்லாம் முடிவுக்கு முன்னர் தான், பின்னர் இல்லை. இது எப்படி என்று பார்ப்போம்.

அறவழியில் நடக்கத் தீர்மானித்தவனுக்குத் தானாக வழி வகுத்துக்கொள்ள வேண்டிய சிரமம் இல்லை. வழியெல்லாம் அவனுக்கு முன் சென்றோர் செப்பனிட்டு வைத்திருக்கிறார்கள். அதை அவர்கள் நடந்து கொண்டதிலிருந்தும் எழுதி வைத்த நூல்களிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். நூல்களில் ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால், தனது காலத்தில் வாழும் பெரியோர்களைக் கேட்டுத் தெளிவு பெறலாம். ஒவ்வொரு சமயத்துக்கும், ஒவ்வொரு சந்தர்ப்பத்துக்கும், அவன் தானே யோசித்து முடிவு செய்யவேண்டுமென்பதில்லை. அவனுக்காகப் பிறர் ஏற்கெனவே முடிவு செய்து வைத்திருக்கிறார்கள்; அல்லது செய்கிறார்கள். அவன் செய்யவேண்டியதெல்லாம் அதன்படி நடப்பதுதான். இதை மனத்தில் வைத்துக் கொண்டு ராமனுடைய வாழ்க்கையில் அவருக்காகப் பிறர் செய்த முடிவுகள் யாவை, அவர் தாமே எங்காவது ஏதாவது முடிவு செய்திருக்கிறாரா என்று பார்ப்போம்.

ராமனுடைய குழந்தைப் பருவத்தைப் பற்றி கவிகள் நமக்கு அதிகம் சொல்லவில்லை. குழந்தைப் பருவத்தின் கொஞ்சல்களையெல்லாம் அவர்கள் கிருஷ்ணனுக்கே கொடுத்து விட்டார்கள். விசுவாமித்திரர் தசரதனிடம் ராமனைக் கேட்கும்போது ராமன் பாலனாகவே தோன்றுகிறான். தசரதன் அனுப்ப, ராமனும் லக்ஷ்மணனும் விசுவாமித்திருடன் வேள்வியைக் காப்பதற்காகப் போகிறார்கள். தாடகை அட்டகாசம் பண்ணிக் கொண்டு வருகிறாள். அவள் அரக்கியாயினும் பெண்ணாயிற்றே, அவளை எப்படிக் கொல்வது என்று ராமன் தயங்குகிறான். உடனே விசுவாமித்திரர், 'தாடகையைப் பெண் என்று பாராதே, பாவ காரியம் செய்பவர் யாராயினும் அவர்களைக் கொல்வது பாவமில்லை, ஆகவே கொல்லு' என்று சொல்லுகிறார். ராமனும் அவ்வாறே அரக்கியை வதம் செய்கிறான். பெண்களைக் கொல்வது கூடாது என்பது ராமன் கற்றறிந்த தருமம். சாதாரணமாக ராமன் அந்த தருமத்தை மீறியிருக்கமாட்டான். இப்போது அதை மீறி நடந்தது எப்படி? பெண்ணாயிருந்தாலும் கொடிய இயல்புள்ள அரக்கியைக் கொல்வதில் தவறில்லை என்று ராமன் தானே சிந்தித்துப் பார்த்துத் தரும நிச்சயம் செய்யவில்லை. தந்தை தன்னை விசுவாமித்திருடன் அனுப்பியபொழுது, முனிவர் சொல்லைத் தட்டாதே, என்று சொன்னார். அப்போது, குலகுருவான வசிஷ்டரும் கூட இருந்தார். ஆகவே அவருக்கும் தந்தையின் கட்டளை உடன்பாடாயிற்று; அதாவது தந்தையின் கட்டளை குலகுருவின் கட்டளையுமாயிற்று. இப்போது விசுவாமித்திரர், ரிஷிசிரேஷ்டர், தனக்கு மந்திரங்களை உபதேசித்த

குரு, இவ்வாறு செய் என்று கட்டளை இடுகிறார். தனக்குப் பெரியோர்களான இம்மூவரும் சொல்வது எப்படித் தப்பாயிருக்க முடியும்? ஆகவே தாடகையைக் கொல்வதுதான் சரி. இவ்வாறுதான் ராமன் தாடகையைக் கொல்லும் முடிவுக்கு வந்திருக்கவேண்டும். அந்தக் காரியத்தின் நியாயா நியாயத்தைப் பார்த்து ராமன் அம்முடிவுக்கு வரவில்லை. அப்படி யாராவது பார்த்திருந்தால் ராமனுக்குக் கட்டளையிட்ட பெரியோர்கள் பார்த்திருக்கவேண்டும். அவர்கள் கட்டளையிட்டது ஒன்றே போதும், ராமன் அம்முடிவுக்கு வர.

சீதையைக் கலியாணம் செய்துகொள்வதும் இப்படியே. ஜனகருடைய யாகத்தைப் பார்க்கப் போகலாம் என்று விசுவாமித்திரர் சொல்ல அவருடன் போகிறார்கள் ராம லக்ஷ்மணர்கள். மிதிலையில் ஜனகருடைய சபையில் வில்லை ராமனுக்குக் காட்டும்படியாக விசுவாமித்திரர் ஜனகரிடம் சொல்லுகிறார். வில்லை வளைப்பவனுக்குத் தன் பெண் சீதையைக் கொடுப்பதென்று ஜனகர் முடிவு செய்திருப்பதும், ஆனால் அதுவரையில் அந்த வில்லை யாரும் வளைக்க முடியாமல் போனதும், ஜனகர் சொல்ல, விசுவாமித்திரரும் ராம லக்ஷ்மணர்களும் தெரிந்து கொள்ளுகிறார்கள் என்பது வாஸ்தவமே. ஆயினும், ராமன் சீதையை மணந்துகொள்ளும் நோக்கத்தோடு அந்த வில்லைப் பார்ப்பதாகவோ வளைப்பதாகவோ தெரியவில்லை. வில்லைக் கொண்டு வந்ததும், விசுவாமித்திரர், அதைப் பார்க்கும்படியாக ராமனிடம் சொல்லுகிறார். ராமனும் அதைப் பார்த்துவிட்டு அதைத் தொட்டு நாணேற்றலாமா என்று கேட்கிறார். விசுவாமித்திரரும் ஜனகரும் அதற்கு உத்தரவு கொடுக்கவே, ராமன் வில்லை வளைக்கிறார். வில்லும் ஒடிகிறது. இந்த வில்லொடிப்பும், குருவின் கட்டளையை நிறைவேற்றுகிற காரியமே ஒழிய வேறில்லை. பிறகு சீதையைக் கலியாணம் செய்துகொண்டது எப்படி என்றாலோ, அதுவும் பெரியோர்கள், குருக்கள், தந்தை ஆகியோருடைய முடிவை ஏற்று நடக்கும் காரியம்தான். ஜனகர் பெண்ணைக் கொடுக்கத் துடிக்கிறார்; விசுவாமித்திரர் அதை அங்கீகரிக்கிறார்; செய்தி அறிந்த தசரதர் ஆனந்தமாக ஆமோதிக்கிறார். முகூர்த்தம் நடந்தேறுகிறது. இதில் ராமனுடைய சொந்தத் தீர்மானம் எங்கே?

பிறகு இளவரசுப் பட்டத்தைத் துறந்து ராமன் காட்டுக்குச் செல்லுகிற முக்கியமான கட்டம். தந்தை சொல்லிவிட்டார்; சிற்றன்னையும் பணித்து விட்டாள்; ஆகவே அவர்களுக்குக் கீழ்ப்படிவதைத் தவிர வேறு என்ன செய்யக் கிடக்கிறது? அதைவிட மேலான தருமந்தான் உண்டா? இதற்கு முன்னால், கௌசல்யையின் கண்ணீரும், லக்ஷ்மணனின் கோபமும், பரதனின் வேண்டுகோளும், வனவாசத்தின் கஷ்டமும் வலியிழந்துவிடுகின்றன. காட்டுக்குப் போகவேண்டுமென்று ராமன் முடிவு செய்யவேண்டிய கேள்வியே எழவில்லை

தந்தையின் கட்டளைப்படி நடப்பதென்று எப்போதோ முடிவு செய்தாயிற்று. அதற்குப் பிறகு தந்தையின் சொற்படி முடிசூட்டிக் கொள்வதும், காட்டுக்குப் போவதும், இரண்டும் ஒன்றே. முன்னதில் சுகம் இருக்கிறது, பின்னதில் துக்கம்தானே இருக்கிறது என்கிற விவகாரத்துக்கே இடமில்லை. சுகமோ துக்கமோ, மானமோ அவமானமோ, பெருமையோ சிறுமையோ, இவை கணக்கிலேயே வரவில்லை. தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவதுதான் கணக்கு. முடிசூட்டிக்கொள்ள ஒப்புக்கொண்டதும், தந்தை சொன்னார் என்பதற்காகத்தானே! அதிலுள்ள நன்மையை உத்தேசித்தல்லவே! முடிசூடிக்கொள்வது, அதிலுள்ள நன்மையை உத்தேசித்தென்றால், காட்டுக்குப் போவதிலுள்ள கஷ்டத்தை உத்தேசித்து, மாட்டேன் என்று சொல்லலாம். அதுதான் இல்லையே. முன்னர் முடிசூட்டுவதென்று முடிவு செய்ததுபோலவே, இப்போது, காட்டுக்கு அனுப்புவதென்றும் தந்தை முடிவு செய்திருக்கிறார். இதில் ராமன் முடிவு செய்வதற்கு என்ன இருக்கிறது!

சீதையையும் லக்ஷ்மணனையும் தம்முடன் காட்டுக்கு அழைத்துப் போவதென்கிற அந்தக் காரியத்தைக்கூட, ராமன் முடிவு செய்யவில்லை. அவர்கள் அவருடன் போவதென்று முடிவு செய்துவிட்டார்கள். அந்த முடிவை ராமன் ஒப்புக்கொண்டார். வயதில் பெரியவராகையால் அவர்களுக்குக் கூடவர அனுமதி கொடுப்பதாகப் பாவனை. அவ்வளவுதான்.

காட்டில் ரிஷிகள் ராமனைச் சரணம் அடைகிறார்கள். அரக்கர்களால் தங்களுக்கு நேரும் துன்பத்தைச் சொல்லி அவர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றவேண்டுமென்று முறையிடுகிறார்கள். ராமனும் அவர்களுக்கு அபயம் அளிக்கிறார். அரக்கர்களை வதம் செய்வதாகக் கூறுகிறார். தமக்கு ஒரு கெடுதியும் செய்யாத அரக்கர்களைக் கொல்வதாகக் வாக்களித்தது சரியா என்று, சீதை ராமனைக் கேட்டதற்கு, சரணம் அடைந்தவர்களைக் காப்பாற்றுவதே தம்முடைய தருமம் என்று ராமன் சொல்லிவிடுகிறார். இங்கும் தவறு செய்யும் அரக்கர்களைத் தண்டிக்கவேண்டும் என்று ராமன் தாமாக முடிவு செய்யவில்லை. ரிஷிகளுக்கு அபயப் பிரதானம் செய்த காரணத்துக்காகவே ராட்சச வதம் நிகழ்கிறது. ராட்சச வதத்துக்காக அல்ல ராட்சச வதம்.

சுக்கிரீவனை நட்பாக்கிக் கொண்டது ஒரு முக்கிய நிகழ்ச்சி. ஆனால் அந்த முடிவும் ராமன் செய்ததல்ல. ராம லக்ஷ்மணர்களால் கொல்லப்பட்டுக் கொளுத்தப்பட்ட கபந்தன், சாபவிமோசனம் பெற்று, நன்றியறிவினால், சீதையை அடையும் வழி, சுக்கிரீவனைச் சிநேகம் செய்துகொள்வதே என்று ராமனுக்குக் கூறுகிறான். அதன்படியே ராமன் சுக்கிரீவனைச் சிநேகம் செய்துகொள்ளுகிறார். அந்த

சிநேக தருமத்துக்காகவே ராமன் வாலியைக் கொல்கிருர். பாவம் அதற்காக இன்றளவும் அழியாத ஒரு பழியையும் மூட்டை கட்டிக் கொண்டு விட்டார்! சுக்கிரீவன் தமக்கு நண்பன், அவனிடம், சுக துக்கத்தைப் பகிர்ந்துகொள்வதாகச் சொல்லியாயிற்று. வாலியைக் கொன்று மனைவியையும் நாட்டையும் மீட்டுத் தரவேண்டும் என்று அவன் பிரார்த்திக்கிருன். ஆகவே, வாலியை வதம் செய்வதைத் தவிர ராமனுக்கு வேறு வழியில்லை. இங்கும் வாலி வதத்துக்கு வாலியின் தீய நடத்தை காரணமாகாமல், சுக்கிரீவனுக்குச் செய்து கொடுத்த பிரதிக்ஞையே காரணமாகிறது.

இனி விபீஷண சரணுகதிக்கு வருவோம்.

விபீஷணன் தன் அண்ணனை விட்டு ராமனைத் தஞ்சம் அடைகிருன். அவனைச் சேர்த்துக்கொள்ளலாமா கூடாதா என்று, பெரிய மந்திராலோசனை நடக்கிறது. ராமன் இவ்விஷயமாக சுக்கிரீவனையும் பிறரையும் அபிப்பிராயம் கேட்கிருர். சுக்கிரீவன், விபீஷணனைச் சேர்த்துக்கொள்வது கூடவே கூடாது என்கிருன். 'அவன் பகைவனுடைய ஆள்; சமயமறிந்து நம்மை அழித்துவிடுவான்', என்று கூறுகிருன். அங்கதன், அவனுக்கு ஒரு காரியத்தைக் கொடுத்து அதில் அவனைப் பரீட்சித்துப் பார்த்து நல்லவனென்று கண்டால் சேர்த்துக் கொள்ளலாம், இல்லாவிட்டால் தள்ளிவிடலாம் என்கிருன். சபரன், தூதன் மூலமாக அவனைப் பரீட்சித்து முடிவு செய்யலாம் என்கிருன். ஜாம்பவான், அவன் வந்த சமயம் சரியல்ல, அதனுல் அவனை நம்ப முடியாது என்கிருன். மயிந்தன், அவனுடைய குணத்தை அவனுடன் தந்திரமாகப் பேசி அறியலாம் என்கிருன். அனுமான் ஒருவனே, விபீஷணனிடம் சந்தேகம் கொள்ளாமல் அவனைச் சேர்த்துக் கொள்ளலாம் என்று சொல்கிருன். ராமனுக்கும், மற்றவர்களுடைய முடிவு சரியில்லை, அனுமானுடைய முடிவே சரியென்று தோன்றுகிறது. அதற்குரிய காரணங்களையும், திரும்பத் திரும்பச் சந்தேகம் கொண்டு ஆட்சேபணை செய்த சுக்கிரீவனுக்கு, ராமன் எடுத்துச் சொல்கிருர். அந்தக் காரணங்களெல்லாம் இல்லாவிட்டாலும், சரண் அடைந்தவர்களைக் கைவிடலாகாது என்கிற தம்முடைய மூல தருமத்தை அனுசரித்து, விபீஷணனைக் கைவிடுவது ஒருநாளும் இல்லை என்று அடித்துப் பேசுகிருர். ராவணனே அபயம் என்று வந்தால் அடைக்கலம் கொடுப்பேன் என்று அறுதியிட்டுச் சொல்லுகிருர். ஆனுல் இந்த தருமத்துக்கு அவசியமில்லாமலே, வேறு காரணங்களாலும் அவன் சேர்த்துக்கொள்ளத் தக்கவன் என்பதே ராமனுடைய முடிவு. இந்த ஒரு சமயத்தில்தான் ராமன் தாமாக ஒரு முடிவுக்கு வருவதைப் பார்க்கிருேம். நல்ல வேளையாக ராமன் தாமாகப் பொறுப்பேற்றுக்கொண்டு செய்த இந்த ஒரு முடிவு, குறி தவருமல் எதிர்ப்பார்த்தபடி நடக்கவே, ராமன் தப்பினுர். இதுவே வேறு

விதமாக நடந்திருந்தால், எல்லாருமாகச் சேர்ந்து அவருக்கு அசட்டுப் பட்டம் கட்டியிருப்பார்கள்.

விபீஷண சரணாகதி, வைஷ்ணவர்களுக்கு வற்றாத ஊற்றுப் போன்றது. வைஷ்ணவ சித்தாந்தமே விபீஷண சரணாகதியைப் பற்றிக்கொண்டு சுற்றிவருவதாகும். அதில் அறிவையும் நெஞ்சையும் பாய்ச்சித் திளைக்காத வைஷ்ணவ ஆசாரியர்களும் உரைகாரரும் இல்லை என்று சொல்லலாம். இத்தகைய மூல மந்திரம் நம்முடைய கட்டுரைக்கும் விஷயம் உதவியிருக்கிறது. ராமன் தாமாக ஒரு முடிவும் செய்ததில்லை என்கிற முடிவுக்கு விலக்காக நிற்பதும், இந்த விபீஷண சரணாகதிதான்.

---



## புத்தரின் பொன்மொழிகள்

இவ்வுலகில் இருபுறமும் உள்ளதைச் சீர்தூக்கிப் பார்ப்பவனே துறவியாவான்.

புஷ்பத்தில் தேன் சேகரிக்கும் வண்டு, புஷ்பத்திற்குச் சேதம் இல்லாமலும், அதன் வர்ணத்திற்கோ வாசனைக்கோ பங்கம் இல்லாமலும், தேனை மட்டும் எடுத்துச் செல்கிறது. அதுபோல, ஞானி ஒருவன் தன் கிராமத்தில் வாழ்வானாக.

"என் குழந்தைகள்; என் பணம்" என்ற எண்ணத்தினால் முட்டாள் துக்கப்படுகிறான். அவனே அவனுக்குச் சொந்தமில்லை! குழந்தைகளும் பணமும் அவனுக்கு எப்படிச் சொந்தமாகும்!

உலகத்தோடு நான் சச்சரவிடவில்லை; உலகந்தான் என்னோடு சச்சரவிடுகிறது.

தீய எண்ணத்துடன் ஒருவன் பேசினாலும், செயலில் இறங்கினாலும், வண்டியை இழுக்கும் மாட்டின் காலைச் சக்கரம் பின்பற்றிச் செல்வதுபோல, அந்த மனிதனைத் துன்பம் பின்பற்றிச் செல்கிறது.

கண் விழித்திருப்பவனுக்கு, இரவு நீண்டது; களைத்திருப்பவனுக்கு வழி வெகு தூரம்; நல்லறத்தை அறியாத முட்டாள்களுக்கு ஸம்ஸாரத் தொடர் எல்லையற்றது.

எந்தக் காரியத்தைச் செய்தால் பின்னால் மனம் மகிழ்வுறுமோ, எதன் பலனை மனோ உற்சாகத்தோடு அனுபவிக்க முடியுமோ, அதுவே நற்செயலாகும்.

தாயையும் தந்தையையும் ஆதரித்தல்; மனைவியையும் குழந்தையையும் போற்றுதல்; அமைதியானதொரு வாழ்க்கை நடத்துதல்—இதுதான் மாபெரும் நற்பாக்கியம்

நன்றி யுணர்வுதான் நெருங்கிய உறவு.



அன்னத்தின் மென்னடையோ
ஆனந்தத் தாண்டவமோ
கன்னிகையின் புன்னகையோ
காதலியின் இன்மொழியோ
மின்னலதன் வெட்டொளியோ
மானினத்தின் கட்டழகோ
நின்னருமைப் பாடலினை
என்னென்று சொல்லிடுவேன் !



பெண்ணெழிலின் சித்திரமோ
பேரெழிலின் ஓவியமோ
கண்ணிறைந்த காட்சியிதோ
காணாத விந்தையிதோ
விண்ணகத்துத் தாரகையோ
வானகத்துத் தேன்மழையோ
வண்ணமிகு நின்கவிதை
என்னென்று சொல்லிடுவேன் !

[கவிஞர் ச. து. சு. யோகியாருக்கு, தில்லித் தமிழ்ச் சங்கம், இந்த ஆண்டு ஜனவரி மாதம் 28-ம் தேதியன்று, வரவேற்பு அளித்தபோது, 'சுந்தா' பாடிய பாடல் இது.]

# அருணகிரிநாதர்

"கானலோலா"



திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர், திருவண்ணாமலைக்கு அருகேயுள்ள முள்ளந்திரம் என்ற கிராமத்தில், ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்னால் பிறந்தார். பண்டிதர்களாயும் பாவலர்களாயும் விளங்கிய வமிசத்தைச் சேர்ந்தவர் அவர். அந்த வமிசத்துக் கவிகளுக்கு, திண்டிமக் கவிகள் என்று பெயர். ராஜநாத திண்டிமக் கவி என்பவர், அவர்களில் பிரபலமானவர். கி. பி. 1422-ஆம் ஆண்டு முதல் 49-ஆம் ஆண்டுவரை ஆட்சி செலுத்திய விஜயநகர மன்னர் பிரபுடப் பிரதாப தேவராயர் காலத்தில், அருணகிரிநாதர் வாழ்ந்திருந்தார் என்று, சரித்திர ஆராய்ச்சியாளர் ஒருவர் கூறுகிறார்.

சமஸ்கிருதத்திலும் தமிழிலும் ஒருங்கே தேர்ச்சி பெற்றிருந்தார் அருணகிரிநாதர். அவருடைய பாடல்கள் இதற்குச் சான்றாய் விளங்குகின்றன.

அவர் இளமைப் பருவத்தில் சிற்றின்பங்களில் ஈடுபட்டிருந்தார் என்றும், தமது அக்கால நிலை குறித்துப் பின்னர் அவர் பச்சாதாபப்பட்டார் என்றும் கதைகள் சொல்லி, அவருடைய பாடல்களிலிருந்து மேற்கோள் காட்டுகிறார்கள். இந்தக் கதைகளை என்னால் நம்ப முடியவில்லை. நம்முடைய பெரியோர்களைச் சுற்றி அபாண்டமான கட்டுக்கதைகள் புனைவது நம்மவரின் வழக்கமாகிவிட்டது. உத்தமர்களின் உத்தம குணங்களை உயர்த்திச் சொல்வதற்காக, அவர்கள் ஒரு காலத்தில் அதமர்களாய் இருந்தார்கள் என்பதாகப் பழித்துச் சொல்வது, கற்பனா சக்தியின் கோளாறே யன்றி வேறில்லை. ஒரு பாவனை நிலையிலிருந்து பாடிய பாடல்களை, மற்றவரை எச்சரிப்பதற்காக பாடிய பாடல்களை, பாடியவரின் அனுபவங்களாகக் கொள்வது விபரீதமாகும். அருணகிரிநாதர் நல்ல ஞானச் செல்வராகவே வாழ்ந்திருந்தார் என்றே நான் கருதுகிறேன்.

அருணகிரிநாதரை, அவர் காலத்து மக்களே வெகுவாகப் போற்றி, அவருடைய நல்லுரைகளைக் கேட்டுப் பயனடைந்தார்கள். மக்களுடன் மன்னர்களும் போற்றினார்கள். மன்னர் பிரபுட தேவரின் பெயரையும், கலிசை சேவகனரின் பெயரையும், திருப்புகழ்ப் பாக்களிலேயே, அருணகிரிநாதர் குறிப்பிட்டிருக்கிறார். பக்திச் செல்வராய் விளங்கிய அருணகிரிநாதர், பேரறிஞராயும் இருந்தார். இலக்கிய வாதம் ஒன்றில் வில்லிபுத்தூராரை வென்றது இதற்குச் சான்று. தென்னிந்தியத் திருத்தலங்கள் பலவற்றிற்கு அவர் சென்று, பக்தி ரஸம் சொட்டச் சொட்டப் பாடினார். அவருடைய யாத்திரா மார்க்கத்தை, வரலாற்றுக் கண்ணுடனும், மதப் பற்றுடனும், இலக்கிய நோக்குடனும் ஆராய்ந்தால், எவ்வளவோ பயன் அடையலாம்.

"வாக்கிற்கருணகிரி" என்ற பாராட்டுடன் துவங்கும் பாடலொன்று, அன்னாரின் சொல்லழகையும் நடைச் சிறப்பையும் எடுத்துச் சொல்கிறது. மக்களின் மொழியையே தமது பாவின் மொழியாகக் கொண்டார் அவர். தமிழையும் வடமொழியையும் கலந்து, வண்ண வண்ணச் சொற்கோவைகளை அவர் படைத்தார். தம்முடைய சந்தப்பாவில் தமது இதய கீதத்தையே பொழிந்தார். உதய சூரியனின் பொன்னொளியையும், மலர்களின் நறுமணத்தையும், இதயத்தின் விதவித உணர்ச்சிகளையும், ஒரு சில வரிகளிலேயே அவர் வரைந்து காட்டி விடுகிறார். சொல்லின் அழகிய ஒலிகளையெல்லாம் அடுக்கடுக்காய்க் கோத்து, ஆனந்தம் ஊட்டுகிறார். தமது ஆற்றலையெல்லாம், கவி நயங்களையெல்லாம், பக்தி ஊட்டுவதற்காகவே அவர் பயன்படுத்தி இருக்கிறார்.

அவருடைய இசைத் தேர்ச்சியும் வியக்கத்தக்கதாய் இருக்கிறது. இசையைப்பற்றி அவர் அங்கங்கே சொல்லியுள்ள குறிப்புகள், இசை வல்லார் கூறும் நுட்பங்களாய் இருக்கின்றன. எத்தனை விதமான இசை வடிவங்களையும் வண்ணங்களையும் அவர் ஆக்கித் தந்திருக்கிறார்! மீராபாய், புரந்தரதாஸர், கனகதாஸர், தியாகராஜர் ஆகியோருக்கு ஒப்பானவர் அருணகிரிநாதர். அவர்களைப்போலவே இவரும் பக்தியிலே பெருஞ் செல்வர்; இசையிலே அருஞ் செல்வர்.

பதினாறாயிரம் திருப்புகழ் பாடல்களை அருணகிரிநாதர் இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. இவற்றில் சுமார் ஆயிரம் பாடல்கள்தான் இப்போது நிலைத்திருக்கின்றன. கந்தரநுபூதியும் கந்தரலங்காரமும் நம் அதிர்ஷ்டவசத்தால் நடக்குக் கிடைத்துள்ளன.

தமது பாமாலைகளை, தமது இஷ்ட தெய்வமான சுப்பிரமணிய சுவாமிக்கே அவர் சூட்டியபோதிலும், எல்லாத் தெய்வங்களையுமே அவர் பக்தியுடன் போற்றினார். ஹிந்து மதத்தில் காணும் வேற்றுமைகளையெல்லாம் விலக்கி, ஓர் ஐக்கியப்பாட்டைத் தோற்றுவிக்க

அவருடைய பாவன்மை பயன்பட்டது. சிவதாண்டவத்தையும் கந்தன் கருணையையும் பாடிப் போற்றியது போலவே, ராமனின் மேன்மையையும் கண்ணனின் லீலையையும் அவர் புகழ் கமழப் பாடினார். வேதாந்த நூல்களில் அவருக்கு இருந்த புலமையை அவருடைய பாடல்களிலே காணலாம். அத்வைத தத்துவத்தை விளக்கும் அவருடைய பாடல்கள், உபநிஷத்தின் உயர்வுக்கு இணையாக இருக்கின்றன.

> "பத்தற்பிர தத்தைக் கடவிய
> பச்சைப்புயல் மெச்சித் தருபொருள்"

என்பன போன்ற வாக்கியங்கள், பகவத் கீதையின்பால் அவருக்கு இருந்த ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

சாதாரண மக்கள் வேதாந்தத்தின் முடிவுகளைப் புரிந்துகொள்வது கடினம் என்பதை, மற்ற சமயப் பாவலர்கள் போலவே அருணகிரிநாதரும் உணர்ந்து, பக்தி மார்க்கமே ஏற்ற மார்க்கமென போதித்தார்.

> "வேலே விளங்கு கையான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
> மாலே கொள விங்ஙன் காண்பதல்லான் மன வாக்குச் செய
> லாலே யடைதற் கரிதா யருவுருவாகியொன்று
> போலே யிருக்கும் பொருளை யெவ்வாறு புகல்வதுவே."

திருப்புகழ் பாடியவரின் புகழுக்கு, தாயுமானவரின் கண்ணி ஒன்று அரியதொரு காணிக்கையாய் அமைந்துளது:

> "கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன
> எந்தையருள் நாடியிருக்கும் நாளெந்நாளோ."



# கவிதையாமே கவிதை!

"சிட்டி"

**ரஸிகன் :** என்னப்பா விபரீதம்! எங்குமே கேட்டதில்லை,
தன்னை மறந்து ரவி, தாள் தாளாய் எழுதுகிறான்;
சொன்னாலும் கேட்பதில்லை சொல்லடுக்கு முனகுகிறான்.

**விமர்சகன்:** இருக்கட்டும், ஆனாலும் எனக்கென்ன சலுகையதில்?

**ரஸி :** கிறுக்கனிவன் கவிதைகளைக் கேட்டாளம்...

**விம :** பெண்மகளா?
ஆயின் கவிதை வெறி அவளுடைய தூண்டுதலா?
போயும் போய், நீ இதனைப் புதுமையெனப் புகல்கின்றாய்;
இயல்புதான் அறியாயோ? இந்த நிலை வந்திட்டால்
கயல் எல்லாம் கண்ணாகும்; கார் முகிலும் குழலாகும்;
மயிலுக்கும் ஒப்பிடுவார் மங்கைதனை. அவள்குரலை
குயிலுக்குக் கொடுத்திடுவார். காதலப்பா, இதுதான்
கவிதையின் உயிர் மூச்சு; கருத்துக்குக் கடையாணி.

**ரஸி :** செவிசாய்த்துக்கேள்சிறிது; செப்புகின்றேன் விஷயத்தை
காதல் நோய் ரவிக்குக் காணவில்லை இன்னும். இந்த
ராதாவை வழக்கம்போல் ரயிலில்தான் சந்தித்தான்.

சஞ்சிகை வாங்கி அவன் சரியாகப் பார்க்குமுன்னே
வஞ்சியவள் கேட்டாள் ; வாங்கிப் படித்தாளாம் ;
நெஞ்சள்ளும் பாட்டொன்றை நேர்த்தியெனச்
சொன்னுளாம்.
பிஞ்சுக்கவிஞன் ரவி, பிழை முழுதும் தனதென்ருன்.

விம : காதல் அக்கவிதையிலே கரைபுரண்டு பாய்ந்திருக்கும் ;
மீதி அவள் நெஞ்சத்தை மேலாகத் தொட்டிருக்கும்.

ரஸி : நனிபேஷ் ! நீஎளிதாக நவில்வதெல்லாம் சரிதான்,
நான் அறிவேன் ரவிநோக்கம். நாரியவள் துணையல்ல ;
தேன்வழியும் தமிழினிலே தீங்கவிதை புனைவதுதான்.

விம : புனையட்டும் பாடட்டும், போடாகப் போடட்டும்,
நினைவினிலே அவள்தானே நின்றிருந்து பேசிடுவாள்.

ரஸி : எப்படியோ போகட்டும் எனக்கெனமோ கவலைதான்.
இப்படியே அவன்கவிதை எழுதும்படி விட்டால்
தப்பவழியில்லை : நம் தமிழுக்கும் ஆபத்து.

விம : செப்புகிருய் ! கவிதைச் சிறப்பினை நீ அறிந்ததிலை.
மானிடன் முதலில் தோன்றி, மரக்கிளை வாசம்செய்து
கானிடைத்திரிந்தபோது கருத்தழியாதிருந்து வந்தான்.
பெண் வந்தாள் ; பார்த்து நின்ருன்.
பேசஒருமொழிசெய்து,
கண்கண்ட உண்மைக்குக்கருத்தாலேகலர்கொடுத்தான்;
தவிதவித்துத் தத்தளித்துத் தற்குறிப்பில் தள்ளாடி
கவிதையெனக் குழம்பியதன் கற்பனைக்குப்
பெயரிட்டான்.
இயல்புதான் ; நீ என்ன இதற்காக வருந்துகிருய் !

ரஸி : பயல் விஷயம் பிடிக்கவில்லை; பார்த்துவிட்டு வருகின்றேன்.

(2)

கீதா : என்னடி ராதா, உன் நண்பர் ஒருகவியாமே!
என்னமோ பாட்டெல்லால் எழுதுவார் என்கின்ருர்.
போற்றிப் புகழ்கின்ருய், புத்துயிர் நீ அளிக்கின்ருய் !
சாற்றும் கவியெல்லாம் சார்ந்ததுன் ஊக்கமென,
தோற்றும் வகையிலவர் தொண்டாற்றி வருகின்ருர்.

ராதா : இல்லையது வெறும்பேச்சு : என்ன செய்வேன் நானிந்த
தொல்லைக்கு ? நீயேனும் சொல்லுவதை சரியாய்க் கேள்.
ஏற்கெனவே புகழ்பெற்ற இளங்கவிஞர் ரவியை நான்
பார்க்குமுன்னே அவர்க்குண்டு பாட்டுடனே
பேர்எல்லாம்.

கீதா : சொல்லுவதைக்கேள் ராதா, சிறுகவிதை புனைரவியைக்
கொல்லாதே; வீண் ஆசை கொழுந்துவிடப் பேணுதே.

ராதா : என்னடி கீதா நீ இல்லாத பொய்யெல்லாம்
கன்னு பின்னுவென்று கண்டபடி பேசுகிருய் ?

கீதா : ஓகோ நான் சொல்வதிலே ஒன்றுமே உண்மையில்லை ?
நீ கோலும் அடியினிலே நின்றுவளர் ரவிகாதல்—

ராதா : நிறுத்து கீதா நீ சொல்லும்படியல்ல ;
கருத்தறியாது கதையொன்று கட்டாதே !

கீதா : வறுத்திடும் ; கொடியது உண்மை, இயல்புதான் ;
வெறுத்தலேன் ரவியை வெடுக்கெனப் பேசி ?

ராதா : பொறுத்துக்கேள் சிறிது புகல்வதை நீயும்,
வருத்தம் ஒன்றுமிலை வளர்கவி ரவிமேல்—
என்மீது காதலினுல் எழுச்சியுற்றுப் பாடுவதாய்
புன் மனத்தார் சொல்லும் பொய்தனையே
வெறுக்கின்றேன்.

கீதா : பின் அவர் ஏன் பொழுதெல்லாம் பிதற்றிக்கொண்டே
உன்னையே சுற்றிவந்து உன்மத்தமாகின்ருர் ?
கன்னிப்பெண் நீயுண்டு ; கவிதைக்குச் சோறுண்டு !
வன்னப் புதுமையை உன் வதனத்தில் காண்பதிலே
அறிவு மயக்கமுற, ஆற்றலொரு போதையுற,
செறிவானக் கருத்தெல்லாம் சேர்ந்தவரை உந்த
கவியாகப் பேத்துவதில் கஷ்டமென்ன ? சொல்லிடுவாய்!
ரவிபாவம்! ஏன் அவரை ராதா நீ வாட்டுகிருய்?

ராதா : விபரீதமாயிருக்கு நீ இப்போ விளம்புவது :
அபராதி நான்தானு? அடபாவமே, அந்தோ !
இந்தநிலை அவர் எய்தி ஏங்குவது மெய்யென்ருல்,
எந்தன்கதி என்னுகும்? ஏளனத்திற்காளாவேன்.

கீதா : ஏனம்மா பொய்க்கவலை? எழிற் கவிஞன் துணையாக,
வானம்பாடிக்கான வண்ணமுறு பேடையென.........

ராதா : ஐயகோ ! என்செய்வேன் அவமானமாயிருக்கே!
தையலாய்ப் பிறந்துவிடின் தனி அறிவு கிடையாதா ?
கவிதை நயம் அறியக் காதல் ஒரு கண்டிஷனு ?
அவதியிது போதுமடி! அநியாயப் பொருள் காணல்!

கீதா : இதுவென்ன விந்தையடி இன்று நீ சொல்லுவது,
மதுவுண்ட வண்டுதனை மாய்க்க வழி பார்க்கின்ருய்.
கவிதைக் களஞ்சியத்தைக் கதவிட்டுப் பூட்டுகிருய் !
ரவி இனிமேல் அழகுதனை ரஸித்தெழுத முடியாதே !

ராதா : போகட்டும் கவியெல்லாம் போக்கற்று ; கவலையில்லை.
வேகட்டும் எழில்எல்லாம் வெண்கலப்பானையிலே !
அறிவாலே கவிதையினை அறிவதற்கு என் உள்ளம்
பறிகொடுக்கும் வெள்ளைப் பைத்தியம் நானல்ல.

கீதா : இருக்கட்டும். ஆனல் நீ என்செய்வாய் இனிமேலே ?
உருக்கமாய் ஒருகவிதை உன் நண்பர் ரவி எழுதி
சுருக்கவே கொண்டுவந்தால் சும்மா இருப்பாயோ ?
வெறுக்கவும் அவரை விரட்டவும் உனக்காற்றல்
இருக்குமோ பேதாய் ?

ராதா : என்செய்வேன் கீதா
இன்றவர் வரும் நேரம் என்னகவி கொணர்வாரோ ?
நன்றெனவே கூறிவிட்டால்.........

கீதா : நற்காதல் கொழுந்துவிடும் ;
தீதெனக் கூறி அவர் தீங்கவிதை தள்ளிவிட்டு
வேதனை தோன்றும் வண்ணம்
வெடுக்கெனப்பேசுவையோ ?

ராதா : வேறுவழி இல்லையென்ருல் வெறுத்துத் தானுவேண்டும்.
மீறி அவர் தொடர்ந்து வந்தால் .........

கீதா : மிகையாகப் பிழைகண்டு
கவிதை உணர்ச்சிதன்னைக் கணக்கிட்டு மதிப்பிடுவாய்.
நவிலும் சொற்களிலே நயமில்லை எனச்சொல்லு ;
உவமை உருவெல்லாம் உண்மையிலே நடப்பதில்லை,
சவமே தவத்திற்குச் சரியான எதுகையென,
இப்படியே பலவிதமாய் இகழ்ச்சியுறப் பேசிவிடு.
தப்பெனவே வார்த்தைகளைத் தயங்காமல் சொல்லிவிடு.
காதல் நோய்கண்டதிலே கவிதை உணர்வெல்லாம்
சாதல் நிலையடையும் சர்ந்தர்ப்பம் கண்டிடுவாய் !

ராதா : கடுமைப்பணி யொன்றைக் கற்றெனக்குக்
கொடுத்திட்டாய்
சிடுசிடுவெனப் பேசிச் சீறிவிழும் நடிப்பெல்லாம்
அவர் வந்து கவிபாடும் அருங்கணத்தில் மறந்திட்டால் ?

கீதா : கவர்ந்திடுவாய் அவர்கருத்தை, காதல் தீ வளரும்!

ராதா : அம்மம்ம அது வேண்டாம் ; அரும்பாடுபட்டேனும்
செம்மைக்கருத்துக்குச் செவிசாய்க்க மறுக்கின்றேன்.

(3)

ராதா : வாருங்கள் இன்றென்ன வாடிய முகத்தோற்றம்?
சேரின்மேல் அமருங்கள் ; சிற்றுண்டி கொணர்கின்றேன்.

ரவி : வேண்டாம். வேண்டுகிறேன், விருப்பமில்லை. வீணுகும்.
நீண்ட தொரு கவிபுனைய நித்தம் முயல்கின்றேன்.
காண்டம், சருக்கமெல்லாம் கணக்காக வகுத்திட்டேன் ;
தூண்டுதலுக்குமுன் பேச்சு துணையாக
நான் கொண்டேன் ;
ஆனாலும் என்செய்வேன்! அசையோடு சீர்அமைத்தும்,
மோனை வருகுதில்லை ; மோனமே தோன்றுதம்மா.

ராதா : உங்களுக்கும் முடியாத தொன்றுண்டோ! இதுவென்ன?
திங்கள் முகப்பினிலே தென்படுமோர் களங்கத்தால்,
மங்கிடுமோ நிலவொளியும்? மனந்தளர வொண்ணுது.

ரவி : இங்குவரும் போதெல்லாம் எண்ணரிய கற்பனைகள்,
சிந்தைக்கு மெட்டாத சிறப்பான உவமைகள்,
சந்தை இரைச்சலென சலிசாகத் தோன்றிவிடும்.
அணியாகும் அவையெல்லாம் அலங்காரக் கவிதையிலே
மணியாகப் பதிக்கவும் நான் மாபாடுபட்டு விட்டேன்.

ராதா : பிறிதென்ன மனக்கவலை? பெரியதொரு காவியத்தை
இறுதியில் எழுதிவிட்டு எங்கனும் புகழடைவீர்.

ரவி : எழுதுவது நானல்ல; என் மனத்துக்கற்பனைகள்
முழுதும் உன் ஒளிசிதறும் முகத்தோற்றம்
தரும் விளக்கம்!
எழில்என்ற சொல்லுக்கு எங்குபொருள் உண்டென்றால்,
பொழில்தந்த பூப்போல புன்முறுவல் புரியும் உன்
முகமென்ற பிறைமதியில்! முகில்போன்ற குழல்தனிலே!
இகமென்னும் இவ்வுலகில், இதை மீறும் அழகில்லை!

ராதா : பாட்டுப் புனைவதிலே, பரிகாசம் செய்வதிலே,
காட்டுப்புதர்களிலும் கலையழகு காண்பதிலே,
கவிஞர்கள் வல்லுநர்தாம். கற்பனைப் பேச்சுக்கு
செவிகொடுத்து நம்புவது, சிரிப்புக்கு இடமாகும்.

ரவி : உள்ளத்து ஆழத்தில் ஊற்றெடுத்த உணர்ச்சியை நீ
கள்ளத்து நடிப்பென்று கருதுவது சரியல்ல.
வான் முகட்டின் விளிம்பினிலே,
வண்ணமுறும் வில்வளைத்த
நான்முகனும் தன் தொழிலை நலமுறவே செய்தற்கு,
நாமகளாம் அறிவுருவாம் நாரியவள் துணைகொண்டான்.
ஊமைகளும் பேசாரோ உன்னெதிரில் வந்துவிட்டால்!
அன்றுன்னைக் கண்டமுதல் அடைந்துவிட்டேன்
புத்துணர்ச்சி.
குன்றன்ன உன்னருமைக் குணமெல்லாம்
கண்டுகொண்டேன்.
நின்றாலும் உன் நினைவு ; நெடுவழியே நடந்தெங்கு
சென்றாலும் உன் நினைவு : சிந்தைக்குள் வேறில்லை.
அன்றில் பறவைதன் அல்லலினை அறிகின்றேன் ;
என்றுன்னைப் பிரிந்தாலும் ஏக்கம் தவிர்த்திடுவாய்.
எதிரே நீ இருந்தக்கால் எவர்க்குமே புரியாத
புதிரேபோல் விளங்கிப் புதுமைகள் தோற்றுவிப்பாய்.

ராதா : குதிர் என்ற எதுகைக்குக் கொண்டுசெலப் பார்க்கின்றீர்!
எதிருக்கு, வேறு மொழி எங்குமினிக் கிடையாது.
குன்றெனவே எனை நோக்கிக் குறைவாகப் பாடிவிட்டீர்.
நன்று, நன்று! நீர் சொல்லும் நயமான வார்த்தைகள்!

ரவி : ஈதென்ன விந்தையம்மா இப்படி நீபேசுவது ? என்
மீதென்ன கோபம்? மெல்லியளே, சொல்லிடுவாய்.
இதயத்துக்கதவங்கள் இன்றுநான் திறந்திட்டேன் ;
பதைபட்ட உணர்ச்சியெலாம் பொங்கி
வழிந்தோடுவதை
பார்த்துநீ இவ்விதமாய்ப் பகர்வதும்
ஒருவிதத்தில் நேர்த்திதான்.

ராதா : இல்லை; நேரான பொருள் கொண்டு,
உங்கள் கவிச்சொல்லை உரையிட்டுக் காண்பித்தேன்.
செங்கற்குவியலிலே செம்மைதனைக் காணுவது,
செப்பிடுவித்தையல்ல; சிற்றறிவின் சாதனைதான்.

ரவி : இப்படி நீ பேசுவதை இன்றுதான் கேட்கின்றேன் ;
எப்படி உன் மனமென்னை இகழத்துணிந்ததுவோ ?
தப்புநான் செய்திருந்தால் தயவு நீ செய்திடுவாய்.

ராதா : தப்பில்லை, தயவில்லை, தங்கள் கவிகளிலே
உப்பில்லை; உயிரில்லை; உணர்ச்சிப் பெருக்குமட்டும்

உருவான கவிதையாய் ஒருநாளமாகாது.
கருவான நொடிதனிலே கண்டதில்லை குழவிதனை.

ரவி : அற்புதமாய்ப் பேசுகிறாய் ; ஆனந்தமடைகின்றேன் ;
கற்பனைக்கு நீபோடும் கடிவாளம் உயர்ந்ததுதான்.
நீசென்ற இடமெல்லாம் நிகரற்ற அழகடையும்;
மாசென்ற மருவங்கே மருந்துக்கும் இருக்காது.

ராதா : அடடா, அழகுதான்! அருமையான சித்திரம்!
படபடக்கும் வெயிலிலே, பாலையெனும் மரமற்ற
சாலையிலே நான் நடக்கும்

ரவி : சமயமாய் இருந்தாலும்
சோலைஎனஅதுமிளிரும்.சொல்கின்றேன்,கேட்டிடுவாய்!
தென்றல் தவழ்ந்தாடும் அங்கே; தேன்பருகும் அளியும்
இன்றலர்ந்த புதுமலரில் இசையுடனே அமரும்.
கிளையமர்ந்து கொஞ்சுமங்கே கிள்ளைபலவிதமாய்;
குளிர்தருவின் நிழல்தனிலே குயிலமர்ந்துபாடும்.

ராதா : அந்தோ!மீண்டும் கவிதையா? அதிலும் இந்தப்
பேத்தலா?
சிந்தை கலங்கி மனம் சீர் குலைந்துபோயிற்று?
சொந்தக் கற்பனையும் சுட்டெரிக்கப்பட்டதுவோ?
வந்ததொருவேளை நலம் வாய்க்காத வக்கிரமா ?

ரவி : விந்தையிது; உன்மனத்தில் விஷமிட்டு விட்டார்கள்.
முந்தியெலாம் என்கவிதை முற்றிலும் புகழ்ந்திடுவாய்!

ராதா : நற்கவிதை பாடுங்கால், நாலுபேர் போற்றிடுவார்.
சொற்குவியல் கவிதையெனும் சூழ்ச்சியினை ஒப்புவரோ?

ரவி : உன்னைப் புகழ்ந்திட்ட உரிமைதனை விரும்பலையோ?
மன்னிக்கக் கோருகிறேன். மாதரசி ! மறுமுறைகேள்.

ராதா : வேண்டாம் விளையாட்டு, வினையாக முடிந்துவிடும் !
தூண்டுவது நானல்ல; துணியுமுன் எண்ணுங்கள்.

ரவி : புரியாது தவிக்கின்றேன் ; புதிதான உன்பான்மை
தெரியாது பேசிவிட்டேன்; தேன் மொழியில்
சொல்லிடுவாய்.
சரியான கருத்துக்கள், சாகாத கற்பனைகள்,
அரிய தொரு காவியத்தில் அழகாக நான்பதித்து,
உனையே நாயகியாய் உருவாக்கி, உன் தன்எழில்
தனையே ஒளிதருமோர் தாரகை எனக்கொண்டேன்.

உன்னாலே சூழ்நிலையும் உயிர்பெறுமோர் உணர்ச்சியினை
சொன்னதுமே ஏனிந்த சோர்வுனக்கு, சிற்றிடையாய்!

ராதா : போதும் பிதற்றல்! ஒரு பொழுதேனும் நிம்மதியாய்,
பேதலித்த உங்கள் மனப் பேத்தலுக்கு, ஓய்விலையா?
தென்றல் தவழ்ந்திட்டால் தேனீக்கள் கொட்டிவிடும்!
இன்றேது புஷ்பங்கள், இருப்பதெல்லாம் காகிதத்தில்.
கிளைக்கெதுகை குளிர் என்று கிறுக்குவது கற்பனையா?
தலையடிகள் தடுமாறித் தள்ளாடி நடைபோட
கொஞ்சுவது கிளைதனிலே, குரங்குதான் கவியரசே!
எஞ்சியிருப்பதெல்லாம் ஏட்டுச்சுரைக்காய்தான்.

ரவி : மதியிழந்தேன், கவிபெழுதி மண்ணாகிப்போ
யொழிந்தேன்!
விதிகொடிது, யாப்பினிலே விதிகொடிது!
விட்டொழித்தேன்!
விசனம் மேலிட்டேன், வீணாகவே நொந்தேன்!
வசனமே இனி எனது வாழ்க்கையின் குறிக்கோளாம்!

(3)

ரவி : பரிதாபம், படுமோசம்; பாவலன் ரவி துயரம்
பெரிதான கதையெல்லாம் தெரியாதா உன்றனக்கு?

விம : தெரிவானேன்? முன்னமேயே தெளிவான போக்கன்றோ!
சரிவான பாதைசென்றால், சறுக்குவது சகஜம்தான்.

ரவி : ரவியின் கற்பனைக்கு ரகரகமாய் மெருகளித்து
கவிதை புனைவதற்கு காரணமாயிருந்த
கல்லூரிப் பெண்ணான கட்டழகி ராதாவே
சொல்லூற்றுக்குயிரான சுனையாக இருந்தாளே?

விம : வல்லூறும் பறவைதான்; வாழ்க்கைப் போராட்டத்தில்
கொல்லவரும் குணமுண்டு. குருவிக்கு இடமுண்டோ?

ரவி : அநியாயம்! அநியாயம்! ஆனாலும் தப்பில்லை.
இனியேனும் ரவிமனதில் இவ்வுண்மை தோன்றட்டும்.

விம : அந்தோ! நோக்கிடுவாய்; அவன்போல இருக்கிறதே!
கையில் என்ன ரவி கடுதாசி கொண்டுள்ளாய்?
கவிதைக்குறிப்புடைய கற்பனையின் மணித்திரட்டோ?

ரவி : கவிதையில்லை மண்ணுமில்லை
கற்பனையென்றொன்றுமில்லை;
அவதியே மீந்ததப்பா, அழகில்லை வாழ்க்கையிலே.

ரவி : அவளென்ன சொல்லிவிட்டாள் அப்படி நீமனம்நோக?
ரவி : அவலச் சொல் பலசொல்லி அவமானம்செய்துவிட்டாள்.
ரவி : உன்னருமைக் கவிகேட்டும் உளம் துணிந்து
சொன்னளா?

ரவி : என் உவமை எதுகையெலாம் ஏளனமாய்ப்
பேசிவிட்டாள்;

கற்பனைக்கருக்கலிலே கங்குல் கவிழ்ந்ததடா!
நிற்பதுவும் நடப்பதுவும் நிலையற்ற மாயமடா!

விம : கற்பனை கைக்கொண்டு கவி புனையும் ரவிசிறுவ,
சொற்பமாம் சிற்றறிவை சோதித்த பயனிதுகேள்;
மாங்காயில் தேன்புளியும், மற்றுமொரு பூவகையும்,
பாங்காகச் சிரமைத்து பாவினங்கள் பாடிவைத்தால்,
செய்யுள் எனும் முறையில் சிலர் பார்க்க வழியுண்டு;
கையில் பணங்கிடைக்கும்; கவியென்ற பழி ஒழியும்.

ரவி : இனிமேல் நீ எழுதும் இயற்கை வாக்கியங்கள்
தனியாகப் பிரித்தாலும் தப்பர்த்தம் வாராது.
இதுவென்ன கட்டுரையா, இல்லையொரு கடிதந்தானோ?

விம : புதுமுறையில் கண்டபெரும்பொதுவான உண்மைகளை
உறுதியுடன் உருவாக்கி உள்ளத்தைத் தெளிவாக்கும்
இறுதிக் கவிதையடா! இழந்தபெரும் செல்வமடா!
சொல்கின்றேன் செவி மடுப்பாய்!

உளமதிலே உவகைவர
உதித்திடுமோர் உளறல்,
குளமதிலே தவளையென
குதித்து வரும் குளறல்;

கலையெனவும் கருத்தெனவும்
தலைமறைவாய்த் திரியும்
கொலையிதுவே கருத்தெனுமோர்
குப்பைதனைக் கிளறல்.

மொழிவளர வழியிதுதான்
விழி, எழு, நீ தமிழா!
பழி வருமுன் பாவினங்கள்
எழுதியழு முழுதும்!

செல்கின்றேன் செலவிடுவாய்.

ரவி : விஷயம் முற்றியொரு விபரீதமாயிற்று:
குஷியாகத் திரிந்தபயல் குட்டிச்சுவரானான்.

விம : கோணல் சிரமைத்து கும்மாளம் போட்டிருந்தான்;
காணல் ஒரு கஷ்டம்தான், கவிதை நாடகம்தானே!

# யானை வேட்டை



மலையாளத்தில் எழுதியவர் :
ஷியாமலாலயம் கிருஷ்ண நாயர்.

தமிழில் ஆக்கியவர் :
தி. ர. பஞ்சாபகேசன்.

பிரிட்டிஷ் மகுடத்தின் தலையாய மாணிக்கம் என்று புகழுடன் ஒளிர்ந்த அந்த நாட்டைப் பற்றி உங்கள் எல்லோருக்கும் தெரியும். அதன் மக்கள் வேதாந்திகள்; அறிவில் பெரியவர்கள்; துறவில் சிறந்தவர்கள். அவர்களது பெண்மணிகளோ கற்புக்கரசிகள். அந்தக் கற்பிற் சிறந்த காரிகைகள் காலால் உதைத்தால், பட்ட மரங்கள் தழைத்துப் பூக்கும்.

அந்தப் புண்ணிய பூமியிலே, பெரிதும் சிறிதுமாக, பல சமஸ்தானங்கள் இருந்தன. அந்த சமஸ்தானங்களைப் பெரியவர்களும் சிறியவர்களுமாக பல மன்னர்கள் ஆண்டார்கள்- நவாபுகளும், நிஜாம்களும், மஹாராஜாக்களும், ராணுக்களும், ஷம்ஷேர் ஜங்குகளும், ஆல்ஷேர் டங்குகளும், அங்கங்கே செங்கோல் ஓச்சி வந்தார்கள். எல்லோரும் சூரியன் வழியிலும் சந்திரன் வழியிலும் உதித்தவர்கள்தான். ஆனால் உரிமைகளிலும் மரியாதைகளிலும் மட்டும், பாவம், பல வித்தியாசங்கள் இருந்தன. சிலருக்கு நாற்பத்தொரு குண்டு மரியாதை; சிலருக்கு நாலே குண்டுதான். சிலர் பேப்பர் நோட்டுப் போடலாம்; சிலர் வெள்ளியில் அரை ரூபாய் அடிக்கலாம்; மற்றும் சிலர், அந்தோ, நிக்கலில் கால் ரூபாய்க் காசு அடிப்பதுடன் திருப்திப் படவேண்டும். இன்னும் ஏராளமான பலர்—அவர்களும் நாடாளும் மன்னர்கள்தான்—பினல் கோட் என்னும் அபத்தமான ஒரு சட்டம் இருந்து வந்ததால், சல்லிக் காசு கூட அடிக்க முடியாது. ஆனால் எல்லோரும் அதிவீர பராக்கிரமசாலிகள். எல்லோரிடமும் சின்ன காலாட் படைகளும், அதைவிடச் சின்னக் குதிரைப் படைகளும் இருந்தன. பல மன்னர்கள் வடமொழியில் வல்லுனர்கள்; பலர் நாட்டு வைத்யத்தில் ஏட்டுப் பண்டிதர்கள். கலைகளிலோ, சொல்லவே வேண்டாம். இந்தத் துறையில் அவர்கள் ஆற்றிவந்த பணியின் சிறப்பை, இன்றும் பத்திரிகைகள், ஏக்கத்துடன் எழுதி வருகின்றன.

இந்த மன்னர்களுக்கெல்லாம் மன்னராக, வெள்ளைத் தோல் படைத்த ஒருவர் – வைஸ்ராய் என்னும் பெயருடையார் உட்கார்ந்திருந்தார். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் இறைவர் அவர். ஒரு நாளுக்கு எட்டு மணிக்கு மேல் வேலை செய்வார். வேட்டையாடுவதும், டான்ஸ் ஆடுவதும், விருந்து வைப்பதும், விருந்துக்குப் போவதும், திறப்பு விழாக்களும் மூடுவிழாக்களும் நடத்துவதும், சட்டசபைகளை ஆரம்பித்துவைப்பதும் முடித்து வைப்பதும், ராஜாக்களைப் பட்டத்தில் ஏற்றுவதும் பென்ஷன் கொடுத்து அனுப்புவதும், சமஸ்தான பொக்கிஷங்களைச் குறையாடுவதும், தமது சொந்தப் பொருட்காட்சிகளுக்காக அரும் கலைப் பொருள்களைச் சேகரிப்பதும் என்று, அவருக்கு நாள் தோறும் அத்தனை வேலைகள் இருந்தன.

ஒரு நாள் ஒரு குட்டி சமஸ்தானத்தின் ராஜா, தமது பெரிய அந்தப்

புரத்தில், ஒரு ராணியுடன். குலவிக் கொண்டிருந்தபோது, யுவராஜாவானவர், ரொம்ப முக்கியமானதொரு சேதியோடு உள்ளே ஓடிவந்தார். வைஸ்ராய் இன்னும் ஒரு வாரத்துக்குள் சமஸ்தானத்துக்கு விஜயம் செய்கிறார் என்று அவர் தெரிவித்தார். ஒரு முழு நிமிஷம் ராஜாவுக்கு மூச்சு நின்றே போயிற்று. அவரது மாட்சிமை தங்கிய உதடுகள் துடித்தன. விலை மதிப்பற்ற மோதிரங்கள் பொதிந்த ராஜ விரல்கள் நடுங்கின. வைஸ்ராய் முதல் தடவையாக அவருடைய சமஸ்தானத்துக்கு வருகிறார்!

எனினும், தம்மை சீக்கிரமே சமாளித்துக் கொண்டார் ராஜா. நல்ல வேளை!யுத்தம் தான் முடிந்துவிட்டதே! எவ்வளவு பெரிய அதிருஷ்டம்! யுத்தத்துக்கு முன்னால் வைஸ்ராய் வந்திருந்தால், வார் பண்டுக்காகப் பொக்கிஷத்தையே ஒட்டை பண்ணியிருப்பார் வைஸ்ராய். இந்த சமயத்தில் இன்னொரு நினைவு வந்து ராஜாவின் மனசை வாட்டியது. இங்கிலாந்தில் பெரிய வெள்ளம் என்று திவான் பேப்பரில் படித்துச் சொன்னாரே! குறைந்தது ஒரு லட்சம் ரூபாயும் பத்தாயிரம் கம்பளியுமாவது அழுதாக வேண்டும். அப்புறம் அந்த மஹாராஜி, வைஸ்ராயிணி! மின்னலுடன் இடிபோல வைஸ்ராயுடன் வருவாளே! அந்த மாதரசிக்கு நல்ல சாமான்கள்மீது ஒரே லயிப்பு! ராணியின் வைரமாலையும். மரகதக்கல் பதித்த தந்தச் சீப்பும் அந்தக் கழுகுக் கண்களுக்குத் தப்புமா!

வைஸ்ராயின் விஜயத்துக்கு ஏற்பாடுகள் மும்முரமாய் நடக்கத் துவங்கின. அரண்மனைகளுக்கு எல்லாம் புதுப் பூச்சு பூசினார்கள். தெய்வங்களின் படங்களைக் கழற்றிவிட்டு, மாட்சிமை தங்கிய சக்ரவர்த்தியின் படங்களையும் சக்ரவர்த்தினியின் படங்களையும் மாட்டினார்கள். மிருகக் காட்சி சாலையில், இளைத்துப் போன சிங்கங்களையும் புலிகளையும் கொழுக்க வைத்தார்கள். ஏழை விடுதிகளுக்கு பால்பொடியும் விடமின் மாத்திரைகளும் துணிகளும் வழங்கினார்கள். ஆஸ்பத்திரிகளில், பிரசவ விடுதிகளில், வெள்ளை வெளேர் என்ற பெட்ஷீட்டுகளைப் படுக்கைகள்மீது விரித்தார்கள். வைஸ்ராயிணியின் சமூக சேவை மோகம் எல்லோருக்கும் தெரியுமே!

சமஸ்தானத்தின் சரித்திரத்துக்குப் புகழளிக்கும் ஒரு நன்னாளில், வைஸ்ராயும் அவரது சகதர்மிணியும், தமது பெரும் பரிவாரத்துடன் வந்து சேர்ந்தார்கள்.

பழைய கோட்டைகளையும் புதிய சுகஸ்தலங்களையும் வைஸ்ராய் பார்வையிட்டார். வாண வேடிக்கைகளையும் நாட்டு நடனங்களையும் கண்டு களித்தார். வைஸ்ராயிணி, ஏழை விடுதிகளில் குழந்தைகளுக்கு மிட்டாய்கள் வழங்கினார். பிரசவ விடுதி ஒன்றில் ஒரு கறுப்புக் குழந்தையைத் தம் உறையணிந்த பொற்கரங்களால் தூக்கி, எல்லோர் உள்ளங்களையும் கொள்ளை கொண்டார்.

ராஜாங்க விருந்துக்குப் பிறகு வைஸ்ராய் ராஜரீக விவகாரங்கள் பற்றி ராஜாவுடன் பேசலானார். திடீரென்று, "உங்கள் காடுகளில் என்ன இருக்கிறது? என்று கேட்டார்.

"ஏன் தேக்கு, ரோஸ்வுட், சந்தண மரம்......" என்று ராஜா ஆரம்பித்தார்.

"மரம் இல்லை ஐயா, மிருகங்களைப் பற்றிச் சொல்லும்!"

"ஓ நிறைய இருக்கின்றன! காட்டுப் பன்றி, சிறுத்தை, மான்...ம்... முயல்."

"சட்! உம் சமஸ்தானமும் பிரயோஜனம் இல்லை."

"எனக்குப் புரியவில்லை, பிரபுவே" என்று ராஜா குளறினார்.

"எனக்கு யானை சுட வேண்டும். உம் காட்டில் யானையே கிடையாதா!"

ராஜா ஒரு நிமிஷம விழித்தார்; உச்சி முகட்டைப் பார்த்தார். பிறகு ஒரு தென்புடன், "ஓ இருக்கிறது; என் சமஸ்தானம் சிறிதானாலும் தங்களுக்கு ஏமாற்றம் அளிக்காது."

"பலே" என்று வைஸ்ராய், ராஜாவின் முதுகில் தட்டி, "நாளைக்கு வேட்டைக்குப் போகலாம்" என்று சொல்லி விட்டார்.

வைஸ்ராய் அப்பால் சென்றதும் ராஜா திவானைக் கூப்பிட்டு யானைகளைப் பற்றி அவரைத் துளைக்கத் துவங்கினார். சென்ற வனவிலங்கு சென்ஸஸ்படி, சமஸ்தானக் காடுகளில், மூன்று ஆண் யானைகளும் நாலு பெண் யானைகளும் இருந்ததாகத் திவான் தெரிவித்தார். "இப்போதுள்ள நிலைமையைச் சொல்லும் ஐயா" என்று ராஜா கதறினார். திவான் காட்டுக் கன்ஸர் வேடரைக் கூப்பிட்டனுப்பினார். காட்டுக் கன்ஸர் வேடர் ஜில்லா காட்டு அதிகாரியுடன் பேசினார். அவர் வனவிலங்குப் பாதுகாப்பு அதிகாரியுடன் பேசினார். அந்த அதிகாரி கேம் வார்டனைக் கேட்டார். கேம் வார்டன் காட்டுக் காவலாளர்களைக் கலந்தாலோசித்தார். சென்ஸஸ் நடந்து முடிந்தவுடன், காடுகளில் காலரா வந்தது என்றும், ஒரே ஒரு யானைதான் எஞ்சியது என்றும், தகவல் கிடைத்தது, அந்த யானையும், வைஸ்ராய் விஜயத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்னால் தான்—அதற்கு டிஸென்ட்ரியோ என்னவோ தெரியவில்லை—செத்துப் போய்விட்டது. இதைக் கேட்டதும் ராஜாவுக்குக் கோப வேசம் வந்து தம் தங்கப் பற்களை நறநறவென்று கடித்தார்.

"வைஸ்ராயை ஏமாற்ற முடியாது. நான் அவருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். நாளைக்கு எப்படியோ நம் காட்டில் ஒரு யானை இருந்தாக வேண்டும்" என்று அவர் உத்தரவு போட்டு விட்டார்.

அந்தச் சமஸ்தானத்தில் சர்க்கார் கோயில்கள் பல இருந்தன- ஆனால் துர்கைக்கோயில் ஒன்றில் மட்டும்தான் ஒரே ஒரு யானை இருந்தது. அது பெண் யானை. துர்கை என்றே பெயர். அது ரொம்பப் பக்தி மிகுந்த யானை. தன் பின்னங்கால்களில் நின்று அம்பிகைக்கு வணக்கம் செலுத்தும், ரொம்ப அழகானதும் கூட. ஏன், அதற்கு ஒரு புடவையைக் கட்டி, சோலியைப் போட்டு, வளைந்த துதிக்கையில் ஒரு டம்பப் பையையும் தொங்கவிட்டு விட்டால், அதை ஒரு நவநாகரீக மங்கை என்றே எண்ணி மயங்கிவிடுவீர்கள். அம்மனை ஊர்வலம் எடுத்துச் செல்லுவது ஒன்றுதான் துர்கையின் வேலை. அது மற்ற யானைகளைப் போன்றதே அல்ல. பட்டணத்திலே பிறந்து பட்டணத்திலே வளர்ந்த யானை அது. அது சொப்பனம் காணுவது கூட, மோட்டார் வண்டிகளைப்பற்றியும், பெரிய கட்டிடங்களைப்பற்றியும், சினிமாக்களைப்பற்றியுந்தான்.

துர்கைக்கும் அதன் மாவுத்தனுக்கும் பரஸ்பரம் பேரன்பு இருந்தது. "யாழினிது குழலினிது என்பர், துர்கையின் பிளிறல் கேளாதவர்" என்று மாவுத்தன் எண்ணுவான். துர்கையைத் துடையில் வைத்துக்கொண்டு, 'ஆனை ஆட்டித்' தாலாட்டுப் பாடித் தூங்கவைப்பதற்குக்கூட அவனுக்கு ஆசைதான். அதன் கனம்தான் தடையாய் இருந்தது. மாவுத்தனுக்கு உற்றார் உறவினர் கிடையாது, வீடுவாசல் கிடையாது. அவனுக்கு உலகமே துர்கைதான். சாகும்போது அதன்மீது அமர்ந்தவாறே சாகவேண்டும் என்பதுதான் அவனது ஆசையெல்லாம்.

அன்றிரவு மாவுத்தனை யாரோ தூக்கத்திருந்து திடீரென்று எழுப்பினார்கள்.

"யானையைக் கொண்டு வாய்யா, மஹாராஜா உத்தரவு" என்று, வந்தவர்களில் ஒருவன் கத்தினான்.

"என்ன விசேஷம்!"

"அதெல்லாம் சொல்ல நேரமில்லை. உடனே யானையுடன் புறப்படவேண்

டும். இன்றுடன் உன் வேலை தீர்ந்தது, மஹாராஜா கட்டளை.''

''யானை இல்லாமல் நான் எப்படி வாழ்வேன்!'' என்று மாவுத்தன் விம்மினுன்.

''எம்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்ஜில் பெயரைப் பதிவு செய்துகொள்ளேன்.''

''எனக்கு வேறு ஒரு வேலையும் தெரியாதே.''

''உனக்கென்ன, நீ ஒரு அனுபவம் வாய்ந்த யானை ஓட்டி. டிராக்டர்—ஓட்டி வேலைக்கு பேஷாய் மனுப் போடலாமே.''

''ஜல்தி'' என்று ஒருவன் கத்தினுன். ''யானை தூங்குகிறது, காலையில் போகலாம்'' என்று மாவுத்தன் சொல்ல, ஒருவர் பட்டென்று அவன் முகத்தில் அறைந்தார். ''யானையை நீங்களே கூட்டிப் போங்கள்'' என்று அவன் முறைத்தான். அறைந்தவர், தாசில்தார். காரியம் குட்டிச்சுவரானதை அறிந்தார்; ராஜ கோபத்தை நினைந்தார்; சுயமரியாதையை மறந்தார். மாவுத்தனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

மாவுத்தன் யானையை எழுப்பி வந்தான். எல்லோரும் ரெயில்வே ஸ்டேஷனுக்கு விரைந்தார்கள்.

துர்கையைப் பிரத்யேக வாகன் ஒன்றில் ஏற்றினுர்கள். ''இந்த கலாட்டாவெல்லாம் என்ன!'' என்று அது மாவுத்தனைக் கண்ணுல் கேட்டது. அவன் கண்களில் நீர் மல்கியிருப்பதைப் பார்த்து அதுவும் சோகத்தில் ஆழ்ந்தது. வாகனில் அடுக்கியிருந்த கரும்பையும் தென்னை ஓலையையும் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை அது.

ரயில் வண்டி பயங்கர நிசியில் காடுகள் வழியே வீறிட்டுக்கொண்டு சென்றது. பெரிய பெரிய மரங்களும், வளைந்து படர்ந்த கொடிகளும், பாறைகளும் காட்டாறுகளும் நிறைந்த காடு, மைல்க் கணக்காக நீண்டு கொண்டிருந்தது.

திடீரென்று வண்டி நின்றது. ''யானையை இட்டுக்கொண்டு காட்டுக்குள் போ'' என்று மாவுத்தனுக்கு உத்திரவிட்டார்கள். யானை அவன் பின்னுல் ஆட்டுக்குட்டி போலச் சென்றது.

துர்கைக்கு ஒன்றுமே புரியவில்லை. தன்னுயுளிலே அது காட்டை அப்போதுதான் முதல் தடவையாகப் பார்க்கிறது! புதர்கள் வழியாக அதற்கு நடக்கமுடியவே இல்லை. மூங்கில் புதர் ஒன்றிலிருந்து ஒரு காட்டுப் பன்றி எட்டிப் பார்த்தது. துர்கை நடுநடுங்கிப் போய் ஓட ஆரம்பித்தது. மாவுத்தனும் தலைதெறிக்க ஓடினுன்.

பல மணி நேரம் கடந்தது, காட்டின் ஊடே புதிதாகப் போட்ட கச்சாப்பாதையில் சில அரசாங்கக் கார்கள் தோன்றின. வைஸ்ராயும், காட்டு கன்ஸர்வேடரும், இதர அதிகாரிகளும், இரட்டைக் குழல் துப்பாக்கிகளுடன் இறங்கினுர்கள். காட்டுக் காவலாளர் வழிகாட்டிச் சென்றுர்கள்,

காவலாளர் பிரிந்து சென்று, தம் பட்டம் அடித்துக் கூச்சல் போட்டுக் காட்டைக் கலக்கினுர்கள். ஒரு குள்ள நரி, செத்தோம் பிழைத்தோம் என்று ஓடிற்று.

''ஓநாய்'' என்று கேம் வார்டன் கத்தினுர். வைஸ்ராய்க்குத் தோள் தினவு எடுத்தது.

''புலி நாற்றம்'' என்று கன்ஸர்வேடர் ரகசியமாகச் சொன்னுர். வைஸ்ராயின் ரோமங்கள் குத்திட்டு நின்றன.

காவலாளர் கூச்சல் போட்டு டமாரங்களை அடித்தார்கள். வைஸ்ராய் ஒரு முயலை நோக்கினுர். கேம் வார்டன் அதைச் சுட்டு வீழ்த்தினுர். கன்ஸர்வேடர் பார்த்துச் சொன்ன காட்டுவாத்தை வைஸ்ராய் சுட்டார். ஆனுல் குறிதப்பித் தேன் கூடு ஒன்றில் குண்டு பாய்ந்தது. கோபமடைந்த தேனீக்கள்,

எல்லோரையும் கொட்டு கொட்டென்று கொட்டின. வைஸ்ராயின் திரு மூக்கு வீங்கிப் போயிற்று.

கொஞ்சநாழி வேட்டை இப்படித் தீவிரமாக நடந்த பிறகு, வைஸ்ராய், முக்கிய விஷயத்துக்கு வந்தார். "யானை எங்கே?" என்று வினவினர். உடனே டமாரங்கள் ஆர்த்தன, சங்கங்கள் ஒலித்தன. "யானை, யானை" என்று எல்லோரும் கத்தினர்கள்.

வைஸ்ராயின் இதயம் பட்டுப்பட்டு என்று அடித்துக்கொண்டது. அவருடைய முதுகெலும்பு வழியாக மின் அதிர்ச்சி பாய்ந்தது. அதோ, மூங்கில்களுக்கிடையே யானை தெரிகிறது!

எல்லோரும் மெதுவாக அடிமேல் அடிவைத்து முன்னேறினர்கள். யானையின் தலைமாத்திரம்தான் தெரிந்தது. வைஸ்ராய் எல்லோருக்கும் முன்னால் சென்றார். "இனிமேல் நெருங்குவது ஆபத்து, யானை மஹா பயங்கர விலங்கு" என்று காட்டுக் கன்ஸர்வேடர், சமயத்தில் எச்சரித்தார்.

துர்கை, தன் சின்னஞ் சிறு கண்களால் அவர்களைப் பார்த்தது. "அப்பாடா, ஒரு வழியாய் மனிதர்களைப் பார்த்தோமே!" என்று அது பேருவகை கொண்டது, தன் அழகிய துதிக்கையை மோகனமாகத் தூக்கி ஒரு சலாம் அடித்தது.

வைஸ்ராய் குறிவைத்தார். வேட்டு இரண்டு முறை தீர்ந்தது. மனிதக் குரலே போன்றதொரு மரண ஓலத்துடன் துர்கை மண்ணில் சாய்ந்தது.

"தங்களை வாழ்த்துவதற்கு என்னை அனுமதியுங்கள், பிரபுவே! இதுமாதிரியான மதயானை ஒன்றை, இவ்வளவு கிட்ட இருந்து கொண்டு—அதுவும் தரையில் நின்றுகொண்டு—இதுவரை எவரும் சுட்டது கிடையாது" என்று கன்ஸர்வேடர் வீராஞ்சலி செலுத்தினர்.

வெற்றி வெறிகொண்ட வைஸ்ராய், வீழ்ந்த யானையை நோக்கி வெற்றி நடை போட்டார். "ஐயோ கிட்டப் போகாதீர்கள். இந்த மத யானைகள் விஷயத்தில் ஒன்றும் சொல்லமுடியாது. முதலில் காவலாளர் போய் அது செத்துவிட்டதா என்று பார்க்கட்டும்" என்றார் கேம் வார்டன்,

இந்த சமயத்தில் கன்ஸர்வேடரும், "அதோ, சிறுத்தை" என்று கூவிக்கொண்டு, எதிர்ப்பக்கமாக ஓடத் துவங்கவே, வைஸ்ராயும் அவரைத் தொடர்ந்தார்.

காவலாளர்கள் மூங்கில்ப் புதரை நோக்கி விரைந்தார்கள். யானை செத்திருந்தது.

"ஐயோ, இதென்ன!" என்று ஒருவன் கத்தினான்.

"மாவுத்தன் அல்லவா" என்று மற்றொருவன் சொன்னான். மாவுத்தன் துர்கையின் அருகே இறந்து கிடந்தான். அவன் இதயத்திலிருந்து இரத்தம் வழிந்துகொண்டிருந்தது.

செத்தவனைப் பக்கத்திலே ஒரு புதரில் போட்டு மறைத்தார்கள், யானையின் கழுத்தக் கயிற்றை அவசரம் அவசரமாக அவிழ்த்தெறிந்தார்கள்.

சற்று நேரம் கழித்து, கன்ஸர்வேடரும் கேம் வார்டனும் வைஸ்ராயை யானையிடம் அழைத்துச் சென்றார்கள்.

அம்பிகையின் திருவடி பட்டுப் புனிதமடைந்த யானையின் கழுத்தில், வைஸ்ராய் தம் பூட்ஸ் கால் ஒன்றை வைத்தார். போட்டோக்காரர்கள் படம் பிடித்துக்கொண்டார்கள்.

அந்தப் படம், வாரப்பத்திரிகைகளில் கீழ்க்கண்ட குறிப்புடன் வெளியாயிற்று:

"தம்மால் கொல்லப்பட்ட யானையுடன், மே. த. வைஸ்ராய் அவர்கள். இந்த யானை, சமஸ்தானத்தில் உயிருக்கும் உடைமைகளுக்கும் யமனாய் நடமாடிக்கொண்டிருந்தது நினைவிருக்கலாம். தம்மைக் காப்பாற்றிய வைஸ்ராய் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில், சமஸ்தான மக்கள் அவரது சிலை ஒன்றை நிறுவத் தீர்மானித்திருக்கிறார்கள்."




# உலகக் காலண்டர்

**எஸ். சுப்பிரமணியன்**

சுமார் இருபத்து ஐந்து வருஷங்களுக்கு முன், மஹாத்மா வட்டமேஜை மகாநாட்டுக்காக லண்டன் சென்றபோது, பலர் அவரை பேட்டி கண்டனர். அவர்களில் ஒரு அமெரிக்க மாதின் பெயர் மட்டும் பத்திரிகைகளில் வெளியாகவில்லை. அந்த அம்மாளுக்குக் "காலண்டர் லேடி" என்றே பெயர் இடப்பட்டிருந்தது; காரணம் அவர், இப்பொழுது வழங்கி வரும் காலண்டரை மாற்றியமைக்குமாறு, இடைவிடாது பிரசாரம் செய்து கொண்டிருந்ததே யாகும்.

இப்போது வழக்கத்திலிருக்கும் காலண்டரில் பல குறைகள் உள்ளன. முக்கியமாக, பன்னிரண்டு மாதங்களில் ஒவ்வொன்றிலும் உள்ள நாட்களின் எண்ணிக்கை, ஞாபகத்துக்கு எளிதில் வராது. இதற்காக ஓர் அங்கிலப் பாட்டை வேறு ஞாபகம் வைத்துக்கொள்ளவேண்டும்.

> **"தர்ட்டி டேஸ் ஹேவ் செப்டெம்பர்**
> **ஏப்ரில் ஜூன் அண்ட் நவம்பர்**
> ..................................
> .................................."

இது தவிர, தேதியும் நாளும் ஒரு வருஷம்போல் இன்னொரு வருஷம் இருப்பதில்லை. மேஜையிலும் சுவரிலும், அங்

தந்த ஆண்டின் காலண்டர்களை வைத்துக்கொண்டு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது.

இதைத் தவிர்க்கப் பலவித யோசனைகள் சொல்லப்படுகின்றன. அவற்றில் ஒன்றை, சர்வதேச ஸ்தாபனத்தார் இப்பொழுது ஆராய்ந்து வருகிறார்கள். இந்த ஏற்பாட்டின்படி புது வருஷம் எப்பொழுதும் ஞாயிறன்று பிறக்கும். ஜனவரியில் 31 நாள்; பெப்ரவரியில் 30; மார்ச்சு மாதம் 30; அதேமாதிரி ஏப்ரல் 31 நாள்; மே 30; ஜூன் 30; ஜூலை 31 நாள்; ஆகஸ்ட் 30; ஸெப்டம்பர் 30; அக்டோபர் 31 நாள்; நவம்பர் 30; டிஸம்பர் 30. இப்படியாக, வருஷத்தில் ஒவ்வொரு கால் பாகத்திலும் சரியாக 91 நாள் இருக்கும். கடைசி நாளுக்கு, உலக விடுமுறை நாள் என்று பெயர் கொடுக்கப்படும். நாலு வருஷத்துக்கு ஒரு முறை ஜூன் மாதம் 30-ம் தேதிக்கு அடுத்தாற்போல், இன்னொரு உலக விடுமுறை நாள் உண்டு.

இந்த உலகக் காலண்டருக்கு இந்தியா சம்மதித்திருக்கிறது. ஆரம்பத்தில் ரஷ்ய சர்க்கார் இதை ஆதரிக்கவில்லையென்றாலும், இப்பொழுது இந்தியாவின் பக்கம் சேர்ந்திருக்கிறது. பிரிட்டனும் அமெரிக்காவும் இந்த விஷயத்தில் எதிர்க்கட்சியில் இருக்கின்றன. ஜூலியஸ் சீசர் போன்றவரால்தான் காலண்டர் சீர்திருத்தம் செய்ய முடியும். மற்றவர் இதைச் செய்ய முயல்வது, வான்கோழி விஷயமாக முடியுமென்று சிலர் சொல்லிக் காட்டுகிறார்கள். யூதர்கள், தீவிரமாகப் புதுக் காலண்டரை ஆட்சேபிக்கிறார்கள்.

மறுபடியும் இந்த விஷயம், சர்வதேச ஸ்தானத்தில், கூடிய சீக்கிரம் விவாதத்துக்கு வரப்போகிறது. என்ன நடக்கிறது என்று பார்க்கலாம். நாமும் சும்மா இருக்கவேண்டாம். இதைப்பற்றி சர்ச்சை செய்துகொண்டிருப்போம்.




## காட்சி 1.

[ராமலிங்கம் பரபரப்புடன் வீட்டுக்குள் நுழைவதும், மழை பெரிதாகப் பிடித்துக்கொள்வதும் சரியாயிருக்கிறது. மீனாட்சி வியப்புடன் அவனை வரவேற்கிறாள்.]

மீனாட்சி: என்ன, வந்துவிட்டீர்கள்? இன்றைக்கு ஆபீஸ் இல்லையா?

ராம: ஆபீஸ் இல்லாமலென்ன? ஊரே இருட்டிக்கொண்டு வந்தது. அதனால்......

மீனாட்சி: அதனால் 'அரிக்கன்லைட்' எடுத்துப் போக வந்தீர்களா? பாவம்......

ராம: குடை எடுத்துப் போக வந்தேன். 'அரிக்கன்லைட்', 'சருக்கன்லைட்' என்று சொல்லி வம்புக்கிழுக்காதே...... எங்கே அந்தப் புதுக்குடை?

மீனாட்சி: புதுக்குடையா? எந்தப் புதுக்குடை?

ராம : (சலிப்புடன்) என்ன மீனாட்சி, இந்த வீட்டிலே இப்போது தான் புது 'மெம்ப'ராகச் சேர்ந்தவள்போல் கேள்வி போடுகிறாய்! அந்தப் பச்சைக்குடை, நான் நேற்று வாங்கி வந்தது......

மீனாட்சி : (சிரித்து) ஓ, அதைச் சொல்கிறீர்களா? 'குடை குடை' என்றால் புரிய மாட்டேன் என்கிறது...

ராம : என்ன மீனாட்சி, கேலி பண்ணுகிறாயா? அந்தக் குடை என்னவிதத்தில் தாழ்ந்து போய்விட்டது?

மீனாட்சி : தாழ்வாகவா? சரியாய்ப் போயிற்று! அதைப்படுக்கப் போட்டால்கூட ஏழடி உயரத்துக்கு கம்பிகளெல்லாம் எழுந்து நின்று கலகம் செய்கிறதே!

ராம : அப்படி என்ன பெரிதாகவா இருக்கிறது?

மீனாட்சி : நீங்கள் அதை நாய்க் குடை என்றுதான் நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ? ஒரு பெரிய யானைக் கூட்டத் துக்கே அதைக் குடையாய்ப் பிடிக்கலாமே! நேற்று வெய்யிலுக்காக அதை நீங்கள் பிடித்துச் சென்ற போது, ஏதோ பெரிய மரம் ஒன்றை வேரோடு பிடுங் கிக் கையில் தூக்கிச் செல்வதுபோலிருந்தது, கொப் பும் கிளையுமாய்!

ராம : அட, கொஞ்சம் பெரியது, அவ்வளவுதானே?...... அப் புறம், மற்றக் குடைகளில் இருக்கும் கறுப்புத் துணிக்கு பதிலாக இதில் பச்சைத் துணி......

மீனாட்சி : (கேலிப்பேச்சை விடாமல்) அப்புறம் மற்றக் குடை களிலெல்லாம் ஏதோ பத்துப்பன்னிரண்டு கம்பிகள் தான இருக்கும்; உங்கள் குடையில் ஈச்சமரம் மாதிரி......

ராம : உறுதியாயிருப்பதற்காக நிறையக் கம்பிகள் கொடுத்திருக் கிறான்......

மீனாட்சி : உறுதி உறுதி யென்று சொல்லி, பிடித்துக்கொள்ளக் கூட இடமில்லாமல் ஒரே கம்பி மயமாகக் குத்த வேண்டுமா, மாரியம்மனுக்கு ஊசிப் பிரார்த்தனை செலுத்துகிறவன் மாதிரி!

ராம : பிடித்துக்கொள்ளத்தான் அருமையான சித்திரப்பிடி......

மீனாட்சி : சித்திரப்பிடியா? ஆஹா! அதைப் பிடித்துக் கொண்டிருக்கிறவரையிலேயும், எங்கேயோ நெறிஞ்சி

முள் காட்டில் வெறும் கையால் நடமாடுவதுபோல் உறுத்துகிறது.

ராம : ஹூம், நீ அப்படித்தான் சொல்லுவாய்; விரித்த குடையை மடக்குவதற்கு, கைப்பிடியிலேயே 'ஸ்விச்' மாதிரி ஒன்று இருக்கிறதே, அது எவ்வளவு அருமையான......

மீனாட்சி : ஆஹாஹாஹா, ரொம்ப அருமையான 'ஸ்விச்'தான். குடையை விரிப்பதற்கும் அந்த 'ஸ்விச்'தானே ?...... மழை பெய்ய ஆரம்பிக்கும்போது குடையைப் பிரிக்க முயற்சி பண்ணினால், மழை நன்றாய் அடித்துப் பெய்து, நாம் தொப்பலாக நனைந்து, குடையில் அந்தக் கைப்பிடியில் இருக்கிற 'ஸ்விச்'சை மழை ஜலம் நன்றாய்க் கரைத்தாலொழிய அது தன் உடும்புப் பிடியை விடாது... இன்று காலை விச்சு பிழைத்தது புனர் ஜன்மம்தான்...

ராம : என்ன ?

மீனாட்சி : பாவம், குடையை விரித்துக் கொடுக்கச் சொன்னான்; நானும் வெகப்பட்ட நேரம் உழைத்தபின் பிரித்துக் கொடுத்தேன். அதைப் பிடித்துக்கொண்டிருந்தவன் எங்கேயோ ஞாபகமாய் 'ஸ்விச்'சைத் தட்டி விட்டுவிட்டான். அவ்வளவுதான், ஈச்சமரம் பூராவும் சேர்ந்து அவனை அமுக்கிவிட்டது. உடனே குழந்தை கதற ஆரம்பிக்கவே, நானும் அளகிரியுமாகப் போய் அவனை விடுவிக்கப் பட்டபாடு பெரும்பாடாகி விட்டது. நல்லவேளை, நாலு பக்கமும் நாலு ஜோடிக் குதிரையைக் கட்டி இழுக்கவேண்டிய அவசியம் வரவில்லை.

ராம : மீனாட்சி, நீ என்னைக் கேலி பண்ணிக்கொண்டு நிற்கிறாயே ஒழிய, அந்தக் குடையை இன்னமும் எடுத்துக் கொடுத்தாகவில்லை.

மீனாட்சி : எடுத்து வருகிறேன். உள்ளே வரலாமே நீங்களும். (இருவரும் உள்ளே போய்க் குடையைத் தேடுகிறார்கள் ... காணவில்லை.)

ராம : தொலைந்துபோய்விட்டதா என்ன ?

மீனாட்சி : தொலைந்து போயிருக்காது. விச்சு ஸ்கூலுக்கோ, இல்லை, அளகிரி மார்க்கெட்டுக்கோ எடுத்துப்போயிருப்பார்கள்.

ராம: அப்படியென்றால் நான் எப்படி ஆபீஸுக்குப் போவது இந்த மழையில்?

மீனாட்சி: முந்தி எங்கப்பா விட்டுவிட்டுபோனாரே, தாழங்குடை அது இன்னமும் விறகுப் பாணில்த்தான்...

ராம: போதும் போதும், உன் அப்பா அடுத்த தடவை வரும் போது அவருக்கு விறகுப் பாணுக்குப்போகும் வழியைக் காட்டு... நான் இந்த மழையில் ஆபீஸுக்குப் போக முடியாது... இன்று 'மட்டம்'தான்.

மீனாட்சி: ரொம்ப நல்லதாய்ப் போயிற்று... நன்றாய்ப் படுத்துத் தூங்குங்கள்.

## காட்சி 2.

[மத்தியானம் இரண்டு மணி வேளை. ராமலிங்கம் ஏகப்பட்ட கொட்டாவிகளுடன் எழுந்து உட்காருகிறான் படுக்கையில். வெளியில் மழை நின்றிருக்கிறது.]

ராம: (உள்ளே பார்த்து) மீனாட்சி!... மீனாட்சி!!
(மீனாட்சி வருகிறாள்.)

மீனாட்சி: என்ன, எழுந்திருந்துவிட்டீர்களா? மணி இரண்டு தான் ஆயிற்று.

ராம: ஏ அப்பா, இரண்டாகி விட்டதா? நிறையத் தூங்கிவிட்டேன்... ஹூம், குடையைப்பற்றி ஏதாவது தெரிந்ததா?

மீனாட்சி: தெரிவதற்கு என்ன இருக்கிறது?... விச்சுவும், அளகிரியும் வந்தால்தானே தெரியும்?

ராம: ஓ, இன்னமும் வரவில்லையா?... ஹூம்ம்...
(வெளியிலிருந்து விச்சு பரபரப்புடன் வருகிறான்.)

ராம: அடடே, சிக்கிரமாய் வந்துவிட்டானே!... (உற்றுப் பார்த்து) என்னடா, குரங்கு சாகக் கொடுத்த ஆண்டி மாதிரி வருகிறாய்? என்னடா சமாசாரம்? ஏன் சீக்கிரம் வந்துவிட்டாய்?

விச்சு: (முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு) இல்லையப்பா, குடை...

ராம:
மீனுட்சி } ஆ! குடையா?... என்ன ஆயிற்று?

விச்சு: குடை துலேந்து போய்விட்டது...

ராம: (பதறிப்போய்) ஆ! துலேத்துவிட்டாயா பாவிப் பயலே?

மீனுட்சி: எப்படித் துலேந்து போயிற்று?

விச்சு: ஸ்கூல் தோட்டத்தில் ஒரு ஓரமாய் வைத்து விளேயாடிக் கொண்டிருந்தேன். யாரோ...

மீனுட்சி: தோட்டக்காரன் ஒருவேளே அதை ஈச்சமரமென்று நினேத்து எங்கேயாவது நட்டுவிட்டானே என்னமோ! போய் அவனிடம் அது 'குடை' யென்று சொல்லி, வேரோடு கிளப்பிக்கொண்டு வந்து சேருங்கள்.

ராம: போதும் மீனுட்சி, வயிறு பற்றி எரியும்போது அடுப்பு மூட்ட நெருப்புக் கேளு!... என்ன விளேயாட்டு வேண்டியிருக்கிறது!

மீனுட்சி: விளேயாட்டு ஒன்றுமில்லே, உங்கள் செல்லப்பிள்ளே இன்று அபூர்வமாய் ஒரு நல்ல காரியம் செய்துவிட்டானே! அதற்காக சந்தோஷப்படுங்கள். நம் நல்ல காலம் குடைபோயிற்றென்று சந்தோஷப்படுவதை விட்டு துக்கம் கொண்டாடுகிறீர்களே!

ராம: சேச்சே எவ்வளவு அருமையான குடை! அந்தப் பச்சைத் துணி ஒன்றிற்கே எவ்வளவு வேண்டுமானுலும்...

விச்சு: பச்சைத் துணி ஏதப்பா?... நான் கொண்டுபோனது வெள்ளேத் துணி போட்ட குடை அப்பா...

ராம: (பதறி) ஆ, வெள்ளேத் துணியா?... ஐயையோ!... துலேந்தேன்!

மீனுட்சி: என்ன என்ன?

ராம: அது சாம்பமூர்த்தியின் குடை மீனுட்சி!... மறந்தே போய்விட்டேன்! மூன்று நாளேக்குமுன் இரவல் வாங்கி வந்தது, திருப்பிக் கொடுத்துவிட்டதாகவே நினேத்துக் கொண்டிருந்தேன்.

விச்சு: பீரோவுக்குப் பின்னுல் இருந்தது, எடுத்துக் கொண்டு போனேன்.

ராம: அப்பா, விச்சு, என் கோட்டுப் பையிலிருந்து உனக்கு எட்டணா எடுத்துக்கொள். என்னுடைய சன்மானம்...

மீனாட்சி: என்ன சொல்கிறீர்கள்?

ராம: அந்தக் குடை தொலைந்துபோனதே உலகத்துக்கு க்ஷேமம் தான்... அதையும் ஒரு குடை யென்று வைத்துக் கொண்டிருந்தானே சாம்பமூர்த்தி! அதை முதலில் பார்த்ததிலிருந்தே எனக்கு வெறுப்புத்தான். வேறு வழியில்லாமல் இரவல் வாங்கி வந்தேன்... அவனுக்கு அந்தக் குடைக்கு உள்ள பணத்தைக் கொடுத்துவிடுகிறேன்.

(தொப்பலாக நனைந்துபோய் அளகிரி வருகிறான். அவன் உடலெல்லாம், உடையெல்லாம் பச்சைக் கலர்!)

ராம: இதென்ன அளகிரி, வடநாட்டு 'ஹோலிக் கொண்டாடிகள்' மாதிரி ஏகப்பட்ட சாயத்தைப் பூசிக்கொண்டு வந்திருக்கிறாய்?

அள: ஒன்றும் சொல்லாதீர்கள் எஜமான்... உங்களுடைய புதுக் குடையைச் சந்தைக்கு எடுத்துப் போனதால்தான் இப்படி வந்திருக்கிறேன்.

ராம: ஐயையோ! என் பச்சைக் குடை!

அள: அந்தக் கலரைப் பற்றிப் பேசாதீர்கள் எஜமான்... வாசல் பக்கம் வைத்திருக்கிறேன், போய்ப் பாருங்கள்.

மீனாட்சி: என்ன நடந்தது அளகிரி, ஒழுங்காகத்தான் சொல்லேன்!

அள: அது என்ன குடை அம்மா, உற்சவக்குடை மாதிரி? உயிரைக் கொடுத்துப் பிரித்துப் பிடித்து, தலைமேல் சாமான் மூட்டையுடன் வந்து கொண்டிருந்தேன். திடீரென்று குடைத்துணி வழியாகத்தண்ணீர் தாராளமாய்க் கொட்ட ஆரம்பித்துவிட்டது. பார்த்தால் குடைச் சாயம் குடையிலிருந்து இறங்கி என்மேல் ஏறிக்கொண்டிருந்தது.

ராம: ஐயையோ!

அள: அந்தத் துணிக்குச் சாயத்தால்தான் கனம் இருந்தது. சாயம் போனவுடன் மழைத் தண்ணீர் வடிகட்டி என்மேல் தாராளமாய்க் கொட்டிற்று. சாமான்களெல்லாம் என்ன கதியோ, தெரியாது.

ராம: குடையை மடக்கிவிடுவதுதானே?

அள: அது முடியாமல்தான் இந்த கதிக்கு வந்திருக்கிறேன். இனி நீங்கள்தான் அதை மடக்கவேண்டும். திண்ணையில் வைத்திருக்கிறேன்.

(எல்லோரும் வாசற்பக்கம் போகிறார்கள். அங்கே 'புதுக்குடை' சாயம் வெளுத்துப்போய் பரிதாபமாய் நிற்கிறது. ராமலிங்கம் கண்ணீரை அடக்கிக் கொண்டு, கைப்பிடி 'ஸ்விச்' மூலம் அதை மடக்க முயன்று பார்த்து, முடியாமல் தவிக்கிறான்.)

மீனாட்சி: அதை மடக்கி இப்போது என்ன ஆக வேண்டும்? விடுங்கள்.

ராம: சேச்சே, கடைக்காரன் எவ்வளவு மோசம் செய்து விட்டான்!

(வீதியில் பிச்சைக்காரன் ஒருவன் வந்து, வீட்டுக்கெதிரில் நனைந்து கொண்டு நிற்கிறான்.)

பிச்சை: ஐயா, மகராசரே, சாப்பிட ஏதாவது...

மீனாட்சி: (திடீரென்று) அந்தக் குடையை அவனிடம் கொடுங்கள். மடக்கும் பொறுப்பு அவனுடையதாய்ப் போகட்டும்...

(யாரும் சொல்லுமுன் அளகிரியே பாய்ந்து சென்று ராமலிங்கத்திடமிருந்து குடைய்ய வாங்கிப் பிச்சைக்காரனிடம் கொடுக்கிறான். பிச்சைக்காரன் அதை வாங்கி நாலு தடவை புரட்டிப் பார்த்து விட்டு, திடீரென்று வாசற்படியில் அதைப் போட்டு விட்டு ஓட்டம் பிடிக்கிறான். ராமலிங்கத்தின் கண்களிலிருந்து கண்ணீர் மளமளவென்று கொட்டுகிறது.)

மீனாட்சி: அளகிரி, இனிமேல் வேறுவழியில்லை. இந்தக் குடையையும் கொண்டுபோய் அந்தப் பரணில், தாழங்குடையுடன் சேர்த்து வைத்துவிட்டு வா.

அள: அது அருமையான யோசனை அம்மா.

(எடுத்துக்கொண்டு உள்ளே ஓடுகிறான்.)

மீனாட்சி: தாழங்குடைக்குத்தான் விரிக்கவோ மடக்கவோ முடியாத கதியென்றால், கம்பிக் குடைக்குக் கூடவா?

ராம: (பல்லைக் கடித்து) வரட்டும், அந்தக் கடைக்காரனைச் சும்மா விடுவதில்லை.

(மீனாட்சியும், விச்சுவும் சிரிப்பை அடக்கிக்கொள்கிறார்கள்.)



# ஓவியத்தில் ஒளி

"கிருத்திகா"

டெல்லியிலே "லால்குவா" என்று ஓர் இடமுண்டு. ஒரு நாள் நான் அங்கே போகும்படியாக நேர்ந்தது. சூரிய வெளிச்சம் கொஞ்சங் கூட நுழையாத சரிந்த தெருக்களும், குறுகிய வழிகளும் அங்கே பல உள்ளன. தாறுமாறாக எழுந்த வீடுகள்; அவற்றின்மேல் பூசியிருந்த சுண்ணும்பெல்லாம் உதிர்ந்து, சுவர்கள் தேம்பல் வந்தாற்போல் அருவருப்பாய் இருந்தன. மேல்மாடிகளிலுள்ள சாளரச் சாய்புக்கள் பட்டைக் கண்ணுடி வழியாகப் பார்ப்பதுபோல் கோணலாகத் தோன்றின. கீழே விழுந்து விடுமோ என்று பயப்படும்படி அங்கே தாழ்வாரங்கள், அடிப்படையில்லாமல் சாய்ந்திருந்தன. அந்தத் தெருவின் தோற்றத்தைக் கண்டவுடனேயே, உத்ரில்லோ (Utrillo) என்னும் பிரன்சு ஓவியரின் நினைவு வந்தது. அவர் சாதாரணமாக, தெருக்களையும் வீதிகளையும் தான் வரைவார். அவைகளில் ஜனசஞ்சாரங்கூட இருக்காது. ஆனல் அத்தெருக்களைப் பார்த்து, பழைய வீடுகளைப் பார்த்து, வாழ்க்கையிலுள்ள எத்தனையோ ரகசி



யங்களை ஊகிக்கலாம். ஒரு சுவரைப் பார்த்தால், அது எத்தனை விஷயங்களை ஞாபகப்படுத்துகிறது? உத்ரில்லோ என்பவர் ஒரு சுவரை வைத்துக்கொண்டு எத்தனையோ ஜால வித்தைகள் செய்வார். சிதைந்த சுவர், பாசி படர்ந்த சுவர், செங்கற்சுவர் என்று பலவிதச் சுவர்கள். ஒரே ஒரு சுவர்......ஒரு தெரு......ஆனால் அதின் அமைப்பு, அலங்காரம், வர்ணம் இவைகளிலிருந்து, அந்த இடத்தி லுள்ளவர்களுடைய யோக்யதை, நாணயம், பண்பு முதலிய குண விசேஷங்களை நாம் கண்டு கொள்ளலாம். எதையும் வைத்து ஓவியம் எழுதலாம். படத்திற்குப் பொருள் கொடுப்பது தெளிவும், நிறத்தின் ஒளியுமேயாகும். லால்குவாவைப் பார்த்தவுடன், உத்ரில்லோ வைப் போல் நம் தேசத்தவர்களும் தெருக்களை ஏன் வரையக் கூடாது என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது.

அதற்கு முதல் நாள், ஒரு பிரெஞ்சு மாதினிடம் நான் பேசிக் கொண்ட விஷயம், அப்போது ஞாபகத்திற்கு வந்தது. அவள் சொன்னாள்: "இந்தியர்களிடம் இத்தனை உயர்ந்த கலைச் செல்வங்கள் இருக்கும் பொழுது, இவர்கள் மேல் நாடுகளுக்குச் சென்று, இம் பிரெஷனிஸம் (Impressionism), கியூபிஸம் (Cubism), ஸர்ரியலி ஸம் (Surrealism) என்று எங்களுடைய வழிகளைப் பயில்வது எனக் குப் பிடிக்கவில்லை. இதன் மூலம் உங்களுடைய கலை வளர்ச்சி பெறும் என்று நான் நம்பவில்லை. நீங்கள் மேன்மையடைய வேண்டுமானால், அதற்கு வேண்டிய கருவிகளை இங்கேயே தேடுங்கள். நீங்கள் தொன்று தொட்டுப் பழகி வரும் தெய்வ பக்தியே உங்கள் கலைக்கு உயிர் நாடியாக விளங்குகிறது. இதைக் கொண்டே நீங்கள் வெற்றி யடையலாம். இதையே மறுபடியும் கைக் கொள்ளுங்கள். இதனால் உங்கள் கலை புத்துயிர் பெறும். நீங்களும் உன்னத நிலையை அடை வீர்கள்."

லால்குவா நடுத்தெருவில் நின்றபடியே, அவள் சொன்னதைப் பற்றி சிந்தித்துப் பார்த்தேன். பக்தி......தெய்வ பக்தி! அது எதனால் உண்டாகிறது?......அன்பினால் தான். அந்த அன்பின் ஊற்று எது? நம்மை ஆளும் ஆண்டவனே. இந்த பக்தியை நாம் பலவிதமாக வெளியிடுகிறோம். பஜனைகள் செய்கிறோம்; தோத் திரங்கள் செய்கிறோம். ஆடுகிறோம், பாடுகிறோம். ஓவியத்திலும் இதே பக்தியைக் காட்ட முடியாதா? தெய்வம் சகல ஜீவராசிகளி லும் வியாபித்து நிற்கிறது. ஆகவே, தெய்வத்தின் அன்புருவை எல்லாவற்றிலும் காணமுடியும். அந்த் அன்புருவைச் சித்திரங்களாக வரையவும் முடியும்.

இதோ என் முன் இரண்டு உருவங்கள், நான் நினைத்த மாத் திரத்தில் தோன்றி விட்டன. ஒரு ரிக்ஷாவில் இரண்டு மனிதர்கள்

ஒருவரை யொருவர் ஒட்டியபடி அமர்ந்திருந்தார்கள். அவர்களுடைய நீண்ட முகத்தில் தோன்றிய ஒருவித மஞ்சள் நிறத்தைக் கண்டவுடன், எனக்கு, 'கௌரி' என்ற சம்ஸ்கிருதப் பதம் நினைவுக்கு வந்தது. இந்த 'கௌரி' என்னும் நிறம் வெண்மையுமில்லை; மஞ்சளுமில்லை; இரண்டும் சேர்ந்திருக்கும் வெண்பட்டு நிறமேயாகும். இந்த நிறத்தின் விசேஷம் என்னவென்றால், இது, நாடக நடிகர்களுடைய வர்ணப் பூச்சை போல் ஒருவிதப் போலித் தோற்றம் கொடுக்கும். இந்தப் போலிச் சாயையை ஓவியத்தில் காட்டியிருக்கிறாள் அமிர்தா ஷெர்கில். அகண்டு விரிந்த கண்கள்; கறுமையான தலை மயிர்......ஆனால் தொங்கின அம்முகங்களில் சம்சாரத்தின் வேதனை நிரம்பியிருக்கிறது. ஒரு க்ஷண நேரத்தில் தோன்றி மறைந்த இந்த ரிக்ஷாக் காக்ஷியைக் கண்டவுடன், எனக்கு, லலித்கலா அகடெமியிலுள்ள ஷெர்கில் ஓவியங்கள் நினைவுக்கு வந்தன.

தெய்வத்தின் மேல் வைத்த தூய அன்பினால், அன்று நம் நாட்டுக் கலைஞர்கள், கடவுளின் சிற்பங்களைச் செய்தார்கள். மக்கள் பேரில் கொண்ட பிரியத்தினால், அக்கடவுளின் பக்தர்களையும் சிற்பங்களாய்ப் படைத்தார்கள். ஆடும் பாவனையிலும், பாடும் பாவனையிலும், பக்தர்களைப் பலவிதமாய்ச் சிற்பத்தில் செதுக்கினார்கள். மக்கள் பால் கொண்ட அன்பினால் தான், அமிர்தா ஷெர்கில்லும், அவர்களுடைய துன்பங் கலந்த முகங்களை ஓவியத்தில் வரைந்து காட்டுகிறாள். அமிர்தா, மேல் நாட்டில் ஓவியம் பழகியவள். அதனால் என்ன? நம் நாட்டை அடைந்தவுடன் சகோதர வாஞ்சை அவளை ஆட்கொண்டது. எடுத்தாள் தூரிகையை—அது ஒரு பிரென்சு தூரிகை! குழைத்தாள் வர்ணத்தை—அதுவும் பிரான்சில் வாங்கியது! பிறகு வரைந்தாள் படத்தை; ஆனால் அந்தப் படம் என்னமோ, அவளுடைய தேசத்தை, இந்திய நாட்டை ஒட்டியே அமைந்திருந்தது. நமக்கென்று, பாரத மக்களுக்கென்று உண்டாகும் ஆவல்களையும், கனவுகளையும், ஊக்கங்களையுமே அவள் காட்டி இருக்கிறாள்.

சந்தைக்குப் போகும் நம் தாய் நாட்டு கிராமத்தார்களைப் பாருங்கள். இதே நடையை, வீசும் நடையை, இதே பார்வையை, நாம் எத்தனை முறை வீதிகளில் கண்டிருக்கிறோம்! இந்த முகங்களைப் பாருங்கள்! யுகயுகாந்திரமாய், அகத்தில் குடிகொண்டிருக்கும் ஏக்கம், வறுமை, வருத்தம் எல்லாம் அவற்றில் தெரிகிறது. ஆனால், அவற்றோடு பக்தி வெள்ளமும், அதின் விளைவான பொறுமையும் அம்முகங்களில் தேங்கி நிற்கின்றன. மேல் நாட்டுத் தொடர்பினால் அமிர்தா அதிகப் பயன் அடைந்தாள்; ஆனால், சுயமானது எதையும் இழக்கவில்லை. பாலையும் ஜலத்தையும் கலந்து வைத்தால், அன்னப்பக்ஷி, பாலை மாத்திரம் குடித்துவிட்டு ஜலத்தை விட்டுவிடு

மென்று ஒரு கதை சொல்லுவார்கள். அதைப்போல் நாமும், நல்லதைப் பிறரிடமிருந்து ஏன் கற்கக் கூடாது. கலைப் பண்பில், மேல் நாடு, அயல் நாடு என்ற வித்தியாசங்களை ஏன் பாராட்ட வேண்டும்? மற்றவர்களிடமிருந்து நாம் ஏன் வர்ணம் பூசும் வித்தையையோ, அழகைக் காட்டும் தந்திரத்தையோ கற்கக்கூடாது? உத்ரில்லோவைப் போல், நாமும் லால்குவா தெருக்களை வரைய வேண்டுமென்ற அவா எனக்கு உண்டாயிற்று. லால்குவாவில் வாழும் ஜனங்களை வரைந்தால், அதைவிட மிக்க ரஸமாக யிருக்குமென்றும் தோன்றிற்று. குறுகிய வாழ்க்கையின் கோட்டங்கள், வறுமையின் தோற்றங்கள் முதலியவற்றை விதவிதமாய் வரைந்து காட்டலாம்.

இம்மாதிரியான சித்திரங்களை வரைவதற்கு அன்பு வேண்டும்; உள்ளம் உருகும் பக்தி வேண்டும். அந்தப் பிரென்சு மாது சொன்ன மாதிரி, தெய்வத்தினிடம் நம்பிக்கை வேண்டும். கீழேயுள்ள படத்தில் உறைந்து நிற்கும் பக்தியைப் பாருங்கள். இது மதுரா சிற்பங்களில் ஒன்று.

அழகைக் காட்டுகிறான் ஒரு கலைஞன்; விகாரத்தைக் காட்டுகிறான் மற்றொருவன். எல்லாம் உண்மையே; எல்லாம் சத்தியத்தின் அம்சங்களே! தெய்வத்தின் இந்த எல்லா அம்சங்களையும் விண்டு பார்த்து மக்களுக்குப் புலப்படுத்துவதே, உண்மைக் கலைஞனின் கடமை. பக்தியிருந்தால் தானாகவே படங்களில் ஜீவ களை ஓடும்......உருக்க மில்லாத இடங்களில், ஓவியம் அசுவாரசியமாக, போலியாகத் தோன்றும். அவ்விதச் சந்தர்ப்பங்களில், வெளி நாட்டார், நாம் அவர்களைப் பின்பற்றி வேஷம் போடுகிறோமென்று பரிகசிக்கவும் நேரும். அன்னப்பக்ஷியை ஞாபகம் வைத்துக்கொண்டால், நாம் போலியைக் களைந்து, புதிய புதிய அம்சங்களை மேற்கொள்ளலாம். நம் நாட்டின் கலை தீபம் சுடர் விட்டெரியும். அந்தச் சுடரில் பக்தி என்ற ஒளியை நாம் காண்போம்.



[*Photo by Courtesy:* Dept. of Archaeology, Govt. of India.]



## ஒவ்வொரு குடும்பத்திலும் அன்ருடம்

# ஓரணு அதிகம்

## சேமிக்கட்டும் . . . . .

ஒவ்வொரு இந்தியக் குடும்பத்திலும் அன்ருடம் ஒரணு போன்ற சிறுதொகையை அதிகப்படியாக சேமிக்கத் தொடங்கினுலும்கூட அவை மொத்தமாக சிறு சேமிப்பு ரூபத்தில் மாதம் 1 க்கு ரூ. 13.5 கோடியாகவும், வருடம் 1 க்கு ரூ. 162 கோடியாகவும் வளர்ந்துவிடுகிறது. கோடிக் கணக்கான மக்களின் சிறு சேமிப்புகளினுல் நம்நாட்டில் உத்தேசிக்கப்பட்டுள்ள அபிவிருத்தித் திட்டங்களையெல்லாம் நடத்தப்போதிய நிதி வசதி கிடைக்கும். நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளும், நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகளும் சிறுதொகையான ரூ. 5 மதிப்பில் கூடக் கிடைக்கின்றன என்பது நினைவிலிருக்கட்டும்.

இந்திய
அரசாங்கத்தின்
**சிறு
சேமிப்பு
திட்டத்தில்**
முதலீடு
செய்யுங்கள்.

*12* வருட
நேஷனல் சேவிங்ஸ்
சர்டிபிகேட்டுகள்

*10* வருட
டிரெஷரி சேவிங்ஸ்
டிபாசிட் சர்டிபிகேட்டுகள்

*10* வருட
நேஷனல் பிளான்
சர்டிபிகேட்டுகள்

*15* வருட
ஆன்னியுடி சர்டிபிகேட்டுகள்

போஸ்டாபீஸ் சேவிங்ஸ் பாங்க்
டிபாசிட்டுகள்

மேலும் விவரங்களுக்கும் இம் முதலீடுகள் சம்பந்தமான விதிகளுக்கும் ஸிம்லாவிலிருக்கும் நேஷனல் சேவிங்ஸ் கமிஷனருக்கு அல்லது உங்கள் ராஜ்யத்தைச் சேர்ந்த ரீஜனல் நேஷனல் சேவிங்ஸ் ஆபீஸருக்கு எழுதவும்.

DA 55/164 TM




ரா. சக்ரவர்த்தி

இரண்டாவது உலக மகாயுத்தம் முடியும் முன்பே, ஐக்கிய நாடுகளின் அரசாங்கங்கள், போர் ஓய்வுக்குப்பின் எழக்கூடிய பிரச்சினைகளைப்பற்றி சிந்திக்கத் தொடங்கினர்கள் என்பது நினைவிருக்கலாம். 1944-ம் ஆண்டு வேனிற்காலத்தில், ஜனதிபதி ரூஸ்வெல்ட், அப்போது ஐ. நா. சபையில் அங்கம் வகித்த 44 அரசாங்கங்களையும் பிரெட்டன்வுட்ஸ் என்னுமிடத்தில் கூட்டி, நாணய நிதி மகாநாடு ஒன்றை நடத்தினர். அதில் இப் பிரச்சினைகளில் அநேகம் ஆலோசிக்கப்பட்டன. அம் மகாநாடு, இரண்டு சர்வதேச ஸ்தாபனங்களை அமைக்க ஒப்புக்கொண்டது. அவை (i) சர்வதேச நாணய நிதி ஸ்தாபனம். (ii) சீரமைப்புக்கும் அபிவிருத்திக்குமான சர்வதேச பாங்கி.

இக் கட்டுரை பாங்கியைமட்டும் பற்றியது. இந்த பாங்கியும், நிதி ஸ்தாபனமும் ஒரே சமயத்தில் தோன்றி, வாஷிங்டன் நகரில் ஒரே கட்டிடத்தில் இருந்தபோதிலும், இவ் விரண்டும், வேறு வேருன தனித்தனி ஸ்தாபனங்கள் ; ஆண்டுதோறும் செப்டம்பர் மாதத்தில், அவை கூட்டாக ஆண்டு மகாசபை நடத்துகிற வேளை தவிர, வேறு ஒருபோதும், ஒன்றைப்பற்றி ஒன்று நினைப்பதுகூடக் கிடையாது என்பதை நாம் மனத்தில் வைப்பது அவசியம்.

பாங்கியைப்பற்றிச் சொல்லும்போது, முதலில், அதன் அமைப்பும் நிருவாகமும் என்பது பற்றியும், இரண்டாவதாக, தேவையான பணத்தை எப்படி அது கைப்பற்றுகிறது என்பது பற்றியும், மூன்ருவதாக, அந்தப் பணத்தை எப்படிப் பயன்படுத்துகிறது என்பது

பற்றியும், கடைசியாக, இந்தியாவுடன் அந்த பாங்கியின் தொடர்பு எப்படி என்பதைப் பற்றியும் விளக்கலாம். இந்த பாங்கி, பங்குதாரர்களின் பாங்கி. இதன் மூலதனம், ஒரு லட்சம் டாலர் பங்குகள் ஒரு லட்சம் கொண்ட, ஆயிரம் கோடி டாலர்கள் ஆகும். எடுத்துக் கொள்ளப்பட்ட மூலதனம் 905 கோடியே 80 லட்சம் டாலர்கள். இந்த பாங்கியில் பங்கு போடும் உரிமை, சுதந்திர நாடுகளுக்கு மட்டுமே உண்டு. தனி நபர்களுக்கு இல்லை. பங்கை ஒருவர் மற்றொருவருக்கு விற்கவோ வேறு விதமாகப் பராதீனம் செய்யவோ உரிமை கிடையாது. பாங்கியின் யாதாஸ்து விதிகளில் முதல் முதல் பிரெட்டன் வுட்ஸ் என்னுமிடத்தில் கையெழுத்துச் செய்த 44 நாடுகளின் பங்குத் தொகை அப்போதே நிர்ணயிக்கப்பட்டது. அதிகப் பங்கு போட்ட முதல் ஆறு நாடுகள் வருமாறு :

| | |
|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 317,50,00,000 |
| யுனைடெட் கிங்டம் | 130,00,00,000 |
| ரஷியா | 120,00,00,000 |
| சீனு | 60,00,00,000 |
| பிரான்சு | 45,00,00,000 |
| இந்தியா | 40,00,00,000 |

ரஷியா பிற்பாடு அங்கம் வகிக்க மறுத்துவிட்டது. அதனுல் இந்தியா 6-வது இடத்திலிருந்து 5-வது இடத்துக்கு ஏறிவிட்டது. அதனுடைய விளைவுகளைப் பின்னர் விவரிப்போம். பாங்கி அமைந்த பிறகு 16 புது நாடுகள் அங்கத்தினராகச் சேர்ந்துள்ளன. இரண்டு பழைய அங்கநாடுகள் - போலந்தும் செகோஸ்லோவியாவும் - விலகிக் கொண்டன. இன்று அங்க நாடுகளின் தொகை 58.

பாங்கியின் நிருவாக சபையில் ஒவ்வொரு அங்க நாட்டுக்கும் ஒரு பிரதிநிதி இருப்பார். அவருக்கு கவர்னர் என்று பெயர். தங்கள் நாட்டின் நிதி மந்திரியாகவோ அல்லது மத்திய பாங்கி கவர்னராகவோ இருக்கிறவர்களைத்தான் இந்த கவர்னர்களாக அனுப்புவது வழக்கம். இந்த கவர்னர்கள் ஆண்டுக்கு ஒருமுறை கூடி பாங்கியின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் சீர்தூக்கிப் பார்ப்பார்கள். மற்ற நாட்களில் அவரவருக்கு அமைந்த அலுவல்களைத் தபால் மூலம் கவனிப்பார்கள். பாங்கியின் அன்றாட வேலைகளைக் கவனிக்க 16 எக்சிகூடிவ் டைரெக்டர்களைக் கொண்ட சபையும், அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தலைவரும், ஏறக்குறைய 500 பேர் சிப்பந்திகளும் இருக்கிறுர்கள். பாங்கியின் நிருவாகச் செலவு 65 லட்சம் டாலர். பாங்கியின் முதன்மையான பெரும் பங்குதாரர்களில் ஐந்து அங்கத்தினர்கள், இந்த நிருவாக சபைக்குத்

தம் பிரதிநிதியை நியமிக்கும் உரிமை கொண்டுள்ளார்கள். ஆகவே அவர்கள் எப்போதும் அதில் இருக்கிறார்கள். ரஷியா அங்கத்தின ராகச் சேர மறுத்துவிட்டபடியால் நாம் ஐம்பெரு நாடுகளில் ஒருவ ராளுைம். இந்தியர் ஒருவர் அச்சபையில் நிரந்தரமாக வீற்றிருக்கிறார். பாக்கி 11 டைரெக்டர்களை மற்ற 53 நாடுகள் தேர்ந்தெடுக்கின்றன.

பாங்கியின் ஒப்புக்கொள்ளப்பட்ட மூலதனம் 905 கோடியே 80 லட்சம் என்றாலும், செலுத்தப்பட் மூலதனம் இதைவிட மிகக் குறைவுதான். இவ்வளவு பெருந் தொகை ஒரு சர்வதேச ஸ்தா பனத்திடம் ஒப்படைக்கக்கூடிய நிலையில் நாடுகள் இருந்தால், பொரு ளாதார முன்னேற்றம் எவ்வளவோ எளிதாய்ப் போயிருக்கும். இதைப்போன்ற பாங்கிக்கே அவசியம் இராதே! நடைமுறையில் மூலதனம் செலுத்தும் முறை சிக்கலானது. 20% மூலதனம் கேட் கப்பட்டது. இதில் 2% மட்டும் தங்கமாகவோ டாலராகவோ செலுத்த வேண்டும். உதாரணமாக, இந்தியா ரொக்கமாகக் கட்டி யிருப்பது 80 லட்சம்தான். மீதி 18% தன் சொந்தச் செலா வணியிலேயே அங்க நாடு செலுத்தலாம். இதைவிட முக்யமான அம்சம் என்னவென்றால் அதை அந்த நாட்டின் சம்மதி யில்லாமல் உபயோகப்படுத்தக் கூடாது. அந்தச் சம்மதமும் அங்க நாடு எந்தச் செலாவணியில் செலவழிக்கச் சொல்லுகிறதோ, அதையும் அடக்கி யிருக்கலாம். ஆகவே எடுத்துக்கொள்ளப்பட்ட மூலதனம் 900 கோடியில் சர்வதேச பாங்கி உபயோகிக்கக்கூடியது 18 கோடிக்கு மேல் இல்லை. அமெரிக்காவும் கானடாவும், தம் 18% பங்குகளையும் பயன்படுத்த நிபந்தனையின்றி அநுமதி அளித்துள்ளபடியால், பாங்கி யின் நிதி வசதிகளில், முறையே, 57 கோடியே 20 லட்சமும், 5 கோடியே 8 லட்சமும் கூடியுள்ளன. இன்னும் பல நாடுகள், குறிப் பாக யுனைடெட் கிங்டமும் இன்னும் சில ஐரோப்பிய நாடுகளும், தம் 18%-ல் ஒரு பகுதியை உபயோகிக்க அநுமதி கொடுத்தன. ஆனால் இந்த அநுமதி எல்லாம் நிபந்தனைகளுக்கு உள்பட்டவை. அதன்படி இங்கிலாந்து 6 கோடி பவுன் வரையில் உதவ இசைந்துள்ளது. ஆனால் காமன்வெல்த் நாடுகளுக்கு மட்டுமே அதைக் கடனாகத் தரலாம். செலவினம் இங்கிலாந்துக்கு விருப்பமாக இருப்பதோடு, இங்கிலாந்திலேயே செலவிடப்படவும் வேண்டும் என்பது நிபந்தனை.

சர்வதேச பாங்கியின் செலுத்தப்பட்ட மூலதனத்தில் உபயோ கப்படக்கூடிய பகுதி அதன் தேவைக்குப் போதாது. ஆகவே இந்த பாங்கியும் மார்கெட்டில் தொகைகளைக் கடன் வாங்கிவருகிறது. சமீபகாலம் வரை சர்வதேச லேவாதேவி செய்யக்கூடிய அளவுக்கு மீதியாகப் பணம் படைத்த மார்கெட்டு அமெரிக்க ஐக்ய நாடுகள் ஒன்றே. அந்த இடத்தில் 70 கோடி டாலருக்கும் அதிகமாகவே

பாங்கி கடன் திரட்டியுள்ளது. பிறகு வெவ்வேறு தடவைகளில் கானடா, ஸ்விட்ஸர்லாந்து, இங்கிலாந்து, நெதர்லாந்து ஆகிய நாடு களிலும் தொகைகள் கடன் வாங்க வாய்ப்பு ஏற்பட்டது. இந்த வாய்ப்புக்களை பாங்கி பயன்படுத்திக்கொண்டு 15 கோடி வரை கடன் எழுப்பியுள்ளது.

பாங்கி எப்படிப் பணம் திரட்டுகிறது என்பதைப் பார்த்தோம். அந்தப் பணத்தை அது எப்படிச் செலவிடுகிறது என்பதை இப் போது பார்ப்போம். அங்க நாட்டுக்கு மட்டுந்தான் அது கடன் தரலாம். அல்லது அங்க நாட்டின் உத்தரவாதத்தின்பேரில் வேறொரு நாட்டுக்குக் கொடுக்கலாம். மார்கெட்டு நிலைமையில் நியாயமான நிபந்தனைக்குட்பட்டு வேறு விதமாகக் கடன் வாங்க அந்த நாட்டுக்கு இயலாது என்று பாங்கி தீர்மானிக்க வேண்டும். விசேஷ சமயங்களில் தவிர, சாதாரணமாக. குறிப்பிட்ட திட்டங்களுக்கே கடன் தரவேண்டும். அந்தத் திட்டங்கள் அந் நாட்டின் பொரு ளாதார முன்னேற்றத்துக்கு உதவியாயிருக்க வேண்டும். தவிர விசேஷ காரணங்கள் இருந்தாலன்றி, அத் திட்டத்துக்கு வேண்டிய உள்நாட்டுச் செலவுக்கு கடன் தரப்படமாட்டாது. அந் நிலை நாட்டுச் செலாவணிக்கு மட்டுமே கடன் தரப்படும். கடன் தொகைகளை இன்ன நாட்டில்தான் செலவழிக்கலாம் என்று பாங்கி நிபந்தனை ஏதும் போடக்கூடாது. பாங்கி கொடுக்கும் பணத்தை உலகமுழு தும் எல்லா நாடுகளிலுமிருந்தும் டெண்டர்கள் தருவித்துத்தான் ஒப்பந்தம் செய்யவேணும் என்று பாங்கி வற்புறுத்துகிறது. எந்த நாட்டிலிருந்து சாமான்கள் வாங்குகிறார்களோ, அந்த நாட்டுச் செலா வணியிலேயே கடன் வழங்கப்படுகிறது. திருப்பித் தரவேண்டிய தும் அந்நாட்டுச் செலாவணியில்தான்.

சர்வதேசக் கடன் வழங்குவதற்கும், உள்நாட்டில் கடன் கொடுப் பதற்கும், ஒரே ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. உள்நாட்டில் கடன் கொடுத்தால், கொடுப்பவர் கவனிக்க வேண்டியதெல்லாம் எந்த திட்டத்துக்கு கடன் தருகிறோமோ அந்த திட்டம் கடன் திருப்பித் தரக்கூடிய வகையில் லாபகரமாயிருக்குமா என்பதுதான். சர்வ தேசக் கடன் தரும்போது இதுமட்டும் பார்த்தால் போதாது. கடன் வாங்குகிற நாட்டின் நிதிநிலைமை நன்றாயிருக்கிறதா, லாபகரமானதா, அதாவது இறக்குமதிகளைவிட ஏற்றுமதித் தொகை அதிகமாக இருக் கிறதா, அயல்நாட்டுக் கடனுக்கு ஈடு செய்ய முடியுமா, என்பதை யெல்லாம் கடன் கொடுக்கிறவர் கவனிக்கவேண்டும்.

ஆகையால் கடன் வேண்டும் என்று எந்த நாடாவது விண்ணப் பித்துக்கொண்டால், பாங்கி செய்கிற முதல் வேலை அந்நாட்டின் கடன்

தீர்க்கும் சக்தியை மதிப்பிடுவதுதான். இதற்கு அந் நாட்டின் நிதி பொருளாதார மூலங்கள், நிதி பொருளாதார கொள்கைகள், அரசாங்கத்தை நடத்துகிறவர்களின் திறமை, அந் நாட்டு அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மை, இன்னும் இதுபோன்ற விஷயங்களை அலசி ஆராய்கிறது. பிறகு ஒவ்வொரு நாட்டிற்கும் இவ்வளவு வரை கடன் தரலாம் என்று வரம்பு வகுக்கிறது.

கடனுக்கு வட்டி குறிப்பது, கடன் தருகிற சமயத்தில் பணத்துக்குள்ள மதிப்பின் பேரில்தான். அதாவது பாங்கியே கடன் எழுப்பினல் என்ன வட்டி கொடுக்குமோ அந்த வட்டி. இதோடு யாதாஸ்து விதிகளின்படி ஒரு கமிஷனையும் சேர்க்கவேண்டும். அது 10%. இந்தக் கமிஷனை ஒரு காப்பு நிதியில் சேர்த்து வைத்து, வாராக் கடன்கள் தங்கிப்போனல் ஈடுசெய்து கொள்வார்கள். இப்போது பாங்கி வழங்கும் வட்டி சுமார் $4\frac{3}{4}$, $4\frac{7}{8}$%. கடன் திருப்பிக் கொடுக்கும் கெடு, சொத்தின் ஆயுளைப் பொறுத்தது. சொத்து (திட்டம்) உற்பத்தி செய்யத் தொடங்குமுன் அசலைத் திருப்பித் தரத் தொடங்க வேண்டியதில்லை. சொத்தின் தேய்மானத்தைக் கழித்துக்கொண்டே வந்து பூஜ்யம் ஆவதற்கு சில வருஷங்களுக்கு முந்தியே கடன் தீர்ந்துவிட வேண்டும்.

வட அமெரிக்கா தவிர எல்லாக் கண்டங்களிலுமாக 40 நாடுகளுக்கு 240 கோடி டாலர் இதுவரையில் பாங்கி கடன் கொடுத்திருக்கிறது. பூகோள ரீதியில் கடன் விநியோகம் வருமாறு:—

| | | |
|---|---|---|
| ஆப்பிரிக்கா | 23 கோடியே | 20 லட்சம் டாலர் |
| ஆசியா | 27 | 50 |
| ஆஸ்திரேலியா | 25 | 80 |
| ஐரோப்பா | 92 | 80 |
| லத்தின் அமெரிக்கா | 57 | 90 |

இந்தப் புள்ளிகளிலிருந்து ஆசியாவும் ஆப்பிரிக்காவும் பாங்கியில் வாங்கிய கடன் மிக மிகக் குறைவென்பது தெளிவு.

ஆசியாவுக்கு அளித்த $27\frac{1}{2}$ கோடியில் இந்தியாவுக்கு 12 கோடியே 60 லட்சம் கிடைத்துள்ளது. நாம் முதல் முதல் அயல் நாட்டுக் கடன் விரும்பிய 1949-ம் ஆண்டில்தான், இந்தியாவுக்கும் பாங்கிக்கும் தொடர்பு ஏற்பட்டது. அவ் வாண்டு ஆரம்பத்தில் பாங்கி ஒரு தூது கோஷ்டியை அனுப்பிற்று. அவர்கள் நம் கடன் தீர்க்கும் திறமையை ஆராய்ந்தார்கள். நமக்குக் கடன் தரலாம் என்று சொன்னர்கள். எவ்வளவு என்பதைச் சொல்லவில்லை. 1949 முதல் நாம் 7 கடன்கள் வாங்கினேம். முதல் கடன், நம் ரயில்வேக்களைப் புதுப்பிக்க. இரண்டாவது கடன், பல ஆண்டுகளாக உத்தரப் பிரதேசத்திலும் மத்திய இந்தியாவிலும் நில மீட்சி செய்துவரும் மத்ய டிராக்

டர் ஸ்தாபனத்தின் வேலைகளுக்கு முதலீடு செய்ய. தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு கார்பொரேஷனுக்காக இரண்டு கடன்கள் வாங்கினோம். அதில் ஒன்றின் பணத்தைக்கொண்டு, பொகாரோ மின்சார யந்திரங்களை வாங்கினோம். மற்றதை அந்த அணை கட்டுவதற்கும் பாசனத்துக்கும் மின்சார அபிவிருத்திக்கும் பயன்படுத்தி வருகிறோம். இந்தியத் தனியார் தொழில்களுக்கு மூன்று கடன்கள் வழங்கப்பட்டுள்ளன. இவற்றுக்கு இந்திய அரசாங்கம் உத்திரவாதம் அளித்துள்ளது. முதல் தனியார் கடன் 1952-ல் இரும்பு எஃகு உற்பத்தியைப் பெருக்குவதற்கென்று இந்தியன் அயர்ன் அண் ஸ்டீல் கம்பெனிக்குத் தரப்பட்டது. இரண்டாவது தனியார் கடன் 1954-ல் பம்பாயில் ஒரு மின்சார நிலையம் கட்டுவதற்கென, டாடா ஹைட்ரோ எலக்டிரிக் ஏஜென்சீசுக்கு கொடுக்கப்பட்டது. கடைசியாக, போன வருஷம், இந்தியக் கைத்தொழில் மூலதன ஸ்தாபனத்துக்கு வழங்கப்பட்டது. இப்போது கோயனு ஜல மின்சார திட்டத்துக்கு ஒரு கடன் கேட்டுக் கொண்டிருக்கிறோம். இவ்வாண்டில் அது உத்தரவாகுமென எதிர்பார்க்கிறோம்.

முதல் ஐந்தாண்டு திட்டத்தில் அயல் நாட்டுச் செலாவணிப் பற்றாக்குறை நாம் நினைத்த அளவுக்கு ஏற்படாததால், சர்வதேச பாங்கியில் நம் லேவாதேவி சற்று சிறிதாகவே இருந்தது. பொதுவாக நமக்கு டாலர் செலாவணிதான் தேவைப்பட்டதே தவிர, மற்ற நாட்டுச் செலாவணி சம்பந்தமாய் குறைவேயில்லை. அதனால் பாங்கியில் கடன் வாங்குவதை சுருக்கிக்கொண்டோம். டாலர் செலவினங்களுக்கு மட்டுமே கடன் வாங்கினோம். இப்போது நிலைமை வேகமாக மாறி வருகிறது. இரண்டாம் ஐந்தாண்டு திட்டத்துக்குத் தேவையான அயல் நாட்டு நாணயச் செலாவணி, நாம் நம் சொந்த ஆஸ்திகளிலிருந்தே ஈடு செய்துகொள்ளக் கூடியதைவிட, கணிசமான அளவு அதிகமாய் இருக்கிறது. ஆகையால், சர்வதேச பாங்கியில் கடன் வாங்கவேண்டிய அவசியம் இனி அதிகரிக்கும். அந்த ஸ்தாபனத்திலிருந்து கடன் கொடுத்து, நம் தேவைகளில் கணிசமான அளவை நிறைவு செய்வார்கள் என்று நம்புகிறோம்.



# இணைக்கும் பிணக்கும்

"சுகி"

"உலகம் தெரியாத பயல் அப்படித் தான் சொல்லுவான் -"

எனக்கும் காந்திமதிக்கும் ஏற்பட்ட மனஸ்தாபத்தைச் சமன் செய்ய வந்த பெரியவர் சொன்ன சொல், உலகம் தெரியாத பயல்.

இத்தனை காலமும் எனக்கு உலகம் தெரியும் என்று எண்ணிக்கொண்டிருந் தேன். உலகம் என்பது என் வீட்டுக்கு வெளியே இருக்கிறது; வீட்டுக்கு உள்ளே என்பது பெரியவர் வார்த்தை. உலகத்தைத் தெரிந்துகொண்டு வீட் டுக்குள்ளே வருகிறதென்று கிளம் பினேன். வெளியுலகம் எத்தனை உத் சாகமாக இருக்கிறது! வீட்டுக் குள்ளே அழுது வடியும் காந்திமதி போல இல்லை.எங்கும் சுருசுருப்பும், உத் சாகமும் தாண்டவமாடின. உண்மை யில் உலகம் தெரியாதவனாக இருக் கிறேன்; உலகம் என்பது சுருசுருப் பும் ஆனந்தமும் நிறைந்த இடம். நான், வீதி வழியாகப் போய்க்கொண் டிருக்கும்போது, ஒட்டலிலிருந்து தாளித வாசனை மூக்கைத் திருகிற்று; திருகத்தான் செய்தது. அதைப் போன்ற வாசனை ஒருநாள்கூட வீட்டுக் குள் வரவில்லை; நான் உலகம் தெரி யாத பயலாகத்தானே இருந்துவிட் டேன்.!

பசி வயிற்றுக்குள்ளே பூகம்ப உணர்ச்சிகளை உந்திற்று; பசித்த வுடன் வீட்டிலே உண்ணமுடியுமா? வகைவகையாக உணவுகள் உண்டா! நமக்கு வேண்டிய வகை யைக் கேட்டு வாங்கும் வாய்ப்பு ஒட்டலில் இருக்கிறது. பொங்கல், வடை, இட்லி, தோசை; அதிலும் இரண்டு ரகம்; இல்லை, மசாலாதோசை சேர்த்துக்கொண்டால் மூன்று ரகம்; அடாடா நெய் என்றும், ஸ்பெஷல் என்றும், எத்தனை வகையாகத்தோசை இனங்கள் இருக்கின்றன! இட்லிக்கு மிளகாய்த்தூள், சட்னி; இதிலும் சலவைச்சட்னி, கட்டிச்சட்னி, தண்ணீர் சட்னி என்ற பாகுபாடு. சாம்பாரும் போட்டுக்கொள்ளலாம். வீட்டுக்குள் இத்தனைவகை செய்யச் சொன்னால், சொன்னவன் தலையல்லவா சட்னியாகி விடும். சொன்னால், சொல்லும் தைரி யம் இருந்தால், செய்யும் பைத்தியக் காரத்தனம் காந்திமதிக்கு ஏது?

காப்பி, டீ, கொக்கோ, ஓவல், எது வேண்டுமோ அதைக்குடிக்கலாம்; உண்மையில் நான் உலகம் தெரியாத வன். வீட்டுக்குள்ளே இத்தனை வசதி கள் ஏது! பசிக்கப் பசிக்க உள்ளே போனேன். "அண்ணா" என்ற வார்த்தை எத்தனை அன்பு உருவிலே எதிரே வந்து நிற்கிறது! வாய்நிறைய ஒரு நாளாவது "அத்தான்" என்று சொல்லுகிறாளோ!டிராமாவில் யாரா வது "அத்தான்" என்று கூப்பிட் டால் காந்திமதிதான் அன்போடு கை தட்டுவாள்! அதைப்போல அத்தான் என்று கூப்பிடவேண்டும் என்னும் காதல் உலகத்தை யார் அவளுக் குச் சொல்லுவது! உலகம் தெரிந்து கொண்டு அதைச் சொல்லாமல் இருப் பது நியாயமா! 'கற்க கசடற கற்ற பின் நிற்க அதற்குத் தக' என்று படித் தாளே! அதன்படி அவள் செய்ய வேண்டாமா! அவள் உலகம் தெரிந்த வள் என்று நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்.

வேண்டியதை விரும்பியமட்டும் வயிறு புடைக்கத் தின்றுவிட்டு, நான் வீதிக்கு வந்தேன். பணத்தைக் கொடுத்துவிட்டுத்தான் வந்தேன். எனக்கு உலகம் என்பதைக்காண

ஆசை, மரங்கள் என் கண்ணிலே பட்டன; கருவேப்பிலைமரம் ஒன்று; அதிலே பசுமையான இலைகள்; நான் கருவேப்பிலைக் கிளைகளை மரத்திலே பார்ப்பது இதுதான் முதற் தடவை; ஓட்டல் மோரிலே கொப்புக்கொப்பாகக் கண்டிருக்கிறேன். கருவேப்பிலை மோரிலே வளர்வன அல்ல; அவை ஒருவகை மரத்திலே தளிர்க்கும் இலை என்பதைக் கண்டபோது, என் கண்களிலே புதிய ஒளி பிறந்தது. ஏழையின் தலைமீது கூடையோடு ஆரஞ்சுகள், மாம்பழங்கள் கொய்யாமுதலான கனி வர்க்கங்கள் காய்ப்பதாக எண்ணிக்கொண்டிருந்தேன். உலகத்தைக் காணும் கண்ணோடு கிளம்பியதும் அவை தோட்டங்களிலே காய்ப்பனவாகவும், அப்படிக்காய்த்துக் குலுங்கும் காட்சிகள், தலைமீது சுமந்து வருவதைவிட அழகுணர்ச்சி அதிகம் தருவனவாகவும் தோற்றின.

வீட்டுக்கு வெளியே எத்தனைகோடி இன்பங்கள் இருக்கின்றன! வீட்டுக்குள்ளே கொசுவும், விளக்கு வெளிச்சம் வைத்ததும், எண்ணற்ற வகை வகையான பூச்சிகளும் வந்து, தாங்கள் கடவுளின் சிருஷ்டி விநோதங்கள் என்று பறைசாற்றி, நமது ரத்தத்தை உறஞ்சியும் விளக்கை அவித்தும் போடுகின்றன. உலக சிருஷ்டிகளிலே சிறந்த பூச்சி இனம் மூட்டைப்பூச்சிதான் என்று எண்ணியிருந்த என் அறியாமையை, வெளியே வந்ததும் அறிகிறேன். வண்ண வண்ணப் பூச்சிகள், எத்தனை நிறங்களிலே பூங்காவிலே உலாவுகின்றன; பட்டுப்பூச்சிகள்; தேனுண்ண வரும் வண்டினங்கள்; குளவிகள் கூட அழகுமயமாகத் தோற்றம் தருகின்றன. அதன் உடல் வண்ணம்! கறுப்புத் தலையைச் சிறப்பிக்கும் சிகப்புக் கொடுக்கு! ஆகா!

வீட்டுத்தோட்டத்திலே தழைக்கமுயலும் அவரைப்பந்தலில் காணும் முசுக்கட்டை, கறுப்புக் கறுப்பாக, அடையடையாக வந்து அழகுமயமாகப் பூத்துக் குலுங்கும் அவரைப் பூக்களை அழிப்பதைத்தான் பார்த்திருக்கிறேன்; அவரைக்காயின் ருசியைவிட அதன் நீலவர்ணப் பூக்களே என் உள்ளத்தில் பெருவாரியாக இடம் பெறும். மாதுளை ருசியானது என்று சொல்வார்கள்; எனக்கோ ரத்த வர்ணம் கொண்டிருந்தும், அதன் மென்மையான தன்மையால் என் உள்ளத்தைக் கவரும் பூக்களில் மாதுளம் பூக்களுக்கு தனி இடம் உண்டு. மாம் பூக்களுக்கு இவ்வளவு மணம் உண்டா! காப்பியின் மணம் தவிர்த்து வேறு மனம் தெரியாத அப்பாவியாக வளர்ந்துவிட்டேனே; உண்ணக்கூட பயன் இல்லாத சரக்கொன்றை மலர்கள், என்ன அழகாக தங்க ரசக்குண்டுகள் போல, வட்ட வட்டமாக, கொத்துக்கொத்தாகக் காட்சி தருகின்றன. உணவுப்பொருள்கள் மட்டுமே இனிமையானவை யன்று, உணவாகாத பொருள்களும் கண்ணுக்கும் கருத்துக் உணவாகும் என்ற தத்துவம் அறியாமல், ஏன் வீட்டுக்குள் அடைந்து கிடந்தேன்!

கவிதையில் மட்டுமே குயில் அருமையான பறவை, அதன் குரல் தேவகானம் என்று ரசித்து வந்த நான், உலகம் தெரியாதவன் என்பது உண்மை; உலகத்திலே, வீட்டுக்குள் மட்டும் இன்பம் இல்லை; உலகப்பரப்பிலே இயற்கை யெங்குமே ஒரே பாஷை பேசுகிறது; ஒரே வகைத்தான இன்பம் நல்குகிறது; "ஈசல்போல" என்ற அவச் சொல்லுக்கும் உலகத்தில் இடம் இருக்கிறது. அந்த ஈசல்தான் எத்தனை ஆர்வத்தோடு உலகத்தைக் காண ஆசையுடன் சிறகடித்துப் பறக்கிறது! முயற்சிக்குப் பயன் உண்டு என்பதை ஈசல்கள் சொல்லுகின்றன. இறக்கை இழந்த நிலையிலும் அவற்றுக்குள்ள மண இறகு துடிப்பதைக் காண்கிறேன். குயிலின் குரல், அதன் ஏக்க ஸ்தாயிகள், எங்கோ ஒரு உலகத்திற்கு என்னைத் தூக்கிப்போகின்றன; பசுவின் "அம்மா" என்ற குரல் என்னைத் தமிழ்தாயின் காலடியில் கொண்டு வந்து நிறுத்திற்று-உலகத்து பாஷைகள் எத்தனையோ

இருக்கலாம்; பசு சொல்லுகின்றஇந்தச் சொல், வேறுபாஷைகளில் இருந்தால், அதுவும் தமிழ்ப் பாஷை போல இனிமையாகவே இருக்கும். தெரு நாய் என்று, இழிவின் பிரதிநிதியாக இருக்கும் நாயிடம், வீரம் இருக்கிறது. தன்னைத் தாழ்வாகப் பிறர் விரட்டும் போது எத்தனை ஆத்திரத்தோடு பாய்கிறது ! இயற்கை, மிருக உருவத்தில் என்றும் பயன் உள்ளதாகவும், பார்க்கப் பார்க்க அலுப்புத் தாரதபடியும் அடைந்துகிடக்கிறது.

ஆனால்... ! மனித உருவத்திலே இயற்கை செய்கிற லீலைகள் எனக்கு விளங்கவில்லை. காந்திமதியின் செயலை விட, உலகத்து மக்களின் செயல்கள், சிந்தனைகள், விசித்திரமாகவும் மர்ம்மாகவும் இருக்கின்றன. மனித உருவத்தைப் போன்ற அழகான பொருள் உலகமெங்கும் தேடினாலும் இல்லை தான்; ஆனால் மனித மனத்தைப்போல வெறுப்பானது, உலகம் முழுவதும் தேடினாலும் இல்லையே! உலகத்து சிருஷ்டிகளான, ஊர்வன, பறப்பன, நீந்துவன அத்தனையும்-வளரும் செடிகள் உள்பட-ஆதியில்என்னசெய்துவந்தனவோ அதையே செய்து கொண்டிருகின்றன. பள்ளத்தைக் கண்டு ஓடிய தண்ணீர் ஓடிக் கொண்டேயிருந்தது ; இன்றும் நாளையும் அப்படியே செய்யும். மனிதன் மனத்துள்ளே புகுந்த செயல், இயற்கையை மாற்றுகிறது. பள்ளத்தைவிட்டு மேட்டுக்கு அதை ஏற்றுகிறது மனித மனம். எது எது எங்கே இயற்கையோ அதற்கு எதிராகச் செய்வது நாகரீகம், வளர்ச்சி, பயன் என்று கண்டுகொண்டோம். உலகத்திற்கு வேண்டுவனவும் வேண்டாதனவும் செய்கிறவன் மனிதன் ; வேண்டுவன மட்டுமே செய்வது இயற்கை. இயற்கையை வெல்லும் போதே, மனிதன் வேண்டாதை விரும்பி விட்டான் என்று பொருள்.

என் சிந்தனையில் தடை ஏற்பட்ட போது, நான் திகைத்தேன். உலகத்தை என்னால் புரிந்துகொள்ள முடியாது ; இயற்கை—உலகம் அன்புமயமானது: அழகுமயமானது; அதைப் புரிந்து கொள்ளக்கூடும் ; ஆனால் மனித உலகம் வெங்காயம் போல உரிக்க உரிக்க ஒன்றுமற்ற நிலையை அடைகிறது. பகுத்துப் பார்க்கும் அறிவினால் எனக்கும் அவளுக்கும் சண்டை நேரிடுகிறது. எங்கள் அறிவினால் இன்பத்தைவிடத் துன்பமே அதிகமாகிறது. பகுத்து அறியாத தம்பதிகள் எத்தனை இன்பத்தோடு வாழ்கிறார்கள்! சிட்டுக் குருவிபோல, மாடப் புறாப்போல என்று சொல்லுகிறார்களே, இவை படிக்காத தம்பதிகள் விஷயத்தில் பொருந்தும். பட்டண வாழ்க்கை வாழுகின்ற தம்பதிகளின் வாழ்க்கையில் பரிவைவிடப் பிரிவே அதிக எண்ணத்தைத் தருகிறது ; இய்ற்கை பிறப்பித்த அத்தனை ஜீவராசிகளும் ஆண் - பெண் சேர்ந்து வாழ்வதே இன்ப உலகம் என்று கண்முன்னால் காட்டி நிற்க, மனிதன் மட்டும் இயற்கைக்கு மாறாக நடக்க முற்படுதல் முன்னேற்றமா !

என் தலை மீண்டும் சுற்றியது ; உலகத்தைக்கான முற்பட்டவர்கள் கையாண்ட வழியை எண்ணினேன் ; சமயவாதிகள், சமூகப் பணியாட்கள் கண்டது என்ன ! உலகம் சாதியற்றது ; பிரிவு வேற்றுமை உணர்ச்சியற்றதாக இருத்தல் வேண்டும்.' இப்போது எனக்குப் புரிந்தது. நான் ஆண்சாதி என்ற எண்ணதோடு நடக்கிறேன் ; காந்திமதி பெண்சாதி என்ற பெருமிதத்தோடு நடக்கிறாள். இந்தச் சாதிஉணர்ச்சியை மறந்துவிடும் தியாக உணர்ச்சி விலங்கினங்களுக்கு இருக்கின்றன. மனித குலம் என்று பெருமை பிற்றிக் கொள்ளும் எனக்கு இல்லையே ! ஆபத்தில் இனவேற்றுமை பிறப்பது கிடையாது ;லாபத்தில் இன வேற்றுமைகள் பிறக்கின்றன.

ரெயில் விபத்து நேரிடுகிறது. முதல் வகுப்புப்பிரயாணிகள் இத்தனைபேர்கள், இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் இத்தனை பேர்கள், மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் இத்தனை பேர்கள் இறந்தார்கள் என்று அறிக்கை வெளி

வருதில்லை; ஆனல் வசதியைச் செய்ய வரும்போது வகுப்புப் பிரிவினைகள் கிளைக்கின்றன; ஒருசில வசதியைப் பெற, நான் ஆண் சிங்கம் என்று கர்ஜனை செய்கிறேன்; ஒருசில வசதிகளைப் பெற நான் பெண்மான் என்று கண்ணீர் உகுக்கிருள் காந்திமதி.

எங்கள் வாழ்விலே 'சாதி' உணர்ச்சி எங்களையறியாமல் ஊன்றியிருக்கின்றன. சதையும் உணர்ச்சியும் நிறைந்த மானிடப் பெண் அவள் என்று நானும், அதேபோல மானிட வடிவம்கொண்ட மனிதன் நான் என்று அவளும் எண்ணிவிட்டால் போதும். இந்தச் சிந்தனையைச் செயல்படுத்த மனம் மட்டும் இல்லையே!

ஊசிகொண்டு என்னைக்குத்தினலும் சரி; காந்திமதியைக் குத்தினலும் சரி, ரத்தம் சொட்டுகிறது; இரண்டு பேருக்கும் பசித்தால் தலை சுற்றுகிறது; பசிதீர்ந்தால் பாடத் தோன்றுகிறது; இன்பத்திற்கும் துன்பத்திற்கும் ஊடாக இருவரும் ஊசல் ஆடுகிருேம்; நம்பிக்கைக்கும் அவநம்பிக்கைக்கும் பாலம் அமைத்துக்கொண்டு மாறி மாறி உலாவுகிருேம்; புதுமையான கனவுகள் இருசாரார்க்கும் பிறக்கின்றன. மகழ்ச்சி வெள்ளத்திலே முங்கி மூழ்க வேண்டுமென்ற எண்ணமோ சொல்லுக்கடங்காது; அன்பைக்கொடுத்து அன்பை வாங்கு என்று தெரிந்தும், செய்கையில் மட்டும் இப்படி நடந்துகொள்வானேன்!

கண்டுகொண்டேன்; உண்மை புலனகிவிட்டது. அதிக அன்புதான் இத்தனை கொடுமையாகத் தகிக்கிறது. சூரியனின் உஷ்ணத்தை நாம் தாங்கிக்கொள்ள முடியும்; அந்த உஷ்ணத்தைப் பெற்றுக்கொண்ட மணலில் நிற்பது முடியாத காரியம். தாழ்வு உயர்வு, வலிமை மென்மை, ஆண் பெண் என்ற மனப் பாங்கிலே, அன்பு விழவிழ, அச்சூடு கொடிய பாலைவனத்தைப் போன்றே தகிக்கிறது இனி இத்தகைய பிரிவுக்கு இடங்கொடுக்கக் கூடாது; இயற்கையில் இப்பேதம் இல்லை: பாழான மனித மனத்திலே தான் இந்தப் பேதம் வந்துவிட்டது. விட்டுவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு வீடு திரும்பினேன்.

காந்திமதி உண்ணுமல், அழுது புலம்பிக்கொண்டிருந்தாள். அவள் கண்களிலே ஏக்கம், கவலை; இவை வெகு தெளிவாகத் தெரிந்தன. ருசியான உணவாகப் பார்த்து உருக்கிய நெய்யைக் கொட்டி, மணமான உணவு தயாரித்திருந்தாள். கவிழ்ந்த தலையோடு உண்ண ஆரம்பித்தேன்.

"ஏதோ பெண் புத்தி, என்னை மன்னித்துவிடுங்கள்" என்று கண்ணீர் சோர நெஞ்சம் உருகச் சொன்னுள். என் கண்ணில் நீர் வழிந்தது.

"நான் தவறு செய்தேன். நீதான் மன்னிக்க வேண்டும்."

எங்களுக்குள் யார் யாரை மன்னிக்க வேண்டுமென்ற சர்ச்சை எழுந்தது. இது ஒன்றும் எங்களுக்குள் புதிதான காரியமன்று; இயற்கையின் நியதிப்படி, பருவகாலங்கள், மழை, வெயில், பனி என்று காட்சி தருவன போல, எப்போதோ ஒரு சில மாதங்களுக்குள்ளாக எங்களுக்குள் மனஸ்தாபம் பிறக்கும். எப்போதும் காற்றுடன் கலந்து மழை பெய்யும்; இன்று சூருவளிபோல ஏற்பட்டது; அதனல்தான் அடுத்த வீட்டுக்காரர் வந்து, "அவன் உலகம் தெரியாதவன்" என்று சொல்லும் நிலைமை விந்துவிட்டது.

சூருவளி எப்போதும் நன்மையைச் செய்யாது: பலவருடங்களுக்கு ஒரு முறைதான் அது நன்மை பயக்கும். இன்னும் ஐந்தாறு வருடங்களுக்கு என் குடும்பத்தில் சூருவளிக்கு இடங்கொடுக்கக்கூடாது என்று, காந்திமதியும் நானும் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டோம். உலகத்திலே சமாதான ஒப்பந்தங்களுக்கு உள்ள ஆபத்து. எங்கள் ஒப்பந்தத்திற்கும் உண்டு என்பதைப் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஜோடிப் புருக்களாய், இன்பைப் பேடையும் சேவலுமாய், மானும் கலையுமாய் வாழும் பெருமை யுடையவர்கள் நாங்கள் என்று, விலங்கினங்களையும், பட்சி ஜாலங்களையும் ஒப்புவமை காட்டும் மனிதர்கள், தாங்கள் பகுத்தறிவுள்ளவர்கள் என்பதை நிலைநாட்டத்தான் சண்டை போடுகிறார்கள் போலும்; மனஸ்தாபம் கொள்ளுகிறார்கள் போலும்.

மனித வர்க்கம், மிருகம் பட்சி இவற்றிலிருந்து வேறு பட்டதென்பதற்கு ஒரே சான்று, இணைந்து வாழ வேண்டியவர்கள் இடித்துச் சண்டை போடுவது மனித குலத்தில்தானே! நாங்கள் இதற்காக வருந்துகிறோம்; தற்காலிமாகத்தான். சண்டையிடுகிறோம்; தற்காலிகமாகத்தான். சமாதானம் செய்து கொள்ளுகிறோம்; தற்காலிகமாகத்தான். எல்லாவற்றிலும் தற்காலிகமான எண்ணம் போய், விலங்கினம் பட்சியினம் போல நிரந்தரமாக வாழும் பெருமை மனித குலத்திற்கு என்று வருமோ!



# நாதம்

**மாதிரிமங்கலம் ராமச்சந்திரன்**

சங்கீதத்தைக் கேட்கும் பச்சைக் குழந்தையும், அதிலே மயங்கி, வயிற்றுப் பசியையும் மறந்து சிரிக்கிறது. மகுடி வாசிக்கும் பொழுது நாகம் படமெடுத்து ஆடுகிறது. வேணு கானத்தில் கட்டுண்ட நாகம் படமெடுத்து ஆடக் காரமென்ன ?—நாதத்தின் மகிமை தான் !

சங்கீதத்தின் ஜீவநாடி நாதம்.

பக்த பராதீனன், பக்தவத்ஸலன் என்ற நாமங்களால் அழைக்கப்படும் பகவான்,

> **"நாஹம் வஸாமி வைகுண்டே,**
> **நயோகி ஹ்ருதயே ரவௌ,**
> **மத்பக்தா யத்ரகாயந்தி,**
> **தத்ர திஷ்டாமி நாரத"**

என்று கூறியிருப்பதாக ஐதீகம். கடவுளை வழிபட பல மார்க்கங்கள் உள்ளன—ஸ்நானம், ஜபம், தபம், யோகம், தியானம் முதலியன. இருந்தாலும், நாத உபாஸனை மூலம் பகவானை வழிபடுதல் மிகவும் எளிது. இதே பொருளைத்தான் "மத்பக்தா யத்ரகாயந்தி தத்ர திஷ்டாமி நாரத" என்ற வாக்கியம் விளக்குகிறது.

நாதத்திற்கு ஈச்வராதிகளும் கட்டுப்பட்டார்கள். நாதத்தின் வசப்பட்ட பசு சிசு இவைகளுக்கு ஸாஹித்யத்தைப்பற்றி என்ன

தெரியும்? அவைகள் தன் வசமிழந்தது நாதத்தின் மகிமையா லேயே.

உலகம் உண்டான காலம் முதல் நாதமும் உண்டு. காற்றில் அசையும் மரங்களினின்று எழும் சப்தம்—நாதம். பக்ஷி ஜாலங்கள் எழும்பும் த்வனி—நாதம். உலகில் ஏற்படும் எந்தச் சலனமும் நாதத்தை உற்பத்தி செய்கிறது என்ருல் மிகையாகாது. நாதம் இல் லாத இடமில்லை. ஆகவே நாதத்தை நாம் கடவுளாகவே பாவிக் கிருேம்.

பண்பட்ட முறையில் உருவாகும் நாதமே சங்கீதம். இதே முறையில், சப்த ஸ்வரங்களின் பலவிதச் சேர்க்கையே உயர்ந்த சங் கீதம். ஸ்வரங்கள் ஏழே ஏழுதான். இவைகளை இசைக் கலைஞன் இசைத்து எழுப்பி ரஸிகர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளு கிருன். ஒரே சங்கராபரணத்தை பலர் பாடும்பொழுது, ஸ்வரஸ் தானங்கள் ஒன்ருக இருந்தாலும், கையாளும் முறையில் வித்தியா ஸம் இருக்கிறது. மணிக் கணக்காக ஒருவர் சங்கராபரணம் பாடி யிருப்பார்; ரஸிக மஹா ஜனங்கள் கேட்டிருப்பார்கள். ஆனுல், கொட்டகையை விட்டு வெளியில் வந்ததும் காதில் நிற்காது. இதை நாதத்தின் நுட்பத்தை அறியாத, ஜீவனில்லாத பாட்டு என்று சொல் வதுதான் சரி.

உணர்ச்சியுள்ள, பாவமான, இதய பூர்வமான சங்கீதம் ஒருவ னுக்குக் கிடைத்துவிட்டால் அவனைப் போன்ற பாக்யசாலி யாருமே கிடையாது. முறைப்படி நாத உபாஸனை செய்து பாடுபட்டால், நிச்சயமாக ஒருவன் இந்நிலையை எய்தலாம்.

வெறும் "அ"காரமாக நாம் பாடும்பொழுது, நாதம் முழு ரூபத் துடன் வெளிப்படுகிறது. அதையே 'இ'கார 'உ'காரங்களாகப் பாடும்பொழுது, நாதம் அடங்கி வெளிப்படுகிறது. ஒவ்வொரு ஸ்வரமாக, சோதித்து, கமக சுத்தத்துடன், எப்படி நாதத்தைப் பயின்ருல் எப்படிப்பட்ட சூழ்நிலை உண்டாகிறது என்பதை அனுபவ வாயிலாக அறிந்து ஸாதகம் செய்யவேண்டும். பாடிப் பாடிப் பக்குவம் செய்துகொண்ட, அதாவது நாதத்தை தன்வசம் செய்துகொண்ட கலைஞனுக்கு, சுய அனுபவமும் பிறரைக் கட்டுப்படுத்தும் சக்தியும் உண்டாகும்.

கடவுளே நாதத்திற்குக் கட்டுப்படுவார். இதற்கு ஒரு உதா ரணம்.

ஒரு சமயம் சரஸ்வதி தேவிக்கும் நாரத மஹரிஷிக்கும் சங்கீதம் சம்பந்தமாக வாக்குவாதம் ஏற்பட்டதாம். ஒரு நாள் ஸரஸ்வதி தேவி வீணை வாசித்துக் கொண்டிருந்தபோது, நாரதர், "அம்மா,

நீங்கள் வாசிப்பது ஸுஸ்வரமாக இல்லையே" என்றாராம். இதன் காரணமாக இவர்கள் இருவருக்கும் சண்டை மூண்டது. இருவரும் பிரம்ம தேவனிடம் மத்யஸ்தத்துக்குச் சென்றார்கள். பிரும்மா என்ன செய்வார்? மகனுக்குப் பரிவதா, மனைவிக்குப் பரிவதா? அவர் இந்த விஷயத்தை பரமசிவனுடைய தீர்ப்புக்கு விட்டுவிட்டார்.

பரமசிவன், ஸரஸ்வதி தேவியை வீணை வாசிக்கும்படி கேட்டுக் கொண்டார். ஸரஸ்வதி வீணையை எடுத்து ஸ்ருதி சேர்க்கும் போதே, பரமசிவனின் ஆபரணங்களான நாகங்கள் கீழே இறங்கி வந்து, ஸரஸ்வதியைச் சூழ்ந்துகொண்டு சீறின. ஸரஸ்வதிதேவி பயந்து முறையிட, சிவன் அப்பொழுது சொன்னார்: "இந்த ஸர்ப்பங்கள் சங்கீதத்தில் பூர்ண ஞானமுள்ளவை. கொஞ்சம் அபஸ்வரமிருந்தாலும் இவைகள் தாங்கமாட்டா."

பின்னொரு சமயம், வீணையோடு இமயமலைச் சாரலில் நாரதர் சுற்றிவருகையில் ஆஞ்சநேயரைச் சந்தித்தார். அப்பொழுது நாரதர், கைலாயத்தில் நடந்த அந்த சம்பவத்தைப் பெருமையுடன் எடுத்துச் சொன்னார். நாரதரை மட்டந்தட்ட வேண்டுமென்று ஆஞ்சநேயர் எண்ணி, அவரை வீணை வாசிக்கும்படி கேட்டுக் கொண்டார். அதற்கு நாரதர் "நீர் முதலில் வாசியும்" என்று வேண்டிக் கொண்டார்.

ஆஞ்சநேய ஸ்வாமிகள், நாரதரின் வீணையை எடுத்துச் சிறிது நேரம் வாசித்தார். அப்பொழுது அங்கிருந்த பாறை, ஜலமாய் இளகி விட்டது. ஆஞ்சநேயர் வீணையைக் கீழே வைத்தார்.

இப்பொழுது வாசிக்கவேண்டியது நாரதரின் முறை. ஆனால் வீணையைப் பாறையிலிருந்து அவரால் எடுக்க முடிந்தால்தானே! இளகிய பாறை மறுபடியும் கடினமாகி வீணையைப் பற்றிக்கொண்டு விட்டது. ஆஞ்சநேயர் புன்னகை செய்துகொண்டே ஒரு பாட்டுப் பாடி, பாறையை இளக்கி, வீணையை மீட்டுக் கொடுத்தார்.

தான்ஸேன் பாட்டினால், நெருப்புப் பற்றி எரிந்ததற்கும், பட்ட மரங்கள் துளிர்த்ததற்கும், தியாகய்யருக்கு ராம லக்ஷ்மணர்கள் பல்லக்கின் காவற்காரர்களாய் வந்ததற்கும், பக்தியுடன்கூடிய நாத உபாஸனையே காரணம்.

# கன்னுட்டு சர்க்கஸ்!



கட்டணம் இன்றியே காட்டுறேன் பாரடி
கன்னுட்டு சர்க்கஸுக் கேளிக்கையை;
வட்டமான இந்த சர்க்கஸ் அரங்கிலே
வேடிக்கை பாரடி ஞானப் பெண்ணே.

குட்டையும் நெட்டையும் ஆனகோமாளிகள்
கோலபுஷ் ஷர்ட்டுகள் போட்டுக் கொண்டு,
பட்டாடை கட்டிய பாவையரைச் சுற்றி
குட்டிக் கரணங்கள் போடுரார் பார்.

செங்கிளி சைக்கிளில் செல்வதைப் பாரடி—
ஸீட்டிலும் முன்னுலும் பின்னுலுமே;
பைங்கிளி பொன்கொளி பச்சைக் கிளியெல்லாம்
பாரடி மோட்டார் விடுவதையே!

சிங்கார மானுடன் சிங்கம் குலாவியே
சிங்சிங் ரெஸ்டோரண்டில் ஆடுதுபார்;
தங்க மயிலுடன் தாடிக் காடியும்
தத்தித் தத்திக் குதி போடுதுபார்.

—"தில்லிச் சித்தர்"




# கிழமை கண்டு பிடிப்பது

எல். நாராயண ராவ்

எல்லா தேசங்களின் மக்களுக்கும் பொதுவாக உள்ளவை கிழமைகள். மதம், கல்வி, பழக்க வழக்கங்கள் முதலிய வேறுபாடுகளுக்கு இடையே, கிழமைகள் மாத்திரம் ஒன்றாகவே இருக்கின்றன. ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் சரி, மற்றும் கிரிஸ்தவர்களுக்கும் சரி, வெள்ளிக்கிழமை முக்கியமான நாளாக இருக்கிறது.

கிரஹ மண்டலத்தில் கிரஹங்கள் எப்படி அமைந்திருக்கின்றனவோ, அதை அனுசரித்துக் கிழமைகள் தீர்மானமாகியுள்ளன. இதைத் தெளிவுபடுத்துவதற்கு, சூரியன் முதல் சனி வரை எடுத்துக்கொள்வோம். அதிக தூரத்திலுள்ளவர் சனீஸ்வரர். அதற்குப் படிப்படியாக, குரு, செவ்வாய், பூமி (இந்த இடத்தில் சூரியன் என்று கல்பிக்கவேண்டும்) சுக்ரன், புதன், சந்திரன். இந்த வரிசையில், இந்த ஏழு கிரஹங்களும், ஒவ்வொரு நாளும் ஒரு மணி வீதம் அதிபர்களாக அமைகிறார்கள். இப்பொழுது ஞாயிற்றுக்கிழமை யன்று, காலே முதல் ஒரு மணி சூரியனுடையது 2-ஆவது சுக்ரன்; 3-ஆவது புதன்; 4-ஆவது சந்திரன்; 5-ஆவது சனி; 6-ஆவது குரு; 7-ஆவது செவ்வாய். மறுபடியும் 8-ஆவது முதல் 14-ஆவது மணி முடிய, இரண்டாவது வட்டம். 15-ஆவது முதல் 21-வது முடிய மூன்றாவது வட்டம். இந்த மாதிரி 24 மணி முடிந்தவுடன் 25-ஆவது மணி, அதாவது மறுநாள் முதல் மணி சந்திரனுடையதாகயிருக்கும். ஆகையால், ஞாயிற்றுக்கிழமைக்கு அடுத்த நாள் திங்கள்கிழமை என்று வந்தது. இந்த விதத்தில் எல்லாக் கிழமைகளும் சரிவர அமைந்திருப்பதைக் காணலாம்.

இப்பொழுது இங்கிலீஷ் தேதியிலிருந்து கிழமை கண்டுபிடிக்க ஒரு சுலபமான வழி சொல்கிறேன். இதற்கு முதலில் 12 மாதங்

களுக்கு 12 எண்கள் மனப்பாடம் செய்து கொள்ள வேண்டும். அவை கீழே கண்டவாறு :

| | | |
|---|---|---|
| ஜனவரி | — | 23 |
| பிப்ரவரி | — | 3 |
| மார்ச்சு | — | 20 |
| ஏப்ரல் | — | 0 |
| மே | — | 24 |
| ஜூன் | — | 4 |
| ஜூலை | — | 0 |
| ஆகஸ்டு | — | 8 |
| செப்டம்பர் | — | 16 |
| அக்டோபர் | — | 12 |
| நவம்பர் | — | 20 |
| டிஸம்பர் | — | 16 |

உதாரணம் :

1939 செப்டம்பர் 3-ம் தேதி யன்று என்ன கிழமை ?

வழி :

வருஷத்தை எழுதவும் : 1939
இதனுடன் செப்டம்பர் எண்ணைக் கூட்டு : 16

கூட்டிய தொகை : 1955

இதனுடன், இதன் நாலில் ஒருபாகம் சேர்க்கவும். நாலால் வகுத்து வந்த ஈவை மாத்திரம் சேர்க்கவும். மிச்சத்தை விட்டுவிடவும்.

1955
நாலால் வகுத்து வந்த ஈவு : 488

கூட்டியதொகை 2443

இதை ஏழால் வகுத்து மிச்சம் கண்டுபிடிக்கவும். மிச்சம் 0. மிச்சத்திலிருந்து, எந்த மாதம் நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோமோ அதன் முதல் தேதிக்குள்ள கிழமை வரும். மிச்சம் 1-க்கு சனிக்கிழமை என்று உறுதிப்படுத்திக்கொள்ளவும். உதாரணத்தில் 0 மிச்சம். அதாவது முதல் தேதியன்று கிழமை வெள்ளி. ஆகையால் 3-ஆம் தேதி ஞாயிறு என்று அறியவும்.

இந்தவிதத்தில் கி. பி. 1900 மார்ச்சு 1 தேதி முதல், கி. பி. 2000 வரை, எந்த தேதிக்கும் கிழமை கண்டுபிடிக்கலாம். 1800 மார்ச்சு முதல் தேதியிலிருந்து 1900 பிப்ரவரி 28-ம் தேதி வரை உள்ள தேதிகளுக்கு, கடைசி விடையில் ஒரு கிழமை அதிகம் சேர்த்துக்கொள்ளவும்.



# மழை பெய்தது

## ஐந்து காட்சிகள்

ரஜனி பணிக்கர்

வெளியே மழை பெய்துகொண்டிருந்தது. வீட்டுக்குள், சீலா, அவளுடைய 'ஸிட்டிங்' ரூமில் உட்கார்ந்து அறையின் திறந்த ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள். 'பிசு பிசு' வென்று துவங்கிய தூற்றல், கொஞ்ச நேரத்தில் 'டொக் டொக்' என்று மாறி, கடைசியில் 'சட சட' வென்ற பெரு மழையாகப் பெய்ய ஆரம்பித்தது. அதனூடே, தூரத்தில் பல வீடுகளின் புகை போக்கிகள் மூலம், அடுப்புப் புகை வெளிப்பட்டுக்கொண்டிருந்தது தெரிந்தது. காலை பத்துப் பதினொரு மணி சமயம் அது. அந்த வேளையில் மழையைப் பார்த்தது ஒரு பக்கம் சீலாவின் மனதுக்குச் சற்றே வருத்தம் அளித்தது. மறுபக்கம், வெள்ளை 'டால்' அடித்தவாறு விழுந்துகொண்டிருந்த மழைச் சொட்டுக்களைப் பார்ப்பது அவளுக்கு ஓரளவு வேடிக்கையாகவுமிருந்தது.

சீலா ஒரு சோபாவில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அந்த அறையிலிருந்த எல்லாப் பொருள்களுமே அவளுடைய வாழ்க்கையுடன் ஒன்றிப் போனவை; அவை யனைத்தையும் தனது தோழர்களாகத்தான் அவள் நினைத்துக்கொண்டிருந்தாள். ஆனால் அந்த மழை சமயத்தில் தன் கணவன் உடனில்லையே என்ற ஏக்கம் அவள் மனத்தை வாட்டத் துவங்கிற்று, தனிமையின் தாபம் உச்சநிலையை எட்டிய போது 'டெலிபோன்' மணி அடித்தது.

ரிஸீவரை ஆவலுடன் கையிலெ எடுத்து 'ஹலோ' என்றாள் சீலா. மறு பக்கம் அவளுடைய கணவன் ஆபீஸிலிருந்து குரல் கொடுத்தான்.

சீலா உவகைப் பெருக்கில் மூழ்கியவாறு பேசினாள்: "ஓ, நீங்களா?... ஆமாம், இன்று காற்றும் மழையுமாக ரொம்ப அருமையாய் இருக்கிறது. மனதில் ஒரு மாதிரிப் பூரிப்பு உண்டாகிறது ... என்ன? ... நானா? ஹி ஹி ஹி, ஒன்றும் செய்யவில்லையே! சும்மாத்தான் இப்படி உட்கார்ந்து கொண்டிருக்கிறேன், தனியாக...என்ன, என்ன சொல்கிறீர்கள்? மத்தியானம் சாப்பாட்டுக்கு வரப்போவதில்லையா?...ஏன்? பரவாயில்லை, வாருங்களேன்!...ஒழிவு நேரம் கிடைக்காதா?...ஹூம்ம்...சரி, அப்படியென்றால் டிபனுக்கு ஏதாவது அனுப்பி வைக்கட்டுமா?... 'கட்லெட்' டா?...ஆகட்டும் ... சமையல்காரி எங்கேயோ உறவினரைப் பார்க்கப்போனவள், இனி நாளைதான் வருவாள்...பரவாயில்லை...நானே செய்து அனுப்புகிறேன்...பிடிக்குமல்லவா?... ஹூம்ம்."

பெருமூச்சு கலந்த அரைகுறை முறுவலுடன் ரிஸீவரைக் கீழே வைத்தாள் சீலா. அங்கே ஆபீஸில் கணவன் அவனுடைய ரிஸீவரைக் கீழை வைத்து விட்டதால்தான் அவளும் வைக்க வேண்டியதாயிற்று. இல்லாவிட்டால் அவள் வைக்க இஷ்டப்படவில்லை. அந்த மழை நேரத்தில் கணவனுடன் டெலிபோனில் பேசுவதுகூட அவளுக்கு இன்பமாயிருந்தது. ...ஆனால் அதுவும் 'சட்'டென்று நின்றுவிட்

டதே!...மறுபடி சோர்ந்து போய் சோபாவில் உட்கார்ந்தாள்.

சீலாவின் மனத்தில் பல எண்ணங் கள் ஓடின...இதென்ன வேலை இது! காலை ஒன்பது மணி முதல் மாலை ஏழு மணி வரை உழைக்கிறரே! 'இப்படி உழைத்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள்' என்று நான் எத் தனை தடவை சொல்கிறேன், கேட்கி ருரா! வாதாடுகிருர்: 'உழைக்காவிட் டால் வீட்டுச் செலவு எப்படி நடக் கும்? உனக்கு வேண்டிய பொருள்கள் எப்படிக் கிடைக்கும்! வயிற்றுப் பிரச் னையம்மா, இது வயிற்றுப் பிரச்னை யாக்கும்!'...ஹூம், வதைக்கிருர். என்னை... இந்த மழையையும், மேகப் படலத்தையும் பார்த்துக் கவிஞர்கள் என்னவெல்லாம் பாடியிருக்கிருர்கள்! நாமும் இருக்கிருேமே, மழை பொழிந் தால் என்ன, மலர்கள் மலர்ந்தால் என்ன, இளம் வெயில் படர்ந்தால் என்ன, நமக்கு ஒன்றுமே இல்லை யென்று!..."

இப்படிப் பலப்பல எண்ணங்களுடன் சீலா வேண்டா வெறுப்பாக 'கட் லெட்' தயார் செய்தாள்.

அடுப்பு வேலை முடியும் தருணத்தில் மாயாவும், புஷ்பாவும் வந்தார்கள். என்னென்னவோ பேசினுர்கள்.

"இந்த மழைவேளையில் காப்பி குடித்தால் குஷியாயிருக்கும்" என்ருள் மாயா.

"இந்த மழை வேளையில் அடக்க மாய் உட்கார்ந்து ஒரு சீட்டாட்டம் போட்டால் ஆனந்தமாயிருக்கும்" என் ருள் புஷ்பா.

"இரண்டும் வைத்துக் கொள்ள லாமே" என்று சொல்லிக்கொண்டே, சீலா, மின்சார அடுப்பில் காப்பிக்கு தண்ணீர் வைத்துவிட்டு சீட்டாட்டத் துக்கு உட்கார்ந்தாள்.

கணவனுக்குக் 'கட்லெட்' அனுப் பவும் மறந்து சீட்டாட்டத்தில் மூழ்கி யிருந்தாள் சீலா.

வெளியே மழை அடித்துப் பெய்து கொண்டிருந்ததைக்கூட அவள் மறந்து விட்டாளோ!

## 2

ஸ்கூல் முடிந்து வகுப்பு அறையி லிருந்து, அசோக்கும் ரமாவும் வெளியே வந்தபோது மழை பெய்துகொண்டி ருந்தது. அசோக் மனத் துள்ளலுடன் சொன்னுன்:

"ஆஹ்ஹா, அருமையான 'வெதர்' உன்னுடைய 'ப்ரோக்ராம்' என்ன ரமா?"

ரமா, புதிய நீலப்புடவை ஒன்று அணிந்திருந்தாள். மழை பெய்வதால் அவளுக்கு உற்சாகமுமில்லை, வருத்தமு மில்லை...மழைச் சொட்டுக்களிலிருந்து ஒதுங்கிக்கொண்டே, "ப்ரோக்ராம் ஏது, வீட்டுக்குப் போகவேண்டியது தான்" என்ருள் அவள்.

அசோக் கொஞ்சம் ரோசத்துடன் பேசினுன்:

"ஹூ, இந்த மாதிரி சமயத்தில் வீட்டுக்குள்ளே போய் அடைந்து கிடக்கப்போகிருயோ! ஒழுங்குதான். மனதில் பொங்கி வரும் இன்ப உணர்ச் சிகளை இப்படி நசுக்கிவைப்பதைப் போல் அநியாயம் வேறு கிடையாது."

"இந்த மழையில் வெளியே வீதி வீதியாகச் சுற்றமுடியுமா என்ன?

"நான் அப்படியா சொல்கிறேன்? ஹோட்டல் இல்லையா, சினிமா இல் லையா...நமக்கு என்ன குறைச்சல்?"

ரமாவின் முகம் புன்னகையால் மலர்ந்தது, அவளுடைய சின்னஞ் சிறு கண்கள் கூட ஒளி வீசின. அவள் மனத்திலும் புது உற்சாகம் தோன்றி யிருக்கவேண்டும். அலட்சியமாகத் தலையை ஒரு திருப்பித் திருப்பித் தலை மயிரை ஒழுங்குபடுத்திக்கொண்டாள். அப்போது, வெளிறிய உடல்க் கட்டு

டன், மெல்லிய கண்ணுடி வாலிபன் ஒருத்தன், துயரம் தோய்ந்த குரலில்,

“ கண்கள் கொட்டுது
கண்ணீர்—எந்தன்
கண்கள் கொட்டுது
கண்ணீர்... ”

என்று பாடிக்கொண்டே ஸ்கூலை விட்டு வெளியேறினன். அவன் தலை மயிர் கலைந்திருந்தது. ஏதோ தாங்கமுடியாத சோகத்தைத் தூக்கிச் செல்கிறவன்போல் தோற்ற மளித்த அவனைப் பார்த்துவிட்டு, ரமா சிரித்துக் கொண்டே அசோக்கிடம் சொன்னுள் :

“ஏ அப்பா! எவ்வளவு பொறுப்பு! உலக ஜனங்கள் அனைவரின் வேதனை யையும் இவனே தாங்கிச் செல்கிருன் போலிருக்கிறதே! பாவம், வானமும் அழுவதாக நினைத்துத்தானும் கண்ணீர் விடுகிருனே!”

அசோக் பொறுமை இழந்தான். “அவன் பேச்சு கிடக்கிறது! நம் விஷ யத்தை கவனி...முதலில் காப்பி ஹௌஸ்; அங்கிருந்து நேராக மாடினி ஷோ... தேவதாஸ் ஓடிக் கொண்டிருக்கிறது... ஷோ முடிந்த பிறகு வீட்டுக்குப்போய் மழைச் சொட் டுக்களை எண்ணிக் கொண்டிருக்கலாம். என்ன அவசரம்!”

ரமா, காசுக் கணக்குப் போட்டுக் கொண்டே, “சரி” என்று தலையசைத் தாள். இருவரும் 'காப்பி ஹௌஸ்'ஸை நோக்கி விரைந்தார்கள்.

மழை பெய்துகொண்டிருந்தது.

## 3

மாலை மணி ஆறு. ஷமீ ஆபிஸை விட்டு வெளியே வந்தவன், மழையைப் பார்த்து திடுக்கிட்டான், “கடவுளுக்குக் கொஞ்சம்கூட கருணை யில்லையே! வெளுத்துவந்த 'ஸூட்' இன்றைக்குத்தான் எடுத்துப் போட் டுக்கொண்டிருக்கிறேன். இந்த மழை யில் ஸூட் நிச்சயம் நாசமாகிவிடும். இதை விட்டால் வேறு 'ஸூட்'டும் கிடையாது; 'லாண்ட்'ரிக்காரனுக்கு வேறு பாக்கி நிற்கிறது. போகும் வழி யில் கடைக்காரர் நிலுவையைக் கேட்பார். மழையில் அவர் கடை மூடியிருந்தால் எவ்வளவு நன்ருயிருக் கும்!...” இப்படி ஏதேதோ எண்ணங் களுடன் குடையைப் பிரித்துப் பிடித் துக்கொண்டு வீட்டை நோக்கி நடந் தான் ஷமீ.

குடையில் ஏகப்பட்ட பொத்தல் கள், எதிர்க் காற்றில் வேறு, மழைத் தண்ணீர் அவன்மேல் வந்தடித்தது. களைத்துப்போன கண்களுக்கு அது கொஞ்சம் இதமாயிருந்தாலும், மொத் தத்தில் அவனுக்கு எரிச்சல் வந்தது. “சேச்சே, இந்த மழை ரத்தத்தைக் கூடத் தண்ணியாக்கி விடும்போலிருக் கிறதே!”

கடை வீதியில் என்னென்னவோ காட்சிகள்: காய்கறி விற்கும் பஞ்சாபி அகதி ஒருவன், கிழிந்த உடையுடன் உட்கார்ந்து மழையை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தான். அவனு டைய கடைக்குக் கூரையாய் அமைந்த துணிகூட கிழிந்திருந்தது...எவனே ஒருவன் 'கடலைச் சுண்டல்...சுடச் சுடக் கடலைச் சுண்டல், என்று கூவி விற்றுக் கொண்டிருந்தான். அவன் தலையில் வைத்திருந்த கூடைக்குள்ளி ருந்து புகை எழும்பிக்கொண்டிருந் தது. ஆனல் மேலேயிருந்து மழை... கிழிந்த மேலாக்குத் துணியோடு மழை யில் ஓடி வந்துகொண்டிருந்த இளம் பெண் ஒருத்தி ஷமீயின்மேல் மோதி னுள்; அவள் கையில் வைத்திருந்த காய் கறி கீழே விழுந்து உருண்டோடிற்று. இரண்டு கிழங்குகள் சாக்கடைப் பக் கம் உருண்டோடி உள்ளே விழுந்தன. “கண் தெரியவில்லையோ?” என்று கத்தினுள் அந்தப் பெண், காய் கிழங் குகளைப் பொறுக்கிக்கொண்டே. ஷமீ வெறுமே நின்ருன் — இதென்ன லாஹோர் நகரத்து 'மால்ரோ'டா. பச்சை 'ஜார்ஜெட்' மெல்லுடை

அணிந்த இளநங்கை ஒருத்தி, தன் கைப் பையைக் கீழே தவறவிடும் போது, பாய்ந்து சென்று அதை எடுத்து அவளிடம் கொடுத்துவிட்டு, அவளுடைய நன்றியையும், அன்பையும் ஒருங்கே பெறுவதற்கு! அதெல்லாம் இங்கே ஏது!

ஷமீ மேலே நடந்தான்.

மழை தொடர்ந்து பெய்துகொண்டிருந்தது.

## 4

எட்டு வயது ஹரிஜனப் பையன் கல்லூவுக்கு, உடம்பெல்லாம் கொதித்துக் கொண்டிருந்தது. ஜுர வேகத்தில் அரற்றிக்கொண்டிருந்தான். அவன் தாய் தனவந்தி வாசற்படியில் நின்று தகப்பனின் வரவை எதிர்பார்த்துத் தவித்துக்கொண்டிருந்தாள். கண்ணுக் கெட்டிய தூரம் வரை மழைதான் தென்பட்டது; ஆளைக் காணோம்.

வெகு நேரத்துக்குப்பின், கல்லூவின் தகப்பன் வந்து சேர்ந்தான். வரும்போதே "கொஞ்சம் வெல்லம் இருக்கிறதா!" என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

தனவந்திக்கு எரிச்சல் வந்தது. "குழந்தை ஜுர வேகத்தில் துடிக்கிறான், அது உனக்கு லட்சியமில்லையோ!" என்று சீறினாள்.

அவன் சுயநினைவில் இருந்தால் தானே! "கொண்டா, வெல்லம் கொண்டா" என்று கத்தினான், போதை வசப்பட்டு. "இன்றுதான் எனக்கு சம்பாத்திய நாள், தனவந்தி! இன்று நம் வீட்டுக்கு லக்ஷ்மி தேவியின் கிருபை வந்திருக்கிறது. நீ கவலைப் படாதே. நான் ராத்திரி திரும்பி வரும் போது கல்லூவுக்கு நிறையப் பால் வாங்கி வருவேன்...உம் உம், நீ கொஞ்சம் வெல்லம் கொண்டுவா, ஜல்தி" என்று சொல்லிக்கொண்டே, கல்லூவின் நெற்றியில் கைவைத்துப் பார்த்தவன், பதறிப்போய், கையைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டான். கல்லூவின் நெற்றி அவ்வளவு மழுவாய்க் கொதித்துக்கொண்டிருந்தது போலும்! வெல்லத்துக்குக்கூடக் காத்திராமல் குடிசையிலிருந்து வெளியேறிக் கடும் மழைக்குள் சென்று மறைந்தான். எங்கே சூதாடப் போனானோ!

## 5

வேலையாள் தீரு, மூன்று ஸோடா பாட்டில்களை ஒரு கையில் இடுக்கிக் கொண்டு, மறு கையால் ஒரு சாக்குத் துணியைத் தலையில் வைத்து அழுத்தி மூடிக்கொண்டு, மழையில் ஓடிக்கொண்டிருந்தான். அவனுடைய உடையெல்லாம் நனைந்து போயிருந்தது.

இங்கே ராஜ்குமார் வீட்டில் நண்பர்கள் கூடிக் கூத்தடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரே சிரிப்பும், கேளிக்கையுமாயிருந்தது. குமாரி பத்மாவின் பாட்டுக் கச்சேரி வேறு நடந்துகொண்டிருந்தது.

நேரம் ஆக ஆக ராஜ்குமாருக்குப் பொறுமை போய்க் கொண்டிருந்தது. தீரு இன்னமும் ஸோடா கொண்டு வரவில்லை. முட்டாள்!

ராஜ்குமாரின் கோபம் உச்சநிலையில் இருந்தபோது தீரு வந்து சேர்ந்தான், தொப்பலாக நனைந்துபோய்.

"இயடிட்! ராஸ்கல்!... ஜல்தி திறடா ஸோடா பாட்டிலை!" என்று இரைந்தான் ராஜ்குமார். பதறிக் கொண்டே திறந்து கொடுத்தான் தீரு. ஸோடா மதுவுடன் கலந்தது. கிண்ணங்கள் பல பல சுழன்றன. குமாரி பத்மா தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தாள். தீரு, குளிரில் நடுங்கியவாறு நின்றுகொண்டிருந்தான், ஓர் ஓரத்தில்

வெளியே மழை 'ஹோ' வென்று பெய்துகொண்டிருந்தது.

(ஹிந்திலிருந்து பூர்ணம் விச்வநாதன் தமிழில் ஆக்கியது)



# பொருனைத் தமிழ்

இசக்கி

'காவிரி நாடான கழனி நாடு' என்று கோசலத்தைப் பற்றிக் கூறினர் கம்பர். அவர் காவிரி நாட்டுக்காரர்; அதனால் அப்படிச் சொன்னர். காவிரிக்கும் கங்கைக்கும் ஒப்பாகக் கருதப்படும் தாமிரபர்ணி பாயும் திருநெல்வேலி ஜில்லாவில் அவர் வாழ்ந்திருந்தால், 'பொருனை நாடான கழனி நாடு' என்று பாடியிருப்பார்.

பொருனை நாட்டை நினைத்துக் கொண்டால் எழில் நிறைந்த இனிய ஓவியம் ஒன்று மனத்திரையில் உருவாகிறது. 'கிளு கிளு' என்று தனக்குள்ளே மெல்லச் சிரித்துக்கொண்டே பொருனை நதி—அதிலிருந்து கிளைத்து சலசலத்துப் பாயும் நூற்றுக் கணக்கான வாய்க்கால்கள்—பரந்து விரிந்த பசுவயல்கள்—உள்ளமும் உடலும் குளிர்விக்கும் குற்றுலத்து அருவி, பொதிகைத் தென்றல், தமிழ் வளர்த்த குறுமுனியின் கோலம்—ஓங்கி வளர்ந்த மருத மரங்களும் விரிந்து பரந்த ஆல மரங்களும் நிழல் பரப்பும் நீண்ட குளிர்ந்த சாலைகள்—'ஜல் ஜல், ஜல் ஜல்' என்ற இனிய நாதத்தையும் கிராமத்தின் தூசியையும் எழுப்பிக்கொண்டு துரித நடை போடும் வில் வண்டிகள்—இவையெல்லாம் அந்த ஓவியத்தில் விரவி நிற்கின்றன. இவற்ருேடெல்லாம் ஒன்றி இணைந்து ஒலிக்கிறது பொருனைத் தமிழ்—திருநெல்வேலித் தமிழ்.

நெல்லை ஜில்லாவின் தமிழ் ஒரு தனித்தன்மை வாய்ந்தது. பொருனை நாட்டார் பேசும்போது வார்த்தைகளிலும் வாக்கியத்திலும் அங்கங்கே அழுத்தம் கொடுத்து, ஏற்றியும் இறக்கியும் பேசும் பாணி அவர்களுக்கே உரியது. சொற்களைப் பேச்சில் சிதைத்துத் திரித்து வழங்குவதிலும் அவர்கள் வழி தனியானது. நெல்லைத் தமிழில் வழங்கும் விசேஷச் சொற்களைத் தொகுத்தால், அது ஒரு குட்டி அகராதியாகிவிடும். இவைகளுக் கெல்லாம் ஒரு சில உதாரணங்களை இந்தக் கட்டுரையில் காணலாம்.

'இந்தா விபீஷண லங்காபுரி ராஜ்யம்' என்று சொன்னராம் ராமர். இதைப் பொருனைத் தமிழில் சொல்லுவதா யிருந்தால் 'இன்ன விபீஷண லங்காபுரி ராஜ்யம்' என்றுதான் சொல்ல வேண்டும். 'இந்தா,' 'இதோ,' 'அந்தா,' 'அதோ'—இவையெல்லாம்

திருநெல்வேலித் தமிழில் கிடையா. ‘இன்று’ வும் ‘அன்று’ வும் தான் கிடைக்கும். இந்த இனத்தைச் சேர்ந்தவைதான் ‘இங்கனே,’ ‘அங்கனே,’ ‘எங்கனே’ என்ற சகோதர வார்த்தைகள். ‘இங்கனே’ என்றால் ‘இங்கே,’ ‘இந்த இடத்தில்’ என்று பொருள்; இது போலவே மற்ற வார்த்தைகளுக்கும். இதே மாதிரி, ‘இப்பொழுது,’ ‘அப்பொழுது,’ ‘எப்பொழுது,’ என்ற வார்த்தைகளெல்லாம் ‘இப்பம்,’ ‘அப்பம்,’ ‘எப்பம்,’ என்று உருமாறி நிற்கும்.

பொருநை நாட்டின் பேச்சு வழக்கில் அதிகமாக அடிபடும் சில விசேஷ வார்த்தைகள் ‘ஏலே,’ ‘ஏட்டி’ என்பன. வடக்கு ஜில்லாக்களில் ‘அடே,’ ‘டேய்,’ என்று வழங்கும் விளிச் சொற்களின் ‘திருணவேலி’த் தம்பிதான் ‘ஏலே’ என்ற பதம். ‘அடி,’ ‘டீ,’ இவற்றின் தங்கச்சி ‘ஏட்டி’. இவை போன்ற இன்னொரு சொல் ‘வேய்.’ இதனுடைய பாட பேதம்தான் ‘ஓய்’ என்பது. ‘ஓய் திலகரே, நம்ம ஜாதிக்கடுக்குமோ’ என்ற பாரதி பாட்டில் இந்த ‘ஓய்’ ஏறியிருக்கிறது. இவற்றையெல்லாம்விட மிக விசேஷமான திருநெல்வேலி முத்திரை பெற்ற சொல் ‘எளா’ அல்லது ‘ஏளா’ என்பது. சில வரம்புகளுக்குட்பட்டு, பொதுவாகப் பெண்களை விளிக்கும் சொல் இது. சாதாரணமாக, இருபது, இருபத்தைந்து வயதுக்குக் குறைந்த பெண்கள் விஷயத்தில் இந்த ‘எளா’வை உபயோகிப்பதில்லை. மற்றப்படி, ஏறக்குறைய சம வயதும், சம அந்தஸ்தும் உடைய பெண்கள் தங்களுக்குள் ‘எளா’ப் பட்டம் போட்டுக் கொள்வார்கள். குடும்பத்தில், வயதில் பெரியவர்களானாலும், அன்பு மிகுதியினால் ‘நீ’ என்று ஒருமையில் குறிப்பிடக்கூடிய முறையுள்ளவர்களை, ‘எளா’ என்று அழைப்பதுண்டு. உதாரணமாக, தாயாரை மக்கள் (இரு பாலரும்) ‘எளா’ என்று அழைப்பது வழக்கம். வயதில் சிறியவர்களானாலும் ‘ஏட்டி’ என்று அழைக்கும் அளவு வயது வித்தியாசமோ, அல்லது முறை உரிமையோ இல்லாதவர்களும், ‘எளா’ப் பட்டம் பெறுவர்.

வினைச் சொல் விகுதிகள் சாதாரணமாகப் பேச்சு வழக்கில் திரிந்து வழங்குகின்றன. இந்தத் திரிபிலும் பொருநைத் தமிழில் சில விசேஷங்கள் உண்டு. ‘பாடுகிறான்’ என்ற சொல் பிற இடங்களில் ‘பாடுறான்’ என்று வழங்கும். ‘இனிக்கிறது’ என்பது ‘இனிக்கிது’ என்று இருக்கும். திருநெல்வேலித் தமிழில் இந்த வார்த்தைகள் ‘பாடுதான்,’ ‘இனிக்கி’ என்று வரும். ‘வந்தார்கள்,’ ‘இருக்கிறார்கள்,’ ‘போவார்கள்’ என்ற பன்மை வினைகள் வடக்கு ஜில்லாக்களில் ‘வந்தாங்க,’ ‘இருக்கிறாங்க,’ ‘போவாங்க’ என்று வழங்கும். ‘வந்தாக,’ ‘இருக்காக,’ ‘போவாக’ என்பது நெல்லை வழக்கு.

பிற இடங்களில் வழக்கில் இல்லாத சில இலக்கியச் சொற்களும், மரபுகளும் பொருனைத் தமிழில் சாதாரணமாகப் பேச்சு வழக்கில் உலவக் காணலாம். 'சக்கரக் கையன் தடங் கண்ணால் மலர விழித்து ஒக்கலை மேலிருந்து உன்னையே சுட்டிக்காட்டும் காண்' என்பது பெரியாழ்வார் திருமொழி. இதில் 'ஒக்கலை' என்பது இடுப்பு என்ற பொருளில் வந்திருக்கிறது. இந்த வார்த்தை நெல்லை நாட்டில் சாதாரணமாகப் பேச்சுவழக்கில் இருக்கிறது. 'இடுப்பு' என்ற சொல்லும் (இதே பொருளில் 'குறுக்கு' என்ற பதமும்கூட) அங்கே வழக்கில் உண்டு. ஆனால் பொருனை நாட்டுத் தாய்மார் தங்கள் குழந்தைகளை 'இடுப்பி'ல் இடுக்கிக்கொள்வதில்லை. 'ஒக்கலி'ல் தான் வைத்துக்கொள்வார்கள்.

தன் தாயின் ஒக்கல் மேலிருந்து அம்புலியை அழைக்கும் பேசும் பொற்சித்திரத்திடம் சென்று 'ஏலே, இதாரு?' என்று அவனுடைய தாயாரைக் காட்டிக் கேட்டால், 'அம்ம்மெ' என்று மிழற்றுவான். அன்னையை 'அம்மா' என்று சொல்லாமல், 'அம்மை' என்பது திருநெல்வேலி மரபு. பெயரிலும் இவ்வாறே 'தாயம்மை,' 'மூக்கம்மை,' 'செல்லம்மை' என்று குறிப்பிடுவார்கள். இதே மாதிரி, தந்தையை 'ஐயா' என்பதும் பெரு வழக்கு. ஆனால் இப்போதெல்லாம் 'ஐயா' 'அப்பா'வாகி வருகிறார்.

'பையவே சென்று பாண்டியற்காகவே' என்று சம்பந்தர் பாடினார். திருக்குறளிலும்கூட 'யான் நோக்கப் பசையினள் பைய நகு' வதை வள்ளுவர் காட்டுகிறார். 'பைய' என்பது 'மெல்ல,' 'மெதுவாக' என்ற பொருளில் பொருனைக் கரையில் பழகுதமிழ்ச் சொல்லாக வழங்குகிறது.

'புறம்' என்ற பழஞ் சொல்லுக்கு முதுகு, பின்பக்கம் என்ற பொருள் உண்டு. திருநெல்வேலி ஜில்லாவில் 'பின்னால்' (இடத்தைக் குறிப்பது, காலத்தையல்ல) என்பதற்கு 'புறத்தே,' 'புறத்தால்' என்று கூறுவார்கள். தாயாரின் 'கொடுக்கை'ப் பிடித்துக் கொண்டே அலையும் பையனை 'எம்லே என் புறத்தாலேயே வாரே?' என்று அந்த 'அம்மை' கடிந்து கொள்வதைக் கேட்கலாம்.

நெல்லை ஜில்லாவில் ஒரு நண்பர் வீட்டுக்கு நீங்கள் சென்றால் உங்களை அகமும் முகமும் மலர்ந்து வரவேற்பார்கள். வரவேற்று 'உட்கார'ச் சொல்ல மாட்டார்கள். ஆசனத்திலோ, சமக்காளத்திலோ 'இருங்க இருங்க' என்று 'இருக்க'ச் சொல்லுவார்கள்.

கவனமாக, ஜாக்கிரதையாக வைத்துப் புழங்கவேண்டிய பொருளை 'பூப்போல' வைத்துக் கொள்வார்கள் பொருனை நாட்டார்.

போல என்ற உவமைப் பொருளுள்ள சொற்கள் தமிழில் நிறைய இருக்கின்றன. 'போலப் புரைய ஒப்ப உறழ மானக்கடுக்க

நேரநிகர’ என்று அடுக்குகிறது இலக்கணம். இவையெல்லாம் ‘காணா’மல் (அதாவது போதாமல்), ‘கணக்கா’ என்ற சொல்லை வழங்குகிறது தாமிரபரணி நாடு. ‘மரங் கணக்கா நிக்கான்,’ ‘புலி கணக்காப் பாயுதான்’ என்று ‘போல,’ ‘மாதிரி’ என்ற சொற்களின் இடத்தில் ‘கணக்கா’ என்று பெய்து பேசுவார்கள்.

தாய் மாமனைக் குறிப்பதற்கு ‘அம்மான்’ என்ற சொல் வழக்கில் இருக்கிறது. சகோதரன், சகோதரி என்ற பொருளில் ‘உடன் பிறந்தான்,’ ‘உடன் பிறந்தாள்’ என்ற சொற்கள் பேச்சில் உலவுகின்றன.

மலையாள நாடு பக்கத்திலிருக்கும் காரணத்தால் சில மலையாள வழக்குகளும் பொருநைத் தமிழில் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. ‘நல்லவர்களுக்கு அடையாளம் சொல்லாமல் கொள்ளாமல்’ என்று ஒரு பழமொழி உண்டு. நெல்லை ஜில்லாவில் அது. ‘நல்லவுகளுக்கு அடையாளம் சொல்லாமல் பறயாமல்’ என்று வழங்கும். ‘பற’ என்ற மலையாள வார்த்தைக்கு ‘சொல்’ என்று பொருள். ‘பிள்ளையானது எல்லோர் கூடவும் பேசிப் பறஞ்சு இருக்க வேண்டும்’ என்பது போல பல இடங்களில் ‘பற’ மீமிசைச் சொல்லாய் வரும்.

‘அரண்மனை உறவைக் காட்டிலும் அடுக்களை உறவுதான் மேல்’ என்று ஒரு ‘சொலவடை’ அல்லது ‘சொலகம்’ (அதாவது பழமொழி) உண்டு. திருநெல்வேலித் தமிழில் ‘அடுக்களை’ என்றால் சமையலறை. அடுக்களையோடு சம்பந்தப்பட்டது ‘புளியிட்ட கறி.’ பொருநைநாட்டு ஒண்ணுதல் ‘தான்றுழந்து அட்ட தீம்புளிப் பாகர்’ இந்தப் பெயரால் அழைக்கப்படும். மற்ற ஜில்லாக்களின் சாதாரணப் ‘புளிக்குழம்பு’தான் இது.

‘சாப்பிடு’ என்ற சொல்லோடு கூடவே ‘உண்’ என்ற சொல்லும் பேச்சு வழக்கில் இருக்கிறது. ‘ஒம்பிள்ளை ஊட்டுவாய்ப் பிள்ளை சோறு உண்ணமாட்டாங் காம்டி,’ என்று, தனது பேரன் வயிறு ‘முட்டச்’ சாப்பிடவில்லை என்று குறைப்படும் ஆச்சி ‘ஆவலாதி’ சொல்வதைக் கேட்கலாம். ‘ஆவலாதி’ என்றால் ‘புகார்’. கல்யாண வீட்டில் ஆவலாதி ஒன்றும் வராமல் இருக்க வேண்டுமே என்றுதான் வீட்டுக்காரர் கவலைப்படுவார். ஏதாவது தப்பு நேர்ந்து அதன் காரணமாக யாரும் ‘கத்திக் கொண்டு’ (கோபித்துக்கொண்டு) போய்விடக் கூடாதல்லவா?

பொருநை நாட்டார் தங்கள் பிள்ளைகளையோ மற்றவர்களையோ கடிந்து பேசும்போது உபயோகிக்கும் ஒரு அருமையான வார்த்தை ‘மூதி’ என்பது. இந்த இரண்டெழுத்துக்குள் அஞ்ஞாதவாசம் செய்வது வேறு யாருமில்லை; ‘சாட்சாத் செய்யவள் தன் தவ்வை’ தான்; அதாவது மூதேவி. இந்த மூதியில் பல ரகங்கள் உண்டு. முதலாவது, சாதாரண வெறும் ‘மூதி’. அடுத்தபடி ‘கரி மூதி’.

இதைவிட விசேஷ கௌரவம் கொடுக்க வேண்டுமானால் ‘வெறுவாக் கெட்ட மூதி’ இருக்கிறது. ‘எடு வாரியலை’ என்ற திருத்தொடர் வெண் சாமரை மரியாதையைக் குறிக்கும்.

கடை வீதிக்குப் போனால் புள்ளிக் கணக்கில் ‘வீசம்’ என்பதற்கு பதிலாக ‘மாகாணி’ அடிபடும். மூன்று வீசம் முண்டாணியாகிவிடும். பெரும் பொருளை சீரழித்துக் கெட்டவனை ‘ஆயிரத்தைக் காலே மாகாணி யாக்கினவன்’ என்று கூறுவார்கள்.

சில்லறை நாணயக் கணக்கில் ‘துட்டு’ (4 பைசா) அதிகமாகப் புழங்கும். எட்டேகால் துட்டு, பத்தரைத் துட்டு என்று காய்கறிக்காரி சாதாரணமாகக் கூறுவதை யெல்லாம் வெளி ஜில்லாக்காரர்கள் பேப்பரும் பென்சிலும் வைத்துக் கணக்குப் போட்டுத்தான் $2\frac{3}{4}$ அணா, $3\frac{1}{2}$ அணா என்று புரிந்துகொள்ள வேண்டியிருக்கும்.

இதுவரை சொன்ன சொற்களும் வழக்குகளும் பொருனைத் தமிழின் உடல் என்றால், அதில் மூச்சுக்காற்றாய் இயங்குவது, அதற்குள்ள ஒரு தனியான ஸ்வரம். பொருனை நாட்டார் பேசும் ஒவ்வொரு சொல்லிலும், சொல் பகுதியிலும் இந்த விசேஷ ஸ்வரம் இழைந்திருக்கும். அதை நீங்கள் கேட்டுத்தான் தெரிந்துகொள்ள முடியும். பொருனையின் குளுகுளுப்பை அனுபவிக்க வேண்டுமானால், அதில் இறங்கி முக்குளி போட்டால்தானே முடியும்?




நான் உமது நண்பன். லட்சக்கணக்கான மக்களுக்கு நண்பன்—ஏழைக்கும் பணம் படைத்தவருக்கும் சமமாக நண்பன். சிறுவரும் பெரியோரும் என்னை விரும்புகின்றனர் எவ்விடத்திலும் எனக்குத் தனிச் சிறப்பும் வரவேற்பும் உண்டு.

ஒய்ச்சலை நொடியில் விலக்கி, வியர்த்து விறுவிறுத்திருக்கையில் உமக்கு அமைதி யளிக்கிறேன். மனோவியாகூலம் அடைந்துள்ள சமயத்தில் சந்தோஷமளித்து மனக் கொந்தளிப்பின்போது சாந்தி தருகிறேன். என்னால் என்றும் கெடுதலில்லை (ஒரு டம்ளர் கூடவே சாப்பிடலாம்): எப்போதும் இன்பத் துணையே.

ஒய்வுக்காக ஏங்கும்போதும், நிமிஷம் செல்வது யுகமாகத் தோன்றும்போதும், கண்ணைத் திறக்கமுடியாமல் களைப்பு மேலிடும்போதும், நான் உமக்குப் புத்துயிர் அளிக்கிறேன். வேலைநேரம் முடிந்து வீடு திரும்பும்போது அங்கும் உமக்குத் தெம்பு கொடுக்கக் காத் திருக்கிறேன்.

உண்மையில், எங்கிருந்தபோதிலும், என்ன செய்தபோதிலும், உடல் நிலை எப்படி இருந்தபோதிலும், என்னை உயிரளிக்கும் பானமென்று காண்பீர்கள். மேலும் இவ்வளவு உயரிய குணங்கள் பெற்ற நான்தான் மிக்க மலிவான பானமுங்கூட; தேநீருக்கு ''பதிலாக'' என்று ஒன்றில்லை.

**நான்தான் டீ — இன்பத்தின் சின்னம்**




PST 147



# ரஸிகர் ரகுராமன்!

**சுப்புடு**

அதோ ரகுராமன் வருகிறார். எதற்கையா ஓடுகிறீர்கள்? பயப்படுவானேன்? அவர் பாட்டுக்கு ஒரு ராகுகால நாழிகைக்குப் பிடித்துவிட்டு தானே விட்டுவிடுகிறார். சரி, இவரிடம் மாட்டிக் கொள்வதைவிட வெளியே வெய்யலிலே மணிக் கணக்கில் வேகலாம் என்கிறீர்களா?

இவ்வளவு பிரமாதப் பீடிகையுடன் வர்ணிக்கப்படும் நபரைப் பற்றி நீங்கள் அறிய ஆசைப்படுவது இயற்கைதான். சொல்லியே விடுகிறேன்.

ரகுராமன் பி.ஏ., பி.எல். கொஞ்ச நாள் கோர்ட் வாசலை மிதித்துப் பார்த்தார். கட்சிக்காரர்கள் ஒத்து வந்தால் நீதிபதி சரிப்பட்டு வரவில்லை. இப்படியாக நாயைக் கண்டால் கல்லைக் காணோம் என்ற நிலையில் ரகுராமன் தில்லியை நோக்கிப் படையெடுத்தார். சண்டை வந்த சாக்கிலே சர்க்கார் உத்தியோகம் கிட்டியது.

ரகுராமன் ரஸிக சிகாமணி. கார்ப்பரேஷன் குப்பை வண்டியிலிருந்து, காம்போதியில் கமக சங்கதிகள் வரை, எல்லாவற்றையும் பற்றித் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பவர். இதிலே தகராறு என்னவெனில், பாக்கிப் பேருக்கு ஒன்றும் தெரியாதென்று அவர் நினைத்துக்கொண்டிருப்பதுதான். "தூக்கி எறிந்து பேசுவதில்" நிகரற்று விளங்குபவர்.

ஒருநாள் பாருங்கள், நான் என் பார்யாள் சகிதம் அவர் இல்லத்தை நாடிச் சென்றேன். இல்லம் எனும்போது நான் புது தில்லி ஒண்டுக் குடித்தன இல்லத்தைக் குறிக்கிறேன். ஒரு அறையும் ஒட்டியுள்ள மித்தமும் கொண்ட அரண்மனையில் வாசம் செய்து வந்தார் ரகுராமன். ஏதாவது பேசவேண்டுமென்று ஆரம்பித்தேன்:

"இரண்டு குழந்தைகளை வைத்துக்கொண்டு ரொம்பக் கிக்கிடம் அல்லவா? எப்படியோ சமாளிக்கிறீர்கள்."

"நான்சென்ஸ்! நாகநாதன் நாலு தடவை வீடு கொடுக்கிறே னென்று சொன்னான். யாருக்கு வேணும் இவன் விநய நகர் வீடு? பங்களா கொடுத்தாலும் இந்த வீட்டை விடமாட்டேன். என்ன காற்று இங்கே? பள்ளிக்கூடம் கிட்ட..."

"ஓஹோ! அப்படியா, சரிதான்" என்றேன். கொஞ்ச நேரம் வேறு ஏதேதோ பேசிக்கொண்டிருந்துவிட்டு, காபி சாப்பிட் டோம். பழையபடியே வீட்டு சமாச்சாரத்தில் வந்து நின்றது சம்பாஷணை. அவருடைய பழைய கூற்றை மனதில் வைத்துக் கொண்டு அவருக்குச் சாதகமாய் ஆரம்பித்தேன்.

"எனக்குச் செப்டம்பரில் அலாட்மன்ட் வருமென்று தோன்று கிறது; முக்கால்வாசி, விநய நகரில்தான். ரொம்ப தூரம். உங்க பாடு தேவலே. சௌகரியமாய் அமைந்துவிட்டது. காற்றோட்ட மாய்......"

"நான்சென்ஸ்! இந்தப் புறாக் கூண்டை வீடென்று சொல்ல உமக்கு வெட்கமாயில்லே? சென்னையிலே எங்கள் மாமா வீட்டை பார்த்திருக்கிறீரா? அந்த வீட்டு வராந்தாவிலே எண்பது குடித் தனம் வைக்கலாமே."

இந்தமாதிரி அடாபுடி ஆட்களிடம் நாம் என்ன பேசுவது? எட்டிக்குப் போட்டி என்பார்களே, அந்தக் கதைதான்.

* * * *

தில்லிக்குப் புதிதாக வந்த சங்கீத வித்வான் ஒருவர் இவர் வீட்டில் தம் வித்வத்தை வெளியிட ஒப்புக்கொண்டார். ஆறரை மணிக்குத் துவங்க இருந்த கச்சேரிக்கு, ஐந்து மணிக்கே பாகவதரை வரவழைத்து விட்டார். நானும் போயிருந்தேன். சம்பாஷணையை அப்படியே கீழே தருகிறேன்.

"இப்ப எல்லாம் சங்கீதம் அகலம் அதிகமாகி ஆழம் குறைந்து விட்டது. கண்டவனெல்லாம் பாட வந்துடரான்கள்."

"அப்படிப் பொதுவாகச் சொல்லக்கூடாது ஸ்வாமி! நான் பதினஞ்சு வருஷம் பரமக்குடியிடம் குருகுல வாசம் பண்ணி வெளி யிலே வந்திருக்கேன். அவருடைய பிச்சைதான் நான் இப்போ கச்சேரி பண்ணுகிறேன்."

"1930-ஆம் வருஷத்தோடு பாட்டே போச்சு. ஒன்பது மணிக்குக் காம்போதி பிடிச்சா, தானம் பாட இரண்டு மணி ஆயிடும். இப்போதெல்லாம் அரை மணி நேரத்திலே, பல்லவி, ராகமாலிகை ஸ்வரம், தனி ஆவர்த்தம் எல்லாம் தீர்ந்துவிடுகிறது. மோசம், மோசம்."

"காலம் மாறியிருக்கிறது. இது அவசர உலகம். அதுக்குத் தகுந்தபடி உத்தியை மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கு. ஏதோ நீங்க பெரிய ரஸிகாள். பார்த்து கௌரவிக்க வேண்டும்." விஷயம் கொஞ்சம் அபஸ்வரமாய்ப் போவதைப் பார்த்து நான் குறுக்கே விழுந்தேன்.

"மணி ஆகிறது போலிருக்கே! கச்சேரி ஆரம்பிக்கலாமா?"

"பேஷா! இதோ."

"தீக்ஷிதர் கிருதிகள் பாடமுண்டா? இந்தக் காலத்திலே யார் பாட்றா?"

"நாற்பது ஐம்பது கீர்த்தனை பாடமுண்டு. வேணது பாடறேன்."

"ஸ்ரீ சுப்ரமண்யாய நமஸ்தே பாடுங்கோ. வாஸவாதிலே மூணுப் பங்கிடு பண்ணி ஸ்வரம் பாடுங்கோ."

"ஆஹா! பேஷா."

கச்சேரி துவங்கி நாலு கீர்த்தனமாகிவிட்டது. ஸ்ருதி கலையு மென்று பங்கா நிறுத்திவிடப்பட்டது. நடு நடுவே பாகவதரை நடுப் பாட்டில் நிறுத்தச் சொல்லி, சாஹித்தியத்தின் அர்த்தத்தைச் சொல்லி, பின்னர் தொடர விட்டார் ரகுராமன். ஒன்பது மணியாகி விட்டது. போதும் போதும் என்றாகிவிட்டது. ஒரு வழியாய் ஹேமவதி ராக ஆலாபனம் செய்து, பல்லவி பாடி முடித்தார் பாகவதர்.

"துக்கடா பாடி முடிக்கட்டுமா?" என்று கேட்டார் பரிதாபத் துடன் பாகவதர்.

"என் மனோபீஷ்டத்தைப் பூர்த்தி பண்ணவில்லையே" என்றார் ரகுராமன்.

"சொல்லுங்கோ காத்திண்டிருக்கேன்."

"ஹேமவதி பாடுங்களேன்."

அப்பொழுது பாகவதரின் முகத்தில் பிரதிபலித்த ஏமாற்றத் தையும் ஏக்கத்தையும் வர்ணிக்க, ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷ னாலும் இயலாது.

ரகுராமனுக்கு ஹேமவதியைப் பற்றித்தான் தெரியுமே ஒழிய, ஹேமவதியைத் தெரியாதென்பதை பாகவதர் கண்டாரா?



# பெட்ரூம் விளக்கு

"கஜமுகன்"

சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது 'படக்கென்று' லைட் அணைந்துவிட்டது. "அட எழவே!" என்று அம்மா மின்சாரத்துக்கு வசை பாடிவிட்டு பெட்ரூம் விளக்கை எடுத்து ஏற்றினுள்.

"மாமி, மாமி" என்று ஒரு பெண் குரல் கேட்கவே அம்மா விரைந்தாள்.

"மாமி உங்க வீட்டில் ஒரு விளக்கு இருந்தால் கொடுங்களேன். எங்கப்பாவுக்குக் கையில் ஏதோ கடித்துவிட்டது. இன்னும் வினக்கு வர எவ்வளவு நாழியாகுமோ தெரியவில்லை."

"என்ன கடித்துவிட்டது? நான் வரட்டுமா? தேள் கடியாய் இருந்தாச் சொல்லு. ஒரு வேர் இருக்கு, கொண்டு தரேன்" என்று அம்மா சொல்லிக் கொண்டே, பெட்ரூம் விளக்கை எடுத்து அந்தப் பெண்ணிடம் கொடுத்து அனுப்பினுள்.

"எலக்ட்ரிக் விளக்கணைந்ததற்கு அப்படி வைதாயே அம்மா. நீ செய்தது ரொம்ப சரியா!" என்று நான் கேட்டேன்.

"ஆபத்துன்னு, என்னடா செய்றது! ஒரு கை விளக்குக்கூட இல்லாம இந்த டில்லியிலே குடித்தனம் போட்டுடறு! ஒரு மெழுகு வத்தியாவது வாங்கி வச்சுக்கலாம்!" என்று அம்மா அங்கலாய்த்தாள்.

"யார், புதுசுபோல இருக்கே. இந்த ஸ்கொயரிலே மெட்ருஸியே கிடையாதே!" என்றேன் நான்.

"ஆமாண்டா, எதிர்த்த சாரியிலே பதினலாம் நம்பரிலே ஒரு பஞ்சாபி இருக்கானேல்லியோ, அவன் வீட்டுக்குக் குடி வந்திருக்கா. எலி வளைமாதிரி அந்த ஸ்டோர் ரூமைக் கொடுத்திருக்கான். பகலிலேயே விளக்குப் போட்டுக்கணும். இருட்டினுக் கேட்கவே வேண்டாம்."

"பதினலாம் நம்பர் வீட்டுக்கா! அடப்பாவமே! அந்த வீட்டுக்கு வந்தவா நாலு நாள் சேந்த வாக்கலே இருக்கமாட்டாளே! அறுத்த கைக்குச் சுண்ணும்புகூடத் தரமாட்டானே! அதான் விளக்குக்கு இங்கே ஓடி வந்திருக்காளோ!"

"ஆமாம்? நம்மடவா பெரிய தர்மப் பிரபுக்கள்தான்! நம்ம பக்கத்துக்காரா வீட்டிலே இருந்தால் ஒரே வம்பு. இந்தச் சங்கடத்துக் கெல்லாம் தானே குடியே வேண்டாம்னு சொல்லிப்பிட்டேன்."

"எதிர்த்த வீட்டுக்காரன் அந்த ஒரு ரூம் தானே கொடுத்திருக்கான். அவா எத்தனை பேர்!"

"அப்பாவும் பெண்ணும் தான். அந்த மனுஷனுக்குக் கொஞ்சநாளைக்கு முன்தான் சம்சாரம் போய்விட்டாள். யாரோ மெட்ருஸி வீட்டிலிருந்தாளாம். அவா படுத்திவச்ச பாட்டைச் சொல்று சொல்றுஅப்படிச் சொல்லறு. கவர்மென்ட்லே வேலையைக் கொடுத்தால்மட்டும் போதுமா! நடுத்தெருவிலேயா குடியிருப்பா!"

"ஏனம்மா, இவ்வளவு பெரிய பெண் இருக்கே. அந்த மனுஷன் வந்து ரொம்ப நாளாயிருக்க வேண்டுமே!''

"மெட்ருஸ் கவர்மெண்ட்டிலே இருந்தாராம். ஏதோ ஐம்பது ரூபாய் கூடக் கொடுக்கருன்னு இங்கே ஓடி வந்து திண்டாடருர்.''

"தேவலே அம்மா நீ. இதுக்குள்ளே இவ்வளவு 'நியூஸ்' தெரிஞ்சுண்டு வந்திருக்கிருயே! உன்னே ஒரு 'நிருபி'யாக நியமிக்கலாம் அம்மா!''

"கேக்கற வம்பெல்லாம் கேட்டுவிட்டுக் கேலி என்னடா வேண்டியிருக்கு!'' என்று அம்மா முகத்தை நொடிப்பது, மீண்டும் பளிச்சிட்ட விளக்கொளியில் தெரிந்தது.

பதினைந்து நிமிஷத்துக்கெல்லாம் அந்தப் பெண் பெட்ரூம் விளக்கைத் திருப்பிக் கொடுக்க வந்தாள்.

"அப்பாவுக்கு சரியாகிவிட்டதா!'' என்று நானே அவளைக் கேட்டேன்.

"கட்டெறும்பு கடித்துவிட்டது. வேறு ஒன்றுமில்லே'' என்று அவள் நாணத்துடன் பதிலளித்தாள்.

"ஒன்றுமில்லேயாவது. இந்த ஊர்க் கட்டெறும்பு கடித்தால்தான் உழக்கு ரத்தம் கொட்டுமே! கொஞ்சம் ஏதாவது ஆயின்ட்மெண்ட் இருந்தால் போடுங்கள்!''

"போட்டாய்விட்டது. இந்த பெட்ரூம் விளக்கில்லாவிட்டால் அப்பா கஷ்டப்பட்டிருப்பார். வயசான தேகம். சிறு வலியைக்கூடத் தாங்க சக்தியில்லே. வீட்டுக்கு ரொம்ப தாங்ஸ்!''

"வீட்டுக்குத் தானே!'' என்று கூறிச் சிரித்தேன். அதற்குள் அம்மா வந்துவிட்டாள்.

## 2

இந்த நிகழ்ச்சி நடந்த மறுநாள் மாலே, வாசலில் புல் வெளியில் உட்கார்ந்திருந்தேன். புல்வெளி என்ற பெயரே தவிர பசுமை என்பதே அற்றுக் கிடந்தது. இந்தப் பசுந்திடல்களை ஒரு காலத்தில் மிகுந்த அக்கறையோடு வெட்டிச் செதுக்கி, தண்ணீர் பாய்ச்சிப் பராமரித்து வந்தார்கள். இப்போதெல்லாம் ஒரே அலட்சியம். நம்மை நாமே ஆளுகிறேமல்லவா? அதனுல் யாரைக் குறை சொல்வது?

எதிர்த்த வீட்டு மனிதர் என்னே நோக்கி வந்தார்.

"வாருங்கள் ஸார். எறும்புக்கடி எல்லாம் சரியாகிவிட்டதா?''

"ஹி ஹி! என்னமோ விளக்கணேயறதுக்கும் அது கடிக்கிறதுக்கும் சரியாயிருந்தது. பயந்துபோய் என் பெண் ஓடி வந்தாள். நீங்கள் செய்த உதவிக்கு...''

"சரிதான், சரிதான்! இப்படி உட்காருங்கள். உம், நீங்க எந்த ஆபீஸ்?''

"இண்ட்ஸ்ட்ரீஸ் அண்டு காமர்ஸ் லேதான் இருக்கேன். ஸெக்ரெடரி ஒரு தரம் மெட்ருசுக்கு வந்தபோது, டெல்லிக்கு வரயான்னு கேட்டார். ஆயுளிலே பாதி மெட்ருஸிலே இருந்துதான் தலே வழுக்கையாகிவிட்டதே, டெல்லிக்காவது போகலாமேன்னு சபலம் தட்டித்து. வந்து தொலேஞ்சேன். மூணு வருஷமாகிறது. அதுக்குள்ளே முப்பது வீடு மாறியாச்சு. வீடு மாத்தி வீடு மாத்தியே பெண்டாட்டிக்கு உடம்புக்கு வந்து உயிரை விட்டாள். கடவுளே பாத்து என் குடும்பத்தைக் கட்டுப்படுத்திவிட்டார். ஒரே ஒரு பெண்தான். அவளுக்கு ஒரு கல்யாணம் ஆயிடுத்துன்னு துண்டை உதறித் தோளிலே போட்டுண்டு, இப்படி ஹரித்வார், ரிஷிகேஸ் என்னு கிளம்பிடுவேன்...''

"நீங்களே இப்படி விரக்தியாப் பேசினு, உங்க பக்கத்து வீட்டு வங்காளி எப்படிப் பேசமாட்டான்? அவனுக்குப் பத்துக் குழந்தைகள். அவன் மூஞ்சியிலே கொஞ்சமாவது வருத்தம்

இருக்கா பாத்தேளா ? வாழ்க்கையிலே மேடு பள்ளம் சகஜம்தானே !''

"ஸார் ஏது, இந்த வயசிலேயே இவ்வளவு வேதாந்த பரமாகிவிட்டேளே !''

"உங்களைப்போல உள்ளவா கஷ்டங்களைக் கேட்டுக் கேட்டுத்தான் நான் இந்த நிலைமைக்கு வந்துவிட்டேன். நானும் இந்த ஊருக்கு வந்து பத்துவருஷமாச்சு. நிறைவோட கூடிய தமிழனை இன்னக்கி வரை பார்க்கல்லே. பணக்கஷ்டமில்லாட்டா, குளிர், வெய்யில் என்று சீதோஷ்ண நிலையை நினைத்தாவது நொந்துகொண்டிருப்பான். இந்த ஊரில் பிறந்தவனும் மனுஷன்தானே ஸார் !''

பேச்சு திசை மாறவே எதிர்த்த வீட்டுப் பெரியவர் மௌனம் சாதித்துவிட்டார்.

"ஏன் ஸார், பெண்ணுக்கு ஒரு ஐ. ஏ. எஸ். ஸாவது பார்த்துண்டிருப்பேளே !''

"ஒரு பெட்ரூம் விளக்கிற்கு விதியில்லாதவன் ஐ. ஏ. எஸ்ஸைப் பார்க்க மாட்டேனே ! ஏன் ஸார் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறீர்கள் !''

"அடடா ! நான் சொன்னதையெல்லாம் தப்பாக நினைக்காதீர்கள். ஒரே பெண். நல்ல இடத்தில் கொடுக்கலாமே என்றுதான் சொன்னேன்.''

"என்னமோ ஸார், இந்த ஊரில் எவனுக்குமே நான் கொடுக்கப்போவதில்லே. ...''

"மறுபடியும் பார்த்தீர்களா ! ஊரைக் குறை சொல்லாதீர்கள். இந்த ஊரிலே மூலே முடுக்குகளிலே என்ன பார்க்கிறீர்கள் !''

"சமாதிகள்தான் சிதறிக்கிடக்கு.''

"அப்படித்தான் மனுஷாள் மனமும் ஈவிரக்கமில்லாமல் இருக்கும். அதுக்காக ஊர் என்ன செய்யும் !''

அவருடைய பெண் பரக்கப் பரக்க ஓடிவந்தாள்.

"அப்பா, வீட்டுக்காரன் சண்டைப் பிடிக்கிறான்'' என்றாள்.

"எதற்காக !''

"பால் காய்ச்ச ஹீட்டர் வச்சேன். ப்யூஸ் போயிடுத்து. அவன் காட்டுக் கத்தலாக கத்தறான். எனக்கு அங்கேயிருக்க பயமாயிருக்கு !''

"பார்த்தேளா ஸார் இந்த ஊர் மனுஷாளுடைய லட்சணத்தை! என் கொயரி ஆபீஸ்கூட மூடியிருப்பானே! என்ன செய்வது ?''

"ஸார் நான் ஏதாவது ஏற்பாடு பண்றேன். நீங்க எங்க வீட்டு பெட்ரூம் விளக்கை எடுத்துண்டு போங்கோ !''

நான் சைக்கிளில் என்கொயரி ஆபீஸுக்கு ஓடினேன். அங்கு ஒரு ஈ காக்காய் இல்லே.

பவர் ஹவுஸுக்குப் போனேன். அங்கிருந்து ஒரு ஆளைப் பிடித்துக் கொண்டு வருவதற்குள் நன்றாக இருட்டிவிட்டது.

வீட்டுக்காரனும் அந்தப் பெரியவரும் வாக்குப் போர் நடத்திக்கொண்டிருந்தார்கள். ஹீட்டர் உபயோகப்படுத்தக்கூடாது என்று அவன் ஏற்கனவே சொல்லியிருந்தானாம். "இந்த க்ஷணமே வீட்டைக் காலி பண்ணு !'' என்று அவன் கூப்பாடு போட்டான்.

"முடியாது, உன்னாலானதைப் பார்த்துக்கொள். நீ அநியாய வாடகை வாங்குகிறாய் என்று நாளைக்கே ரிப்போர்ட் செய்றேன். அப்புறம் தெரியும் உன் கதி !''

"தாராளமாய் ரிப்போர்ட் பண்ணய்யா ! நாளைவரை உன்னை யாரைய்யா என் வீட்டில் வைத்துக்கொள்ளப்போகிறார்கள் ?'' என்று அவன் அவருடைய சாமான்களையெல்லாம் தூக்கி வெளியே எறிய ஆரம்பித்தான்.

அவருடைய நிலைமை சங்கடமாகிவிட்டது. அவரோ ஸ்கொயருக்குப் புதிது. சொன்ன பேச்சை மீறியது

தவறு என்று ஸ்கோயர் வாசி கள் கருதினபடியால் பேசாமல் இருந் தார்கள்.

இதற்குள் அந்தப் பெண் என் அம் மாவை அழைத்து வந்துவிட்டாள்.

"டேய் அவரை நம்ம வீட்டுக்கு வரச்சொல்லுடா. வேறே வீடு கிடைக் கிறவரைக்கும் நம்மோடயே இருக்கட் டும்" என்றாள். எனக்குத் தூக்கி வாரிப்போட்டது! குடியே வான் டாம் என்று குறுக்கே விழுந்து மறித்த அம்மாவா இப்படிப் பேசுகிறாள் என்று எனக்கு ஒரே வியப்பாகப் போயிற்று.

தகப்பனும் பெண்ணும் என்னைப் பரிதாபமாகப் பார்த்தார்கள்.

வேறு வழி இன்றி அவர்களை என் வீட்டில் குடியேற்றிக்கொண்டேன்.

## 3

பெட்ரும் விளக்கு வாங்க வந்தவள் என் வீட்டில் ஒரு குத்து விளக்காகச் சுடர் விட்டாள். வந்த இரண்டு மூன்று நாளைக்குள் என் தாயாரின் பேரபிமானத்தைப் பெற்றதுடன் என் மனதிலும் கொஞ்சம் கொஞ்சமாக இடத்தைப் பிடித்துக் கொண்டுவிட்டாள். அவர்கள் வேறு வீடு பார்க்கும் எண்ணத்தையே விட்டு விட்டார்கள். நாங்களும் போகச் சொல்லவில்லை.

ஒரு நாள் ஆபிஸிலிருந்து வந்த போது, அந்தப் பெண் விசித்து விசித்து அழுதுகொண்டிருந்தாள். என் தாயார் சமாதானப் படுத்திக் கொண்டிருந் தாள்.

"என்னம்மா!"

"அவள் அப்பா எங்கேயோ போய் விட்டார்."

"என்னம்மா விளையாடுகிறாய்!"

"உண்மைதான். நானும் அதற்கு ஒரு வகையில் பொறுப்பாளி..."

"நீ பொறுப்பாளியா!"

"ஆமாம். அவர் உனக்குத் தன் பெண்ணைக் கொடுப்பதாகச் சொன் னார், எனக்கு சம்மதம் என்று சொன் னேன். நீதான் கல்யாணம் செய்து கொள்ளவே போறதில்லேன்னுயே. அதை அவரிடம் சொன்னேன். அதைக் கேட்டுவிட்டு பெண்ணை நம்மி டம் விட்டு ஓடிப்போயிட்டார். இந்தப் பெண்ணை..."

"எனக்கு என்ன பதில் சொல்வ தென்றே புரியவில்லை, இப்படியும் ஒரு மனுஷ ஜன்மம் உண்டா என்று எனக்கு வியப்புத் தாங்கவில்லை. என் னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாதா அந்த ஆசாமி. கல்யாணம் செய்துகொடுப்பதற்கு முன்பே துறவி யாகிவிட்டாரே!"

மேஜைமீது ஒரு கடிதம் கிடந்தது. அது அவர் எழுதியதுதான்.

"அன்பரே,

எனது செயலுக்கு மன்னிக்கவும். இப்படி ஒரு பொறுப்பற்ற தந்தையை நீங்கள் பார்த்திருக்கமாட்டீர்கள். ஆனால் கல்லறைகள் நிறைந்த இந்த ஊரில் வந்தபிறகு, என் மனதும் கல் லாகிவிட்டது. என் மனைவி போன பிறகு மகள் ஒருத்திதான் எனக்குள்ள ஒரே பந்தம். அவளுக்கு விவாகமாகி விட்டால் அதுவும் போய்விடும் என்று தான் எண்ணி வந்தேன். ஆனால் அதற்குள்ளேயே அந்த பந்தத்தை துண்டித்துக்கொண்டு போகிறேன்.

முதலில், இருண்ட வீட்டுக்கு விளக் குக் கொடுத்து ஒளி தந்தீர்கள். பிறகு பரந்த வெளிக்குத் துரத்திய எங்களை, உங்கள் கூரைக்குள் அழைத்து இடம் தந்தீர்கள். அதுபோல், திக்கற்ற என் மகளுக்கு உங்கள் இதயத்தில் இட மளித்து அவளுக்கு வாழ்வளிப்பீர்கள்

என்று நம்புகிறேன். விளக்கு வாங்க வந்தவள் உங்களிடம் ஈடு பாடு கொண்டுவிட்டாள். நீங்களும் அக் கறையுடன் அவள் மனத்தைப்பற்றி விசாரித்தீர்கள். உங்கள் மனசை யறியாது, உங்கள் தாயார், நீங்கள் எப்போதா செய்த சபதத்தை எண்ணி மன வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். குடி வைத்துக்கொள்வதில்லை என்ற உறுதியை அன்று நாங்கள் குலைத்து விட்டோம். அதேபோல் மணம் செய்து கொள்வதில்லை என்ற உறுதியை, என் பெண்ணைத் தனியே விட்டுச் செல்வதன்மூலம் குலைத்துவிடுகிறேன்.

என் பெண் ஐ. ஏ. எஸ் காரனுக்கு ஏற்ற மின்சார விளக்கல்ல. ஏழைக் குடிசைக்கேற்ற பெட்ரூம் விளக்குத் தான்! அதை அணையாமல் பார்த்துக் கொள்ளுங்கள்..."



# சீனச் சிங்காரி

ஜயா சக்ரவர்த்தி

"கொரியா யுத்தத்தில் கலந்து கொண்டிருக்கும் சேனைகளுக்கு வைத்திய உதவி செய்ய அநேக டாக்டர்கள் தேவை" என்ற விளம்பரங்கள், பத்திரிகைகளில் வெளியாயின. உடனே நான் மனுப் போட்டுவிட்டேன். விரைவில் காரியமும் கைகூடியது. என்போன்ற பல 'டாக்டர்' பட்டதாரிகளும் இதில் பொறுக்கப் பட்டிருந்தார்கள்.

கரை காணாத கடலின்மீது, கப்பல் யாத்திரை, எனக்கு எல்லையில்லாத இன்பமூட்டியது. கூட வந்தவர்கள் எல்லோரும் என்னுடைய நண்பர்கள் ஆகிவிட்டார்கள். ஜல மார்க்கம், தரை மார்க்கம் எல்லாம் கடந்து கொரியாவின் எல்லையை அடைந்தோம். அங்குதான் எங்களுக்காகக் கூடாரங்கள் போடப்பட்டிருந்தன.

காயமுற்றவர்களுக்குச் சிகிச்சை செய்து காப்பாற்றி, சேவா 'பலனை அடைகிறோமென்ற ஆனந்தம் ஒரு பக்கம் இருந்தாலும், மாறுதலேயின்றி தினமும் பேயிரைச்சலையும், அலறல்களையும். வெடிச் சப்தங்களையும் கேட்டுக் கேட்டு அலுத்துப் போயிற்று.

மூன்றாண்டுகளுக்குப் பின் யுத்தம் ஒரு வழியாக முடியும் தருவாயையடைந்தது. மீண்டும் தாய்நாடு திரும்பலாமென்ற உத்தரவு கிடைத்ததும், நான் அடைந்த ஆனந்தம் கொஞ்சநஞ்சமல்ல. அங்கிருந்து திரும்புகையில், பல ஊர்களைச் சுற்றிப் பார்க்க சந்தர்ப்பம் கிடைத்தது.

ஹாங்ஹாங் நகரில் சில நாள் தங்கி, அவ்வூர் மனிதர்களின் தன்மையை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் எனக்கு வெகு நாட்களாகவே இருந்தது. உடன் வந்த நண்பர்களையெல்லாம் விட்டு விட்டு, நான்மட்டும் ஹாங்காங்கில் தங்கினேன். ஒரு ஹோட்டலில் வாடகைக்கு அறை எடுந்துக்கொண்டு, இஷ்டப்படி சுற்றிக் கொண்டிருந்தேன்.

ஒருநாள் இரவு, நான் வெளியே செல்லவில்லை. ஏனெனில் கடுமையான குளிர்; பனி பெய்தது. பெரிய மெத்தையைப் போர்த்திக்கொண்டு படுத்திருந்தேன். அறைக் கதவைத் தாளிடவில்லை. புத்தகம் படிக்கும் ஆர்வத்தில் தன்னை மறந்திருந்தேன். கண் அயர்ந்த தருணத்தில், மிருதுவான குளிர்ந்த விரல்களின் ஸ்பரிசம் பட்டுத் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தேன்.

என்ன அதிசயம்!

அழகே உருவாயமைந்த ஒரு சீனப் பெண், என் கட்டில்மேல் தைரியமாக உட்கார்ந்திருந்தாள். திகைப்படைந்த நான் அவளை ஊடுருவிப் பார்த்தேனே தவிர பேசத் துணிவு வரவில்லை. அந்தப் பெண், முத்துப் போன்ற பல் வரிசைகள் தெரியச் சிரித்தாள். "ஏன், என்னைப் பார்த்தால் பயமாக இருக்கிறதா! இப்படி ஏன் பார்க்கிறீர்கள்!" என்று அவள் ஆங்கிலத்தில் கேட்டாள். நான் அசட்டுச் சிரிப்புடன் தலை யசைத்தேன்.

கொரியாவில் எங்கள் முகாமில் பல சீனப் பெண்களும், இந்தியப் பெண்

களும் பணியாற்றினார்கள். அவர்களில் யார்மீதும் நான் ஆசை கொண்டது கிடையாது. ஆனால் இவளிடமோ!...

கொஞ்ச நேரம் என்னுடன் பேசி விட்டு அவள் போய்விட்டாள். அவள் போனபின்னும், அந்த அறையில், மலரின் நறுமணம் சூழ்ந்திருந்தது. ஒரே ஒரு மல்லிகை மலரைத்தான் அவள் கொண்டையில் சொருகியிருந் தாள். அதற்கு இவ்வளவு மணமா!

மெல்லிய சிவந்த சரீரம். சந்திர பிம்பம்போன்ற முகம். சீனப் பெண் ணானதால் கண்கள் சிறிதே சுருங்கி யிருந்தன. ஆனால், நீண்ட நாசி. வில் போன்ற வளைந்த புருவங்கள். குழி விழும் ரோஜாக் கன்னங்கள். துடிக் கும் உதடுகள், அழகிற்கு இன்னும் என்ன வேண்டும்!

இளமைப் பொலிவுடன் விளங்கும் மோகனமான அங்கங்களை, நீல நிற உடைகள் தழுவியிருந்தன. கறுப்பு நிறக் கம்பளிக் கோட்டு ஒன்றை முதுகுப்புறம் மட்டும் போர்த்தி யிருந் தாள். கால்களில் வெல்வட் ஜோடு கள். கழுத்திலோ, கைகளிலோ, ஒரு விதமான நகைகளுமில்லை. அப் பொழுது, நகைக்காக உயிரை விடும் தமிழ்நாட்டு நாரீமணிகளின் நினைப்பு ஒரு வினாடி எனக்கு வரத்தான் செய் தது. பூர்ண எழிலுக்கு, அலங்காரம் எதற்கு?

அவள்தான் அழகாக இருந்தாள் என்றால், அவள் குரல்கூடவா அப்படி யிருக்கும்? மெல்லிய குரலில் சுருக்க மாக அவள் கேட்ட இரண்டொரு கேள்விகள், என் அறையிலே ரீங்கார மிட்டுக்கொண்டிருந்தன. அதிகம் சொல்வானேன்! நான் பித்தனானேன்.

மறு தினத்திலிருந்து, அவள் வரு வாளா வருவாளா வென்று தவம் கிடந்தேன். நான்கு நாட்களுக்குப் பின் அவள் மீண்டும் என்னிடம் வந் தாள். ஆனால், நீல உடையிலல்ல; தாமரை வர்ண உடையில்.

நான் அவளை வரவேற்று உபசரித் தேன். இருவரும் ஒன்றாகச் சிற்றுண்டி கள் சாப்பிட்டோம்; ஏதேதோ பேசி னோம்; வெளியே உலாவினோம்; கொஞ்சிக் குலவினோம்.

லூயி நாவை விட்டு, ஒரு வினாடி கூடப் பிரிந்திருக்க முடியவில்லை. பெற் றவர்களை மறந்தேன். நாட்டை மறந் தேன். விளையாட்டுப்போல் ஒன்று, இரண்டு என்று, மூன்று வாரங்கள் ஓடி விட்டன.

யார் என்ன வேண்டும் என்றாலும் நினைத்துக் கொள்ளட்டும். இந்தியா விற்கு லூயியையும் கூட அழைத்துச் செல்வதென்றே நிச்சயித்து விட்டேன். அவளும் அதற்குச் சம்மதித்தாள்.

மறுநாள் கப்பல் ஏறவேண்டும். அன்று இரவு எனக்குத் தூக்கமே வர வில்லை. லூயி என் அருகேதான் இருந் தாள். தன் தளிர்க் கரங்களினால் திராட்சை ரஸத்தைக் கண்ணாடிக் கோப்பையில் ஊற்றி ஊற்றி என்னைப் பருகச் செய்தாள். நிம்மதி இழந் திருந்த நான். சற்றே கண்ணயர்ந் தேன். சிறிது நேரத்தில் நன்றாகவே தூங்கிவிட்டேன்.

சூரிய கிரணங்கள் ஜன்னல் வழி யாக மேலே விழவே, விழித்தெழுந் தேன். கொட்டாவி விட்டவாறே சுற்றுமுற்றும் பார்த்தேன். லூயியைக் காணவில்லை. அறைக் கதவும் திறந்து கிடந்தது. "லூயி! லூயி!" என்று உரக்கவும் கூப்பிட்டுப் பார்த்தேன். பதில் இல்லை. எழுந்ததும் பெட்டியைத் திறந்து, காலை உடைகளை அணிவது என் வழக்கம். என்ன இது! பெட்டி யையும் காணோம். ஏன், அறையில் என்னுடைய பொருள்களில் ஒன்றை யுமே காணவில்லை. என் மனம் பகீ ரென்றது. ஜன்னல்மேல் வைக்கப் பட்டிருந்த ஒரு வெள்ளைக் காகிதம், அப்போது காற்றில் பறந்துவந்து என் காலருகே விழுந்தது. நடுங்கும் கரங் களுடன் அதை எடுத்துப் பிரித்துப்

பார்த்தேன். லூயிதான் எழுதியிருந்தாள்.

'உங்கள் பேரன்பிற்கு வணக்கம்! பாவம்! என்னை நம்பி மோசம் போனீர்கள். இதுதான் எங்கள் குல வழக்கம். நான் கொள்ளைக் கூட்டத்தாரில் ஒருத்தி. எங்களைப் பிடிக்க வல்ல போலீஸார் கிடையாது. தாய் நாடு சென்றபின்னும், என்னைத் தாங்கள் மறக்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன். இனிமேல் ஏமாற்றமடையாதீர்கள்.

உங்கள் லூயி.

கடிதத்தைப் படித்த நான் "ஐயோ!" என்று அலறினேன். அந்தப் பாவி பணம் மட்டுமா கொண்டு போனாள்? என் பதவித் தாள்களையும் சர்க்கார் வெகுமதிகளையும் அல்லவா கொண்டுபோய் விட்டாள்! அவைகளோடு, கப்பல் பாஸையும் பெற்றோருக்கென்று வாங்கிய பலவித சாமான்களையும் சுருட்டிக்கொண்டு போய் விட்டாள். நல்லவள்போல் நடித்த அந்தப் பேயை, வாயில் வந்தபடி திட்டினேன். அவள் காதுகளில் விழுமா என்ன?

# அவள் இருந்தால்........



### பாக்ய லக்ஷ்மி

"பால்காரன் விடியற்காலை ஐந்து மணிக்கே வந்துவிடுவான். நீங்கள் பாலை வாங்கிக்கொண்டு கதவைத் தாளிடாமல் உள்ளே போய்விடப் போகிறீர்கள். பொன்னம்மா பாத்திரம் தேய்ப்பதற்கு சீயக்காய்ப் பொடியை அள்ளிக் கொட்டிக் கொண்டு விடுவாள்; சற்று கவனித்துக் கொள்ளுங்கள்...நான் அவளிடம், சீக்கிரம் வந்து ஐயாவுக்குக் கொஞ்சம் வென்னீரடுப்பை மூட்டிக் கொடுத்து விடு என்று சொல்லியிருக்கிறேன்;... வென்னீரிலேயே ஸ்நானம் செய்யுங்கள்...அவசரம் என்று பச்சைத் தண்ணீரில் குளித்துவிட்டு உடம்புக்கு வரவழைத்துக்கொண்டு விடாதீர்கள்... இவ்வாறு கூறிக்கொண்டிருந்த கமலியின் நாக்கு தழதழத்துவிட்டது. பொங்கிவந்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டாள்.

"சரி, சரி, அசடு மாதிரி, போகும் சமயத்தில் அழாதே கமலி. என்னைக் கவனித்துக்கொள்ள எனக்குத் தெரியாதா என்ன? என்றுமில்லாத எண்ணங்கள் இன்று எங்கிருந்து எழுந்து விட்டன உன் மனதில்? நீ இல்லாவிட்டால் என் காரியங்களைக் கவனித்துக் கொள்ள எனக்குத் தெரியாதா என்ன? நீ கவலைப்படாமல் போய்விட்டுவா. என்னமோ, நான் பிறந்ததிலிருந்து நீதான் என்னைப் போஷித்து சிச்ருஷை செய்தவள்போல் பிரமாதமாக அளக்கிறாயே..." என்று கோபமும் குறும்பும் கலந்த குரலில் மனைவியைத் தேற்ற முயன்றான் ராகவன்.

"ஆமாம், நானில்லாவிட்டால் உங்கள் அம்மா செய்திருப்பார். பெரிதாகப் பெருமை அடித்துக்கொள்கிறார். ஒரு கஷ்டமும் தெரியாமல் அவ்வளவு செல்லமாக அவர் உங்களை வளர்த்து வைத்திருப்பதால்தான் இப்பொழுது நான் விசாரப்பட வேண்டியிருக்கிறது," என்று கூறிவிட வேண்டும் போலிருந்தது கமலிக்கு.

ஆனால் அவள் உள்ளத்தைப்போலவே குமுறிக்கொண்டு, பேரிரைச்சலுடன் புறப்பட்டுவிட்ட ரயில், அதற்குமேல் பேச அவளுக்கு அவகாசம் அளிக்கவில்லை.

• • • •

வீடு திரும்பிய ராகவன், 'அப்பாடா,' என்று ஏதோ பெரிய சுமை நீங்கியது போல் பெரு மூச்சு விட்டவாறே படுக்கையில் படுத்தான். பால்காரன் காலையில் 'தடதட'வென்று கதவைத் தட்டியபோதுதான் அவனுக்கு விழிப்பு வந்தது.

"கமலி, பால்காரன்" என்று முனகிவிட்டு, படுக்கையில் புரண்டு, போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டான்.

பால்காரன் 'சாமி, பால்' என்று ஜன்னலருகில் வந்து மறுபடியும் கத்தினபோதுதான், கமலி ஊருக்குப் போய்விட்டாள் என்பது அவன் நினைவுக்கு வந்தது.

"இதேதடா வம்பு! பொழுது விடிவதற்கு முன் பாலுக்கு என்ன அவசரம்?" என்று அலுத்துக்கொண்டே, எழுந்திருக்க மனமில்லாமல் எழுந்து,

விளக்கைப் பொருத்திவிட்டு, தூக்கக் கலக்கத்துடன் வாசற் கதவைத் திறந்து, "உம், ஊத்துடாப்பா" என்றான்.

"என்ன சாமீ, பாத்திரம் கொண்டு வரலீங்களா!"

"நாசமாப் போச்சு." என்று கண்ணைக் கசக்கியபடி உள்ளே சென்றான் ராகவன்.

பால் கிண்ணியைத் தேடி எடுத்து வந்து பாலை வாங்கி மேஜைமேல்வைத்து விட்டு, ஸிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்ட போதுதான், காபி போடுவதற்கு 'ஸ்டவ்' வைப் பற்ற வைக்க வேண்டுமென்ற எண்ணம் அவனுக்குப் பிறந்தது.

நெருப்புப் பெட்டியை ஜேபியில் போட்டுக்கொண்டு சமையலறைக்குச் சென்றான். 'ஸ்டவ்'வைப் பளிச் சென்று தேய்த்துத் துடைத்துவைத் திருந்தாள் கமலி. "மண்ணெண்ணெயை எங்கே ஒளித்து வைத்துவிட்டுப் போய்விட்டாள், இந்த மஹாராஜி" என்று கூறியவாறே, அவன் சுற்றுமுற்றும் தேடிப் பார்த்துக்கொண்டு நிற்கையில், 'தடால்' என்று எங்கோ பாத்திரம் விழுந்து உருண்ட சத்தம் கேட்டது. வாசல் அறையை நோக்கி விரைந்தான் ராகவன்.

தரையில் வழிந்தோடிக்கொண்டிருந்த பாலை வெகு சுவாரஸ்யமாக சுவைத்துக்கொண்டிருந்தது ஒரு பூனை. ராகவன் திகைத்து நின்றான். திறந்து கிடந்த வாசற் கதவின் வழியாகச் சில்லென்று வீசிக்கொண்டிருந்த காலைக் காற்றுடன், முதல் நாள் இரவு கமலி கூறிய வார்த்தைகள் மெல்ல மிதந்து வந்தன....

"சாமீ, அடுப்பை மூட்டட்டுங்களா?"

பொன்னம்மா வந்து விட்டாள். பொழுது பொல பொலவென்று விடிந்துவிட்டிருந்தது.

"உம், வாசக் கதவைச் சாத்திவிட்டு, முதலில் இந்தக் களேபாரத்தையெல்லாம் எடுத்து சுத்தம் செய்," என்று உத்திரவிட்டு விட்டு, துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு பல் தேய்க்கச் சென்றான்.

மெல்ல நகைத்தவாறே தரையைத் துடைத்து சுத்தம் செய்தாள் பொன்னம்மா.

ஸிகரெட்டைப் புகைத்தவாறே பேப்பர் படித்துக் கொண்டு சிந்தனையாக அமர்ந்திருந்தான் ராகவன்.

"சாமீ, வென்னீரடுப்பைப் பத்த வச்சிட்டேனுங்க. நீங்க காப்பி கீப்பி ஒண்ணும் சாப்பிடலீங்களா! இஸ்டவ் மூட்டறதுக்கு மண்ணெண்ணே..."

"எண்ணெயும் வேண்டாம், மண்ணும் வேண்டாம். இந்த பிளாஸ்கிலே இருக்கிற தண்ணியைக் கொட்டிவிட்டு, பக்கத்துத் தெரு ஹோட்டலுக்குப் போய் நான் கேட்டேன்னு சொல்லி, நல்ல சூடா காப்பி வாங்கி வா" என்று பொன்னம்மாவிடம் சில்லறையைக் கொடுத்தனுப்பினான்.

தினந்தோறும் காலையில் அவன் பேப்பர் படித்துக் கொண்டிருக்கும் போது, சுடச் சுட அருமையான காபியைக் கொண்டுவந்து அன்புடன் கொடுப்பாள் கமலி.

"ஆமாம், அவளுக்கென்ன! ஜம் மென்று ரயிலில் போய்க் கொண்டிருப்பாள்," என்று எண்ணினான் ராகவன். பிறகு சற்று நேரத்துக்குப் பின் "ஷேவிங்குக்கு வைத்திருந்த வென்னீர் ஆறிப்போகிறதே" என்று அவள் வந்து ..."அடாடா. மறந்தே விட்டேன். ஷேவிங்குக்குக்கூட சுடு தண்ணி கிடையாது போலிருக்கே" என்று பேப்பரை எறிந்துவிட்டு, காபியை மடக் மடக்கென்று குடித்துவிட்டு ஸ்னான அறைக்கு ஓடினான். ஒரே புகை; கண்ணைக் கரித்தது. செம்பைத் தேடிப்பிடித்து, வென்னீர் அண்டாவிலிருந்து, அறை குறையாகச் சுட்டிருந்த ஜலத்தை மொண்டு கொண்டு வந்து, ஏதோ ஒரு வகையாய்க் காரியத்தை முடித்தான்.

நாற்காலியில் சாய்ந்தவாறே ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த ராகவனுக்கு, கடிகாரம் எட்டுமணியடித்து, பணிவிடை புரிவதற்குப் பத்தினி வீட்டிலில்லை என்று அறிவித்து, அவனைத் தட்டியெழுப்பியது.

ஆபீஸுக்குக் கிளம்பு முன் கோட்டை எடுத்து மாட்டிக் கொண்டபோது, அதில் ஒரு பித்தான் பிய்ந்து போயிருப்பதைக் கண்ட ராகவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

தன் காரியங்களைத் தானே கவனித்துக் கொள்ளத் திறமையுண்டு என்று கூறினானே; இப்போது மட்டும் அவன் மனம் கமலியை நினைப்பானேன்!

கோட்டுக் கேற்ற பித்தான், நூல், ஊசி முதலிய சாதனங்களை கமலியின் கஜானாவிலிருந்து குடைந்து எடுத்து, அதைத் தைத்து முடிப்பதற்குள் ராகவன் திக்கு முக்காடி விட்டான்.

அவன் திண்டாட்டத்தைப் பார்த்து ஏளனம் செய்வதற்கும், அவன் அணிந்திருந்த நீல நிற ஸூட்டுக்கு அந்த சிவப்பு டை ஒத்துக்கொள்ளவில்லை என்று தோண தோணப்பதற்கும், கமலி அங்கு இல்லாதது நல்லதே என்று தோன்றியது ராகவனுக்கு.

வீட்டைப் பூட்டிக்கொண்டு, அவசரமாய் ஹோட்டலுக்கு ஓடி, சாப்பாட்டை மெல்லாமல் விழுங்கிவிட்டு, அன்று அவன் ஆபீஸ் சேரில் சென்று அடைக்கலம் புகுந்தபோது மணி பத்தே கால்!

வியர்த்துக்கொட்டியிருந்த முகத்தைத் துடைத்துக்கொள்ள, கைக்குட்டைக்காக கோட்டுப் பையைத் துளாவினால், பை காலி. கைக்குட்டையையோ ஆபீஸ் சாவியையோ, பர்ஸையோ ஒரு நாளாவது அவள் ஞாபகப்படுத்தாமல், அவன் தானாக எடுத்துக்கொண்டதுண்டா!

"இல்லை தான்" என்று ஒப்புக் கொண்டது அவன் மனம்.

அவள் இருந்தால்......



# போகிற போக்கிலே

ஆர். ஜகந்நாதன்

எங்களுடைய 'பஸ்' பூவானூர்ப் பாலத்தை நெருங்கியதும், ஒரு முடி இறக்கின குழந்தையை ஒருவன் கையில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையைத் தூக்கி வண்டியை நிறுத்தும்படி வேண்டினான்.

"சித்தே நிற்கச் சொல்லு, இதோ வந்துட்டேன்," என்று, பாலத்தின் நடுவிலிருந்து ஒரு பெண்மணி இனிமையாகக் கூவினாள். வேகமாக நடந்து வருவதற்குச் சற்றுத் தடங்கலாயிருந்த புடவைக் கட்டைச் சரிப்படுத்திக்கொண்டு, கையில் ஒரு பையை எடுத்துக்கொண்டு வந்துகொண்டிருந்தாள். பாலத்தில் அவளைத் தவிர வேறு ஒருவரும் இல்லை.

பாமணி ஆற்றுக்கு அக்கரையிலிருக்கும் பூவானூரை மன்னார்குடி-நீடாமங்கலம் சாலையுடன் சேர்ப்பதற்காகக் கட்டியது அந்தப் பாலம். வண்டிப் போக்குக்கு ஏற்றதில்லை. நடந்துதான் அதைக் கடக்கவேண்டும். மாலைவேளை. மஞ்சள் வெயில் உலாவும் சமயம். பெண்மணியும் லேசான மஞ்சள் நிற முடையவள். அரக்குக் கரை போட்ட மஞ்சள் கலர் புடவையை உடுத்தியிருந்தாள்.

வந்து வண்டியில் ஏறிக்கொண்டாள். ஏறினதும், "சக்கரே, குழந்தையை எங்கிட்டேக் கொடு. நான் வெச்சுக்கறேன்" என்று சொல்லி, குழந்தையைத் தன்னுடன் வந்த சக்கரையிடமிருந்து பெற்றுக்கொண்டாள். பிறகு, "இந்தா, டிக்கட்டு வாங்கு," என்று சக்கரையினிடம் வேண்டிய சில்லறையைக் கொடுத்தாள். அவள் முகத்தில் ஆனந்தம் தெளிவாகத் தோன்றிற்று. "உம்மாச்சிக்கு மயிரைக் கொடுத்தாயா?" என்று குழந்தையைக் கொஞ்சி முத்தமிட்டாள். பிறகு அவளுடைய நேர்த்தியான பட்டு ரவிக்கைக்குள் நன்கு அமைந்திருந்த மார்பையும், ஆபரணபரமாயிருந்த கழுத்தையும் போர்த்திக்கொண்டாள். அவளை இதுவரை கவனித்து வந்த எனக்கு "தன்னழகை அறியா ஸ்திரீ ரத்தினமோ இவள்" என்ற சந்தேகம் தோன்றியது. அவளுடைய தலையில் அணிந்திருந்த மல்லிகையின் மணம் கம்மென்று வீசியது. பையிலிருந்து அவள் வெற்றிலையையும் சீவலையும் எடுத்துப் போட்டுக்கொண்டதும், இன்னொரு நறுமணம் சேர்ந்துகொண்டது. குழந்தையின் முடியற்ற தலையில் சந்தனப்பூச்சு பூசியிருந்தது. அந்த மணமும் கூடிக்கொண்டது. பெண்மணிக்கு வெற்றிலை என்றால் உயிர் போலும். அரைக்கட்டு வெற்றிலையை நேர்த்தியாக நடுக்காம்பைக் கிள்ளிக் கிள்ளிப் போட்டுக்கொண்டே இருந்தாள். பாவம் அதைக் கொள்ளத் தகுந்த வாய் இல்லை. சின்னஞ்சிறுசாய், செக்கச் செவேரென்ற அதரங்களுடைய வாய்.

என் பக்கத்தில் அமர்ந்திருந்த சக்கரை ஒரு சூன்ய சிருஷ்டிபோல் தோன்றினான். ஒரு வார்த்தையும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். பையன் மாநிறம். தலைமயிரை வாரி முடிந்துகொண்டிருந்தான். நெற்றியில் பளிச்சென்ற நாமம். ஆனால் ஸ்ரீசூர்ணத்துக்கு இருபுறமும் ஒழுங்காய் இல்லை. மூலைக்கு ஒரு பக்கமாய்க் கோணலாய் நாமத்தை இழுத்திருந்தான். இடுப்பில் சரிகை வேஷ்டி; மேலே ஷர்ட்டு; அதன் மேல் சரிகை உத்தரீயம். உடை என்னமோ உன்னதமானதுதான். ஆனால் அதால் அவனுடைய முகபாவத்தின் மந்தத்தை மாற்ற முடியுமோ?

பெண்மணியோ திரும்பவும் குழந்தையை வைத்துக்கொண்டு கொஞ்சிக்கொண்டிருந்தாள். "நீ சொல்லு பார்ப்போம்" என்று, ஒரு பாட்டை அதற்குச் சொல்லிக் கொடுத்தாள்.

"பட்டாம்பான் வந்தானேடி !
பந்தலிலே வந்து நின்னானேடி ?
தாலியைத்தான் கட்டினானே!
தாளத்தே கொட்டினானே !"

குழந்தை எப்படிச் சொல்லும் ? மெய்யெழுத்துக்களை விட்டு விட்டு, உயிரெழுத்தைக் கொண்டு, மழலையாடிற்று. இத் தேர்ச்சிக்குப் பரிசாக அவள் குழந்தையை அழுத்தி முத்தமிட்டாள். பிறகு என்ன செய்வது ? பின் வரிசையில் உட்கார்ந்திருக்கும் சக்கரையைப் பார்த்து, "சக்கரே" என்று கூப்பிட்டாள்.

"என்ன" என்றான் சக்கரை.

"இன்னும் அரை மணிக்குள் இது நீடாமங்கலம் போய்ச் சேருமோன்னே ?"

"சேரும்."

"நமக்குக் கும்பகோணம் 'பஸ்' கிடைக்குமோன்னே !"

"கிடைக்கும்."

"இது லேட்டாய் போனக்கே, கும்பகோணம் பஸ் கிடைக்காதோன்னே"

"கிடைக்காது."

சக்கரையிடமிருந்து இந்தத் தெளிவான பதிலைப் பெற்றுக்கொண்டவுடன், குழந்தையுடன் கொஞ்சலானாள்.

"முன்னணி மாம்பழம் தின்னவளே'
அணிமாம்பழம் தின்னவளே,
அப்பிச்சிக் கையை மடக்கறையா
இல்லையா,"

என்றெல்லாம் மெல்ல பாடினாள்.

சக்கரையோடு பேசத் திரும்பிய போது அவளுடைய முகத்தைப் பார்த்தேன். ஒரு தரம் பார்த்தால் பின் எப்பவும் மறக்க முடியாது என்பார்களே, அவ்வித முக ஒளி யுடையவள். நடுப் பாலத்திலிருக்கும்போதே அவள் ஒரு கட்டழகி என்று புலப்பட்டது. நேரே முகத்தைப் பார்த்ததும், அவளுடைய வடிவழகின் மேன்மை கண்ணைப் பறித்தது.நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டவள். காதிலும் மூக்கிலும் கமலங்கள். கையிலும் கழுத்திலும் ஸ்வர்ணாபரணங்கள். காலில் உள்ள பித்த வெடியையும், மிருதுத் தன்மையை இழந்த விரல்களையும் பார்த்தால், குடும்பினி யென்றும் உழைப்பாளி யென்றும் தோன்றிற்று.

ஆனால் எவ்வளவு காலந்தான் ஒருத்தியின் ரூப அழகு நீடித்திருக்கும்? இன்னும் இரண்டு மூன்று குழந்தைகளும் பிறந்து வயதும் ஆகிவிட்டால் இவள் எப்படி யிருப்பாளோ ! வெளி அழகு இருக்கட்டும், இவளுடைய குணம் எப்படியோ ! இவளுடைய மனதில் எவ்விதச் சிந்தனைகள் உண்டாகின்றன! எவை இவளுடைய மனதைக் கொள்ளுகின்றன ! எவைகளைக் கொண்டு தன் வாழ்க்கைக்கு ஒழுக்கமும் சிறப்பும் மேன்மையும் அளிக்கிறாள் ! இவற்றை அறிய எனக்கு ஆவலாயிருந்தது. ஆனால் கும்பகோணம் போவதற்குள் அறிய முடியுமா ?

நீடாமங்கலத்துக்கு வரும்போது இருட்டிவிட்டது. நாழிகையும் ஆகிவிட்டது. கும்பகோணம் பஸ் போய் விட்டது. மறு பஸ்ஸுக்கு சுமார் ஒரு மணி நேரம் காக்க வேண்டியிருந்தது. ரூபவதிக்குக் கொஞ்சம் கவலை உண்டாயிற்று.

"சக்கரே"

"ஏன்!"

"நாழியாயிடுத்தேடா, கும்பகோணத்தில் நாத்தனார் ஆத்துக்குப் போக முடியாது போலிருக்கே."

"போக முடியாது."

"போகாத போனால் அப்பறம் ஏதாவது சொல்லுவரே."

"சொல்லுவள்."

"போனால் இன்னிக்கு ராத்திரிக்குள் மாயவரம் போக முடியுமோ !"

"முடியாது."

"உங்க மாமாவிடம் ராத்திரிக்குள் கட்டாயம் திரும்பி வரேன்னு சொல்லியிருக்கேனே."

"ஆமாம்."

"என்னடா பண்ணறது சக்கரை !"

"ஊ......ம்."

"இந்தா குழந்தையைச் சித்தே வெச்சுக்கோ."

வலங்கிமானைத் தாண்டியதும் ரூபவதிக்கு இன்னொரு கவலை ஏற்பட்டது.

"சக்கரை"

"ஏன்!"

"ரயிலிலேயே போய்விடுவோமா !"

"ஆகா"

"சீக்கிரம் போய்ச் சேரலாமோன்னோ!"

"ஆமாம்;'

"ஆனால் நாம் கும்பகோணம் போய்ச் சேருவதற்குமுன் ரயில் போனாலும் போய்விடு மோன்னோ !"

"போய்விடும்"

"சரி, ரயில் தப்பிப்போச்சுன்னால் பஸ்ஸில் போய்விடுவோம்."

"ஆகா"

இதற்கு மாருக, வண்டியிலிருந்த ஒருவர் கூறினார். "பஸ்ஸூ உங்களுக்குச் சரியாய்க் கிடைக்கும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாதும்மா."

உடனே ரூபவதி சக்கரையைக் கிளப்பினாள்.

"சக்கரே"

"ஏன்"

"பஸ்ஸூம் கிடைக்காதாமேடா !"

"கிடைக்காதோ என்னவோ !"

"ரயிலும் தப்பிப்போய், பஸ்ஸூம் கிடைக்காத போனால் நாத்தனாராத்துக்கே போகலாமா !"

"போகலாம்,"

"குழந்தை தூங்கிவிட்டாளா !"

"ஆமாம்"

"எங்கிட்டேக் கொடு."

குழந்தையை வாங்கிக்கொண்டு திரும்பியும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவள் அணிந்திருந்த கமலங்களிலிருந்து, நாலா பக்கங்களிலும் ஒளி தெறித்துக்கொண்டிருந்தது. 'பஸ்' கும்பகோணம் என்ற ஒரே லக்ஷியத்தைக் குறித்து கன வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. இருட்டும் அதிகமாயிருந்தது. பிரயாணத்தின் பிரயாசையினால், வண்டியிலிருந்த ஜனங்கள் வாய் அடங்கி, பிரயாணத்தின் முடிவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர்.

கும்பகோணம் ரயில்வேஸ்டேஷன் அருகே வந்ததும், "இப்போபோனீங்களானால் ரயில் கிடைக்கும் அம்மா" என்றான் கண்டக்டர்.

ரூபவதி மனம் பூரித்தாள்.

"நல்லதாச்சுடா சக்கரை, இங்கேயே இறங்கி விடுவோம். நீ ஓடிப்போய் டிக்கட்டை வாங்கு," என்று சொல்லிக் குழந்தையுடன் கீழே இறங்கினாள். மாமிக்குத் துணையாக வந்த சக்கரை, ஸ்டேஷனை நோக்கி விரைவாகச் சென்றான். ரூபவதி இடுப்பில் குழந்தையை வைத்துக்கொண்டு, ஒரு கையில் பையை எடுத்துக்கொண்டு, அவனை மெதுவாகப் பின் தொடர்ந்தாள். போகப் போக சின்னஞ் சிறுசாகத் தோன்றிக்கொண்டே, ரூபவதி அதிரூபவதியாகி மறைந்தாள்.



# மார்கழிக் காட்சிகள்

செ. ஸ்ரீராம்

இசைத் தமிழ்ச் செல்வங்களுள், நாடகத் தன்மையும், ஓசையின்ப மும் ஒன்றியமைய, தமிழ் இலக்கியத்தை அணிசெய்து திகழ்வன திருப்பாவை, திருவெம்பாவை என்னும் இரு பிரபந்தங்கள். 'சூடிக் கொடுத்த நாச்சியார்' எனப் புகழ்பெற்ற ஸ்ரீ ஆண்டாள் என்ற வைணவப் பெருமாட்டி அருளிச் செய்த அரிய நூல் திருப்பாவை. வாதவூரர் எனப்படும் மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந் தருளிய 'தேனூறும் வாசகங்கள்' கொண்டது திருவெம்பாவை.

பாவை நோன்பு எனப்படும் காத்தியாயினி விரதத்தைப் பண் டையக் காலத் தமிழ் மகளிர் மார்கழிதோறும் அனுஷ்டித்து வந்தார் கள். அதனை மார்கழி நோன்பு என்றும் கூறுவர். வெகு விரிவாக ஸ்ரீ ஆண்டாள் மார்கழி நோன்பைத் திருப்பாவையில் வருணிக்கிறார். மார்கழித் திங்களாகிய மதி நிறைந்த நன்னாளில் பாவையர் அனைவரும் ஒன்றுகூடி, கதிரவன் தோன்றுவதற்கு முன்னர் நீராடி, தேவி வழி பாடு செய்து நூற்கும் நோன்புதான் காத்தியாயினி விரதம். விர தம் என்றால் அதற்கு வேண்டிய ஒரு சில அனுஷ்டானங்கள் உண்டு. அவற்றையும் தெரிவிக்கிறார் கோதை. விரதம் துவங்கியது முதல் நெய்யுண்ணக் கூடாது; பாலுண்ணக் கூடாது. அதிகாலையில் நீராடவேண்டும். ஆயினும் கருவிழிகளில் மையெழுதுதலும், கருங் குழல்களில் மலர் முடிதலும் ஆகாது. கோட் சொற்களைத் தவிர்த்து, தானமும் பிட்சையும் கேட்போருக்கெல்லாம் வாரி வழங்கித் தம் மால் 'ஆம்தனையும் கைகாட்ட' வேண்டும். இவ்வாறெல்லாம் நோன் பின் 'கிரியைகள்' வருணிக்கப்படுகின்றன.

இவையனைத்துக்கும் மேலாக, இந்த நோன்பை நூற்க அதி காலையில் பொய்கை நோக்கிப் புறப்படும் பெண் திலகங்கள், ஒருவரை யொருவர் துயிலெழுப்புகையில் விவரிக்கப்படும் காட்சிகள் மிக மிக ரம்யமானவை. பக்திச் சுவையும், கவிதையின்பமும் ததும்ப, இக் காட்சிகளை வெகு அழகான முறையில் மனத்துள் எழும்பும் சித்திர மாக வரைகின்றனர் எம்பெருமான் வாதவூரரும், எம்பெருமாட்டி ஸ்ரீ ஆண்டாளும்.

மாணிக்கவாசகப் பெருமான் சொல்வதைக் கேட்போம்.

மார்கழி மாதத்தில் அதிகாலை. தெருவெங்கும் சிவ கோஷம். பக்தர்களின் திருக்குழாம் 'ஆதியு மந்தமு மில்லா அரும் பெருஞ் சோதி'யைப் பூம்புனல் நீராட விரைந்து செல்கின்றது. வீதி முழுதும் 'மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி'யின் இனிய நாதம் நிரம்பி வழிந்துகொண்டிருக்கிறது. (பா. 1).

கோழி தன் கூவலில் குரல் கொடுக்கவே, விழித்தெழுந்த புள்ளினங்கள் குருகெங்கும் பறந்து பரவின. பரஞ்சோதியின் பரங்கருணை குறித்துப் பாடும் பாமர மக்களின் வாழ்த் தொலிகளும் வான வீதியில் விரிந்து தவழ்ந்தன. (பா. 8). காதார் குழையாட, பைம் பூண் கலனாட, கோதை குழலாட, வண்டின் குழாமாட, சீதப் புனலாட முற்படுகின்றனர் இளங் கன்னியர். (பா. 14). இவ்வாறெல்லாம் மார்கழிக் காட்சிகளை வருணிக்கிறார் வாதவூரர்.

திருப்பாவையைச் சற்று நோக்குவோம். மதி நிறைந்த நன்னாள் மார்கழித் திங்கள். கதிரவன் குண திசையில் இன்னும் தோன்றவில்லை. நல்லவிடியற் காலம். புள்ளினங்கள் கூவுகின்றன. ஸ்ரீ கருடாழ்வானுக்கு ஸ்வாமியாகிய பெருமாளுடைய கோயிலிலே, விளி சங்கின் பேரரவம் முழங்குகின்றது. 'வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தனை உள்ளத்துக் கொண்டு', ஹரி ஹரி என்று முனிவர்களும், யோகிகளும் பெருமுழக்கம் செய்யத் துவங்கி விட்டனர். (பா. 6).

வலியன் குருவிகள் பேடைகளுடன் கலந்து சோலையெங்கும் 'கீசு கீசெ'ன்று பேசி அரவம் எழுப்புகின்றன. நறுவாசகக் குழல் முடியும் ஆச்சியர் 'கல கலப்பக் கை பேர்த்து'த் தயிர் கடையும் ஓசையின் இனிமையே இனிமை. (பா. 7).

இதற்குள் கீழ்வானம் வெளுத்துவிட்டது. எருமைகள் சிறிது மேய்வதற்காக பனிப் புல் தரைமீது பரவுகின்றன. (பா. 8.) கதறிக்கொண்டு நிற்கும் கன்றுகளுக்குத் தாமாகவே அவை பால் சுரக்கின்றன. (பா. 12).

பிரஹஸ்பதி அஸ்தமித்துச் சுக்கிரனும் உதயமாகிவிட்ட தருணம். (பா. 13). புழக்கடைத் தோட்டத்திலுள்ள வாவியில் செங்கழுநீர் மலர்கள் மலர்ந்து ஆம்பல் குவிந்தது. காஷாய வஸ்திரம் தரித்து, வெண் பற்கள் வெளியே தெரிய, சங்கிடும் பொருட்டுத் தங்கள் கோயிலை நோக்கித் துறவிகள் விரைகின்றனர். (பா. 14).

இக் காஷிகளுக்கிடையே பாவை நோன்பு நடைபெறுகிறது. இந்நோன்பு பற்றிய செய்திகள் வெகு விரிவாக பாகவதத்தில் தஸம ஸ்கந்தத்தில் காணப்படுகின்றன. மாதம் மும்மாரி பெய்யவும்,

நாடு செழிக்கவும், தான் மனதுக்கினிய கணவரை அடையவும் கன்னியர்கள் இந்த நோன்பை நடத்தி வந்ததாகத் தெரிய வருகிறது. சிவனடியாரையே தம் கணவராக அடைய வேண்டுமென்று திருவெம்பாவையில் பாவை மகளிர் வேண்டுகிறார்கள்.

ஸ்ரீ ஆண்டாளின் இதய பூர்வமான பக்தியெனும் காதல் வெள்ளத்தில் உருவான கன்னிகள், 'கண்ணனே முகில் வண்ணனே சரண'மென்று தலைப் பெய்கின்றனர். கண்ணனே கணவனாக வேண்டும். அந்தக் கோரிக்கையாகிய விரதம் ஈடேறும்போதுதான் அம்மங்கையர்கள் புத்தாடை யுடுப்பர்; 'பால்சோறு மூட நெய் பெய்து' உண்பர்; கூடி மகிழ்வர். ஏழேழு பிறவி யெடுப்பினும் கண்ணனுக்கே அடிமையென அளவிலாப் பக்தி பூண்ட அந்தத் தெய்விகக் காதலியரின் பண்பை என்னவென்று விவரிப்பது?

திருப்பாவை-திருவெம்பாவையை, அழகிய நாடக உருவமாகவோ அல்லது பக்திச் சுவை மிகுந்த பாடல்களாகத் தாளக் கட்டுடன் அமைந்த நாட்டிய ரூபமாகவோ நிகழ்த்துவதென்று முயன்றால், அம்முயற்சி பெரு வெற்றி பெறுமென்பதில் ஐயமில்லை. அவ்வளவு அழகும், பொருட் செறிவும் நிறைந்து, அறிவின் நிலைக் களனாகவும், பக்திக் களஞ்சியமாகவும் விளங்குகின்றன இவ்விரு பிரபந்தங்களும்.

---

## பேதைமை ஒழிந்தால்

பேதைமை மீளச் செய்கை மீளும்
செய்கை மீள உணர்ச்சி மீளும்
உணர்ச்சி மீள அருவுரு மீளும்
அருவுரு மீள வாயில் மீளும்
வாயில் மீள ஊறு மீளும்
ஊறு மீள நுகர்ச்சி மீளும்
நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத்தொகுதி
மீளும், கருமத் தொகுதி மீளத்
தோற்றம் மீளும், தோற்றம் மீளப்
பிறப்பு மீளும்; பிறப்புப் பிணி மூப்புச்
சாக்காடு அவலம் அரற்றுக் கவலை
கையாறு என்றிக் கடையில் துன்பம்
எல்லாம் மீளும், இவ்வகையான் மீட்சி.

—மணிமேகலை.

# கிழப் பிராணன்!



## பி. சு. கைலாசம்

அக்கிரஹாரத்தில் நான்கு நாளாக யாருக்குமே வேளாவேளைக்குச் சாப்பாடு கிடையாது. சாயந்திரமானல், இருட்டுவதற்கு முன் ஜைனர் மாதிரி சாப்பிட்டு விட்டு, அடுத்து வரப் போகும் பிச்சுத் தாத்தாவின் கடைசி மூச்சை, நாலு நாளாக யாவருமே எதிர்பார்த்தார்கள். 92 வருடமாக விடாமல் மூச்சு விட்டுக் கொண்டிருந்த அவர் உடல், கடந்த ஒரு மாதமாகத் தடுமாறிக் கொண்டிருந்தது. வைரம் பாய்ந்த பழங் காலத்துக் கட்டை லேசில் நின்று விடுமா? இன்று வரை மராமத்து இல்லாமல் இயங்கிக் கொண்டிருந்தது ஒன்றே அதன் உறுதிக்கு அத்தாட்சி அல்லவா? ஆனாலும் இம்முறை தாங்காது என்று தான் எல்லோரும் எதிர்பார்த்தார்கள்.

போன வருடமே, ஊரார் எதிர்பார்த்ததை ஒரு முறை முறியடித்திருந்தார் தாத்தா. அப்போதும் இதுமாதிரி தான். வாய்க்காலுக்குப் போனவர் வயசை மறந்து ஒரு படி அதிகமாக இறங்கிவிட்டார். தளர்ந்து போன சரீரத்தின் சுருக்கங்களில் பிடிப்பில்லாத வேஷ்டி முடிச்சவிழ்ந்துவிட்டது. அதைச் சரிப்பண்ண தாத்தா குனிந்த போது கால் நழுவிவிட்டது. பிடிப்பு நழுவின பல்லி மாதிரி, சொத்தென்று, பாதி தண்ணீரிலும் பாதி கரையிலுமாக விழுந்து விட்டார். பண்ணை பி. பி. ஆர். பார்த்து அகத்தில் கொண்டு வந்து போட்டார். தாத்தா கண்ணைத் திறக்கவில்லை. லால் குடியிலிருந்து டாக்டர் உடனே வண்டி போட்டுக் கொண்டு வந்தார். கைச் சதையின் மடிப்பை விலக்கி சமவெளி செய்து கொண்டு உலக்கை போல ஊசியை உள்ளே செலுத்தினர். பிச்சுத் தாத்தா, முகம் கூடச் சுளிக்காமல் மல்லாந்து கிடந்தார். ஊரே படுக்கையண்டை குழுமிவிட்டது. பம்பாயிலிருந்த பிள்ளைக்குத் தந்தி போயிற்று. சொந்தப் பிள்ளை யல்ல, ஸ்வீகாரம். அவன் ஸ்வீகாரம் வந்து வருடம் பத்தாகிவிட்டது. யாரோ தற்குறி ஜோஸ்யன் சொன்னன் என்று எடுத்துக் கொண்ட ஸ்வீகாரம். அந்த சம்பந்தம் ஒரு பெரிய கதை. பின்னல் வருவோம் அதற்கு.

பிள்ளையாண்டான் வந்தான். அவன் வந்தது கூட அப்பாவிற்காக அல்ல, அவர் சொத்துக்காக என்று ஊரில் சொல்லிக் கொண்டார்கள். அது எப்படியோ! அவன் வந்து சேர்ந்த அன்று சாயந்திரம், டாக்டர் வைத்த கெடு. எல்லாரும் அடுப்பை அவித்துவிட்டு ஸ்மசானம் போகத் தயாராகி விட்டார்கள். மணிக் கணக்குத்தான் இனிமேல். கிராமப் புரோகிதர்களைக் கூப்பிட்டு, பிராயச்சித்தம் பண்ண ஆரம்பித்தார்கள்.

பிச்சுத் தாத்தா கட்டிலுடன் "ரேழிக்கு" வந்துவிட்டார். அருகே சாஸ்திரிகள் மந்திர உச்சாடனம். அரைமணி கழித்து, ஈனஸ்வரத்தில், ஆனல் தெளிவாக "மாது, மாது" என்று பிள்ளையைக் கூப்பிட்டார் பெரியவர்.

"இதெல்லாம் என்னடா சத்தம்? யாரு இங்கே பக்கத்தில் மந்திரம் சொல்லறது!" என்றார்.

மாது தயங்கினன். சாகப்போகிறவரிடம், பூலோகப்பூர்வாங்க ஏற்பாடு என்று எப்படிச் சொல்வது !

'' இல்லே. பிராயச்சித்தம் பண்ணிடலாம்னு பெரியவா அபிப்ராயப்பட்டா...அதனுல்.''

மாது வார்த்தையை முடிக்கவில்லை. பெரியவர் சிலிர்த்துக்கொண்டு உட்கார ஆரம்பித்து விட்டார் ! எல்லாரும் வந்து தாங்கிக் கொண்டார்கள்.

''மகா பாபிகளா ! என்னடா எல்லாருமாச்சேர்ந்து என்னே முன்னலயே அனுப்பிச்சுடுவேள் போலிருக்கே'' என்று ஒரு அதட்டல் போட்டார். அந்த ஆயாசத்தில் திரும்பவும் படுத்து விட்டார். ஆச்சு ! பிச்சுத் தாத்தா காரியம் தீர்ந்தது என்று எண்ணின எல்லார் நினைப்பிலும், இரண்டு நாள் கழித்து, ஒரு பிடிமண்ணை அள்ளிப் போட்டார். அதற்கடுத்த நாலாம் நாள் '' வெங்காயத் தொகையல், வாட்டின அப்பளாம் கொண்டுவா,'' என்று கூச்சல் போடும் அளவிற்கு அவர் உடம்பு தேறிவிட்டது. சொத்தை நம்பி வந்த பம்பாய்ப் பிள்ளையாண்டான் வைது கொண்டே 500 ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு திரும்பப் போய்ச் சேர்ந்தான்...

எதற்குச் சொல்ல வந்தேனென்ருல், பிச்சுத் தாத்தா எதிர்பாராத காரியம் செய்வதில் சமர்த்தர். அந்த நாளில் அவர் கல்யாணமே ஒரு புரட்சிகரமானது என்று சொல்வார்கள். அந்த விபரத்தைக் கதையாகச் சொல்லும் குஞ்சுப் பாட்டி போய், இரண்டு வருடமாகிவிட்டது. அவள் சொல்லித் தான் எங்களுக்குத் தெரியும்

தோட்டத்தில் தேடல், ரெயிலடியில் ரகசியம், சினிமாவில் சந்திப்பு, கண்ணில் படாமல் கடிதம் என்ற வாய்ப்புகள் இல்லாத அந்த நாளிலே கூட, காதல் கொண்டார் பிச்சுத் தாத்தா ! எதிர் வீட்டுப் பெண்ணிற்கு கண் கொஞ்சம் '' நார்மலே '' விடக் குறைவு. சொல்பம் மேல் நோக்கு பார்வை, '' ஊரைப் பார் என்ருல் சேரியைப் பார்ப்பாள். அதை அதிர்ஷ்டக் கண் என்று எவ்வளவோ எடுத்துக் காட்டியும் அவளுக்குக்கல்யாணம் என்னவோ ஆகவில்லை. வருடம் ஏற ஏற நாலு பேர் நாலு சொன்னர்கள். வாய்க்கு வந்ததைத்திட்டவட்டமாகப் பேசும் காலம் அது. இது பிச்சுமணி காதிலும் விழுந்தது. (வேறு யாருமில்லை. நம் பிச்சுத் தாத்தா தான்) அப்பொழுது பிச்சுத் தாத்தா ராஜ வடிவு; கட்டுக்குடுமி; நெற்றி நிறைய விபூதி; காதில் கடுக்கன். வேறென்ன வேண்டும் ! எண்ணெயிலும் பழையதிலும் ஊறி ஊறி மினுக்கின உடம்பு. முகத்தில் கொஞ்சம் அசட்டுக்களே உண்டாம். அதனுல் என்ன ? பிராரா்ஜிதம் உண்டு என்ற ஒரு லட்சணம் போதுமே மற்றதை அடிக்க!...

வானக் கண் பெண்ணைப் பற்றிக் கிளம்பின பேச்சுக்கள் இவர் காதிலும் விழுந்தன. இளவட்டத்தின் மனம் கசிந்தது. ஒரு நாள் மாலை வாய்க்காலில் சந்தி பண்ணிவிட்டுக் கரையேறின இவர் கண்களில், நீலாயதாக்ஷி தென்பட்டாள். எதிரே எதிர்ப்பட்ட இளம் சிங்கத்தைக் கண்டு சங்கோஜித்து, பார்வையை வேறு புறம் திருப்பினள் அவள். ஆண்டவன் அமைத்து விட்ட அக்ஷியின் அமைப்புக் காரணமாக, அந்தத் திரும்பிய நோக்கு, அவர் மேல் பட்ட எதிர் நோக்காக, பிச்சுத் தாத்தாவிற்கு தோன்றி யிருக்கவேண்டும் ! கன்னியின் கண்ணில் கசிந்த கனிவைக் கண்டு கரைந்து போனர் அவர். நேரே வீட்டிற்கு வந்தவர் ஒரே பிடிவாதம் பிடித்தார். ஊரார் எதிர்பாராத விதமாகக் கல்யாணம் நடந்தது. நீலாயதாக்ஷி அவருடன் 40 வருடம் குடித்தனம் நடிந்தினள். தாத்தா எவ்வளவோ சம்பாதித்தார். எவ்வளவோ செலவழித்தார். ஆனலும் பெரிய குறை.

இரண்டு முறை சந்தன மொத்தை போலக் குழந்தைகளை ஈன்று விட்டு நாலே நாளில் குழியில் போட வேண்

டிய சோகம் ஏற்பட்டு விட்டது அவளுக்கு. அதற்கு அப்புறம் பத்து வருடம் ஒன்றுமில்லாமல் இருந்து விட்டு, திடீரென்று ஒரு நாள் செத்துப் போனாள். அப்பொழுது முதல் பிச்சுத் தாத்தாவிற்குத் தனி வாழ்வுதான். யார் யாரோ சமைத்துப் போட்டார்கள். நடுவிலே வந்தவர்கள் நாட்டாண்மை பண்ணினார்கள். எப்படியோ காலம் தள்ளினர். அவரது திடீர்க் கோபத்துடனும், திடீர்ப் புத்தியுடனும், யாருமே நிலைத்த ஈடு கொடுக்க முடியவில்லை. எண்பதாவது வயதில் பிள்ளையில்லாக் குறை வாட்டியது. ஊராரும் ஜோஸ்யர்களும், பிள்ளையில்லாமல் இறந்தால் ஏற்படும் பரிபவத்தைப் பாங்காகச் சொன்னார்கள். கடைசியில் தாத்தா, தம் தூரபந்து ஒருவரின் இரண்டாம் பிள்ளையை ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டார். ஏழ்மைப்பட்ட குடும்பம். இந்தப் பையனுக்கு அப்புறம் ஐந்து பெண்களும் இரண்டு பையன்களும். கேட்டிருந்தால் ஒன்றுக்கு இரண்டாக கொடுத்திருப்பார் அவர்! ஸ்வீகார சமயம் ஏற்பட்ட ஆட்சேப சமாதானங்கள், சண்டை சச்சரவுகள், பையனின் தாயார் அழுத அழுகை இவையெல்லாம் எழுதினால் மாளாது. எழுதுகிறவனுக்கும் கஷ்டம்! படிக்கிறவனுக்கு அதைவிடக் கஷ்டம். நம் வளமான கற்பனைக்கு விட்டு விட வேண்டியதுதான். ஸ்வீகாரம் ஆனபின் ஒரு வருடம் அல்லது இரண்டு வருடம் என்று தான், பிச்சுத் தாத்தாவின் ஆயுளுக்கு மதிப்புப் போட்டார்கள் ஊரார். எல்லாரையும் ஏமாற்றி விட்டு 12 வருடம் வாழ்ந்து விட்டார் தாத்தா.

எல்லாரையும் விட தத்துப் புத்திரன் மாதுவிற்குத் தான் ஏமாற்றம் அதிகம். சொந்தத் தகப்பனார் போனதும் அவன் பாடு திண்டாட்டமாகி விட்டது. என்ன தான் ஸ்வீகாரம் போய் விட்டாலும் ரத்தபாசமும் பொறுப்பும் போய் விடுமா! ஐந்து தங்கைகளும் 'அகமுடையானைக்கொண்டு வா' என்று வரிசையாக நின்றார்கள். ஏதோ தட்டுத் தடுமாறி ஒரு தினுசாகக் கல்யாணத்தை முடித்துவிட்டான். கிழவர் போய் விட்டால் அவர் சொத்தில் கை வைக்கலாம் என்ற ஒரு ஆசை. ஆனால் பிச்சுத் தாத்தாவைக் கண்டு யமன் பயந்தான். அவரும் எல்லார் கண்ணிலும் விரலை விட்டு ஆட்டினார், மனசில் கணக்குப் போட்டான் மாது. கிழவர் போன பின் அவனுக்குத்தான் எல்லாம். தங்கைகளின் கல்யாணக் கடன் எல்லாம் அடைத்து விட்டாலும் கணிசமாகக் கையில் மிஞ்சும். ஊரோடு வந்து விடலாம். போனதரம் தந்தி வந்த போது அநேகமாக உத்தியோகத்தை விட்டு விட்டான். கிளம்பின அவசரத்தில், ராஜிநாமாவை நீட்ட மறந்தது நல்லதாகப் போய்விட்டது. கிழவர் பிழைத்துக் கொண்டார். அடுத்த "நல்ல" சமாசாரத்திற்காக ஒரு வருடம் காக்க வேண்டி வந்து விட்டது. தந்தி வந்ததும் உடனே கிம்பிவிட்டான்.

ஆரம்பத்தில் சொன்ன கட்டம்.

நாலு நாளாகி விட்டது, கெடு தாண்டி. கிழவர் இன்னமும் யமனுக்கும், கிராமத்தாருக்கும் டிமிக்கி கொடுத்துக் கொண்டிருந்தார். கிழப் பிராணன் போய்விடும் என்றார்கள் சிலர்; போகாது என்றார்கள் சிலர். டாக்டருக்குக் கூட அசிரத்தை ஏற்பட்டு விட்டது. தலையில் கை வைத்து "ஈச்வரோ ரக்ஷது (?)" என்று உட்கார்ந்து விட்டான் பிள்ளை. தகப்பனார் சொத்தின் மதிப்பை ஒரு தினுசாக மனசில் திரும்பத் திரும்பக் கணக்குப் போட்டு திருப்தி அடைந்தான்.

ஐந்தாம் நாள் மாலை...

பிச்சுத் தாத்தாவிற்கு சுவாசம் இழுக்க ஆரம்பித்து விட்டது. குழந்தைகளைப் பகிரங்கமாக அழைத்துச் சாப்பாடு போட்டு விட்டு, பெரியவர்கள் ரகசியமாகச் சாப்பிட்டு விட்டு

அவர் படுக்கையண்டை வந்தார்கள். பிள்ளை தலைமாட்டில் உட்கார்ந்தான். மனசு பறந்தது. அவனைக் கேட்காமலே." சொத்து, சொத்து" என்று மனசு ஜபம் செய்தது.

பிச்சுத் தாத்தா ஜலம் கேட்டார். ஒரே மூச்சில் நாலு டம்ளர் தண்ணிரை மடக் மடக் என்று குடித்தார். எழுந்து உட்கார்ந்து விடுவாரோ என்று பயந்து போனார்கள் கூடியிருந்தவர்கள்.

மாதுவைக் கூப்பிட்டார் தாத்தா. அணையப் போகிற விளக்கு மாதிரி முகத்தில் தெளிவு ஏற்பட்டது.

"ஹாலாஸ்யம் இருக்காரு?" என்று விசாரித்தார்.

ஹாலாஸ்யம் "இதோ" என்று முன்னே வந்தார். உள்ளூர் வக்கீல் அவர் பிராக்டிஸ் போதும் என்று கிராமத்தோடு வந்து விட்டார். சாவின் சந்நிதியில் தான், அவருக்கு இப்போதெல்லாம் வேலை.

என்னவோ அவரிடம் கேட்டார் பிச்சுத் தாத்தா. இல்லை என்று மண்டையை ஆட்டினார் வக்கீல் ஹாலாஸ்யம். பிள்ளையின் மனசு ஒரு நிமிஷம் அலை பாய்ந்தது. அப்பா அழைக்க, அருகே போனான்.

பெரியவர் பேசினார்... "வாடாப்பா மாது! இங்க உட்காரு... எல்லாரும் வாருங்கோ. அச்சு! என் காலம் முடிஞ்சு போச்சு. என்னப்பன் கூப்பிடறான். எல்லாரும் நன்னா ஒத்துமையா இருங்கோ. நீ தங்கமானவன் மாது! உத்தமன் நீ. சத்புத்திரன். உன்கையால் கொள்ளி வாங்கணும்னு தான் உன்னை ஸ்விகாரம் எடுத்துண்டேன். அந்த ஆசை எனக்குநிறைவேறிடும். உன் ஆம்படையா படு சமத்து. உன்னைச் சேர்ந்த மத்தவாளெல்லாம் கழுகுகள். ஜாக்கிரதையாயிரு. ஏதோ வேண்டியது சம்பாதிக்கிறே. எனக்கு முப்பது நாப்பதுக் குத்தேறும். எனக்கு அப்புறம் இந்தப் பணத்துக்காக எல்லாரும் உன்னைப் பிடுங்கி எடுத்துடுவா. அந்தக் கஷ்டம் உனக்குப்படாது. பணம் தான் உலகத்தில் எல்லாச் சண்டைக்கும் காரணம். அதனாலே என் சொத்தைக் கோவிலுக்கு எழுதி வச்சுட்டேன். என் ஆசிர்வாதம் நோக்கு... வேணது சம்பாதிப்பாய்... சிரேயஸாயிருப்பே...என் ஆசை உன் கையால் கொள்ளி வாங்கணும்கறது ஒண்ணுதான் ... ஐயோ!... எங்கடபா இருக்கே! கிட்ட வாடா."

பிச்சுத் தாத்தா நிஜமாகவே மண்டையைப் போட்டுவிட்டார். அழுகையும் கூச்சலும் ஆரம்பித்தன.

ஸ்விகாரப் பிள்ளை தலையில் கை வைத்துக் கொண்டு சவுக்கத்தால் முகத்தை மூடிக் கொண்டு ஹோவென்று அழுதான். அசாத்திய விசும்பல். ஸ்விகாரத் தந்தைக்காகத் தான் அழுகிறான் என்று ஊரார் நினைத்தார்கள்! ஆனால் அவன் அழுததோ!..



# மூன்று பாடல்கள்

மு. நமசிவாயம்

ஒரு காதலனும் அவனுடைய காதலியும், காதலின் பேராற்றலினுல் ஆட்கொள்ளப்பட்டவராய், யாவரும் அறியாவண்ணம் வேற்றாரில் போய்த் தங்கி, இல்லறத்தை நல்லறமாக நடத்தச் செல்கின்றனர். தாயானவள் மகளைக் காணுது பெருந்துயர் அடைகிருள். உள்ளம் நெக்கு நெக்காய் உருகுகின்றது. மகளை அழைத்துவரப் புறப்படு கின்ருள். நெடுந் தொலைவு சென்றவுடன், எதிரே ஓர் ஆண் மகனை அவன்றன் காதலி பின் தொடர்ந்துவரக் காண்கிருள். தன் மக ளும், அவளுடைய காதலனும்தான் திரும்பி வருகிருர்களாக்கும் என்று எண்ணுகிருள். உள்ளம் உவகையினுல் பொங்குகின்றது. ஆனுல் நெருங்கி வந்ததும் அவர்கள் வேறு என்பது தெரிகிறது. என்ருலும் தன் மகளையும் அவளுடைய காதலனையும் எதிர் செல்லக் கண்டிருக்கக்கூடும் என்ற எண்ணம் தோன்றுகிறது. தோன்றவே அவர்களை நோக்கி வினவுகிருள். அவள் வினவுவதாக அமைந்திருக் கும் பாடலைப் பாருங்கள் :

"மீண்டாரென வுவந்தேன் கண்டு நும்மை இம்மேதகவே
பூண்டா ரிருவர் முன் போயினரோ ? புலியூரெனை நின்
ருண்டான் அருவரை ஆளியன்னுனைக் கண்டேன், அயலே
தூண்டா விளக்கனையாய் ! என்னையோ அன்னை சொல்லியதே."

"தன்னூருக்கு என் மகளை அழைத்துச் சென்ற என் மருமக னும், என் மகளுமே திரும்பி வருகிருர்களாக்கும் என்றெண்ணி உங் களைக் கண்டு மகிழ்ந்தேன். ஆனுல் நெருங்கி வந்ததும் நீங்கள் வேறு என்பது தெரிந்தது. என்ருலும், உங்களைப் போலவே பல்வகையா லுஞ் சிறந்தார் இருவர் செல்லக் கண்டிரோ?" எனக் கேட்கிருள். கேட்கவே அவ்விருவருள் ஆண் மகனுய் நின்றவன் அவ்வன்னை

நோக்கி, "அன்னைப் புலியூர்ச் சிற்றம்பலத்து என்னை அடிமையாய் ஆண்டு கொண்டுள்ள முக்கணனின் மலைக் கண்ணுள்ள அரிமாவைப் போன்ற ஓர் ஆண் மகனைக் கண்டேன்" என்று கூறி தன் பக்கத்தே நின்ற தன் காதலியை நோக்கி "தூண்டாத மணி விளக்கையொத்த என் காதலி, நான் சொல்லிய அவ்வாண் மகன் பக்கத்தே இருந்ததாக வேறொன்றை இவ்வன்னை சொல்லினளே அது யாது என்று அன்னைக்கு அறிவி" என வேண்டுகிறான். அவ்வாண் மகன் தன் மனையாளையன்றி பிறிது பெண்டிர் எவரையுமே மனதில்கூட நினைப்பவனல்லன். அவ்வாறே அவனுடைய காதலியும் அவனையன்றி வேற்றான் எவனையும் சிந்தையினும் கருதாத் தூய்மையான கற்பினை உடையவள். ஆதலால் அவ்வாண் மகன் தன்னெதிர் சென்ற பெண்ணைப் பார்த்தும் பார்க்காதவனேயாயினன். அங்ஙனமே அவன் மனைவியும், தன் எதிர் சென்ற ஆடவனைக் கண்டும் காணாதவளேயாயினள்.

ஆதலால் அவ்வன்னை குறிப்பிட்ட பெண்மணியை தன் மனைவியே பார்த்திருக்கக்கூடும். இவ்வுண்மையை மனதில் இருத்தி, ஆண் மகனைப் பற்றிக் கேட்ட இடத்தில் தான் விடை கூறி, பெண்ணைப் பற்றிக் கேட்ட இடத்தில் தன் மனையாளை விடை கூறுமாறு வேண்டிய நுட்பம் என்ஞான்றும் நினைத்து இன்புறற்பாலதாயிருக்கின்றது. இவ்வழகிய பாடல் திருவாதவூரடிகள் அருளிப்போந்த திருச்சிற்றம்பலக் கோவையாரில் ஓர் பாடலாகத் திகழ்கின்றது.

மற்றொரு பாடலைப் பார்ப்போம். கல்வி கற்று வரவேண்டும், பேரறிவாளனாகத் திகழவேண்டுமென தலைவன் விரும்புகிறான். கல்வி கற்க நெடுந்தொலைவு செல்லவேண்டும். சென்றால் தன்னுருயிர் மனையாளைப் பிரிய நேரிடும். என் செய்வது என்று நினைக்கிறான். கல்விமீதுள்ள ஆர்வம் முன் இழுக்க, காதலன்பு பின் இழுக்கத் திணர்கிறான். மனைவிக்குத் தன் கருத்தை வெளியிடுகிறான். மனைவிக்கும் கணவன் பேரறிவாளனாக யிருக்கவேண்டும் என்கிற ஆவல்தான். என்றாலும் கணவனைப் பிரிய வேண்டுமென்கிற எண்ணத்தில், கல்விமீதுள்ள ஆசை, மாயமாய் மறைந்துவிடுகிறது. போகக் கூடாது என்று தன் கணவனுக்கு அவள் சொல்லும் பான்மையைப் பாருங்கள் :

> " ஆரும் விரும்பிய கல்விமேல் ஆசை உமக்குள தாயிடின்
> பாருற என் பொரு பாவையாய் பாடிய பாவலர் போலவே
> நீரு மருந்தமிழ் செப்பிடும் நீர்மையறிந் திவண் ஏகுவீர்
> மேரு நெடுஞ்சிலை யத்தனர் விறலுறுபுரி வேற்பரே."

நீர் என்னைப் பிரிவீராகில் நான் அதனைப் பொறுக்காமல் விரைவில் மடிந்துவிடுவேன். நீர் திரும்பி வந்து என் பிணத்தைத்தான்

கான இபனும். கல்வி கற்கவேண்டுமென்ற ஆவல் உளதாயின் நீர் செல்லலாம். அனல் நீர் கற்கும் கல்வி, இறந்துபோன பாவை யைப் பாடி உயிரெழுப்பிய திருஞானசம்பந்தரின் ஆற்றலைப் பெற் றதாயிருக்கவேண்டும். நான் இடையில் இறந்தாலும், நீர் கல்வி கற்று வந்து என்னை மீட்டுக்கொள்ளலாம்'' என மொழிகின்ருள். காதலன்பு எத்துணைப் பெருமையும், ஆற்றலுமிக்கது எனப் பாருங்கள். காத லின் மாண்பினை உணர்ந்தன்ரூ, நம்முடைய நாயன்மார்களும், ஆழ் வார்களும், இறைவனைக் காதலனாகவும், தங்களைக் காதலியாகவும் வைத்துப் பாடினர்.

இனி நம்முடைய முன்னோர்கள் எவ்வளவு கொடைத் திறம் வாய்ந்தவர் என்பதைப் பார்ப்போம். ஈகைத் தன்மையை எங்ஙு னம் போற்றினர் என்பதற்குக் கீழ்க் காணும் பாடலைக் காண்மின் :

“ தென் கடல் வளாகம் பொதுமை இன்றி
வெண் குடை நிழற்றிய ஒருமை யோற்கும்
நடு நாள் யாமத்துப் பகலுந் துஞ்ஞான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவர்க்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஒரோக் கும்மே
செல் வத்துப் பயன் ஈதல்
துய்ப் பேம் எனினே தப்புந பலவே.''

வையகம் முழுவதையும் ஓர் வெண் குடையின் நிழலில் வைத்து அரசாளும் மன்னவனும் ஒரு நாளைக்குக் கொள்ளும் உணவு ஒரு நாழியேயாகும். அங்ஙனமே இரவு பகல் தூக்கமில்லாது தினைப் புனத்தைக் காக்கும் கானவனும் ஒரு நாளைக்குக் கொள்ளும் உணவு ஓர் நாழியே. எல்லோரும் உடுப்பது மேலாடை கீழாடை ஆகிய இரண்டு ஆடைகளேயாம். இன்பமும் துன்பமும், செல்வமும் வறுமையும், பிறப்பும் இறப்பும் யாவர்க்கும் பொதுவானவையே யாம். ஆதலால் செல்வர்கள் செய்யவேண்டியது, தம்முடைய செல் வத்தால் அறங்கள் பல செய்து நற்பயன் பெறுதலாம். இவ்வழகிய பாட்டின் விழுப்பம் பாராட்டற்பாலதாயிருக்கின்றது என்று சொல்ல வும் வேண்டுமோ?

---

## பஞ்சசீலம் :

எந்த உயிரையும் கொல்லாமலும் அதற்குத் தீங்கு செய்யாமலும் இருப்ப தோடு அதனிடம் அன்பாகவும் இருப்பது.

பிறர் பொருளை விரும்பாமலும் திருடாமலும் இருப்பது.

கற்புடன் ஒழுக்கம் தவருது ஆண் பெண் இன்பம் அனுபவிப்பது - முறை கெட்ட மோக ஈடுபாடுகளை நீக்குவது,

உண்மையையே பேசுவது, பொய்யை நீக்குவது.

மயக்கத்தையும் சோம்பேறித் தனத்தையும உண்டாக்கும் மதுபான வகைகளை நீக்கிவிடுவது.



# ஐந்து கடிதங்கள்

கடந்த நூற்றாண்டின் இறுதியில் "கடிதத் தமிழ்" எவ்வாறு இருந்தது என்பதை இவை எடுத்துக் காட்டுகின்றன.

ஸ்ரீ மகாமகோபாத்தியாய ஐயரவர்கள்பால் அன்புடையார் பலர். மடாதிபதிகளும், அரசர்களும், ஸம்ஸ்தானாதிபதிகளும், பிரபுக்களும், புலவர்களும் ஐயரவர்கள்பால் காட்டிவரும் அபிமானம் பல செயல்களால் வெளியாகும். அவ்வப்போது அத்தகையவர்கள், அவர்களைப் பாராட்டி எழுதிய கடிதங்கள் நூற்றுக்கணக்கானவை. அவற்றிற் சிலவற்றை இங்கு வழங்குகிறோம்.

## 1. சேலம் இராமசாமி முதலியார்

[சேலம் இராமசாமி முதலியாரைப் பற்றி நாம் அதிகம் கூற வேண்டியதில்லை. அவர்தான் முதல் முதலில் ஐயரவர்கள் சிந்தாமணியைப் பதிப்பிக்கத் தூண்டியவர்; தம்பால் இருந்த கையெழுத்துப் பிரதியையும் கொடுத்துதவியவர்.]

எழும்பூர். *26–8–1889.*

அன்புள்ள அய்யா,

இவ்விடத்திலனைவரும் க்ஷேமம். அவ்விடத்திய க்ஷேமங்களுக் கெழுதியனுப்பக் கோருகிறேன். தாங்களன்புடனெழுதிய கடிதங் கிடைத்துச் சகலமும் தெரியலானேன். பத்துப் பாட்டுப் பிரதிகள் என்னிடம் கொண்டு வந்து சேர்க்கப்பட்டன. அவைகளில் என்னுடைய புத்தகங்களை வைத்துக் கொண்டு மற்றவைகளைச் சேர வேண்டியவர்களுக்குச் சேர்ப்பிக்கும்படி ஏற்பாடு செய்து விட்டேன். இப்புத்தகத்தைப் படிப்போர்கள் தாங்கள் அதுவிஷயமாயெடுத்துக்கொண்ட சிரமத்தின் மிகுதியை அறிவார்களென்று நம்புகிறேன். சிலப்பதிகாரத்தைத் திருத்திவரத் தொடங்கினதாகத் தங்கள் கடிதத்தினால் தெரியவர அதிக சந்தோஷமடைய

லானேன். அவ்வரும் புத்தகமும் விரைவில் வெளிப்படுமென்று பூரணமாக நம்பியிருக்கிறேன். மற்றப்படிக்கு நூதனமொன்று மில்லை. இவ்விடத்தில் எல்லோரும் க்ஷேமமாக இருக்கிறார்கள். தங்கள் தேக விஷயத்தில் கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
இஃடன்
**சே. இராமசாமி**

## 2. பூண்டி ரங்கநாத முதலியார்

[ஐயரவர்கள் சிந்தாமணியைப் பதிப்பித்தவுடன் அதன் பிரதிகளை முதன் முதலில் ஸ்ரீ இராமசாமி முதலியாரவர்களிடமும் பூண்டி ரங்கநாத முதலியார வர்களிடமும் அளிக்க எண்ணினார்கள். ஆயினும் ரங்கநாத முதலியாரவர் களைக் காணப் போனபோது அவர் அயலிடத்துக்குச் சென்றிருந்தார்; ஆத லின் பார்க்க முடியவில்லை. ஐயரவர்கள் கும்பகோணம் சென்றவுடன் தாம் வந் ததும் பிறவுமாகிய செய்திகளைச் செய்யுட்களாகவே எழுதி விடுத்தார்கள். அதற்கு விடையாக ரங்கநாத முதலியாரவர்கள் செய்யுள் ரூபத்தில் ஒரு கடிதம் எழுதிவிடுத்தார்கள். அதிலுள்ள செய்யுளொன்று வருமாறு:]

அன்றெனைக் காண நயந்தனை நீயே;
　　அமையமோவ் வாமையால் அமைவாய்ச்
சென்றனை; நின்னைக் கண்டிலாக் குறையும்
　　என்னதே; சிற்றறி வுடையேன்
ஒன்றல பலவாம் பிழைசெயத் தகுமோ!
　　உத்தம குணமொருங் குடையாய்!
கன்றினைக் காரா அன்புடன் புரக்கும்
　　கமைமிகுத் தளித்தல்நின் கடனே.

## 3. பொ. குமாரசாமி

[ஸ்ரீமான் பொ. குமாரசாமி முதலியாரவர்கள் ஐயரவர்களை நெடுங் கால மாக ஆதரித்துவந்தவர்; ஸர் பொன்னம்பல ராமநாதனவர்களுடைய தமைய னார். மணிமேகலை நூலைப் பதிப்பிக்கையில் ஐயரவர்களுக்கு நிகழ்ந்த ஐயங்களை நீக்க, அவர் கேட்ட வினாக்களுக்கு இலங்கையிலுள்ள பௌத்த வித்தியோதயப் பாடசாலைத் தலைவராகிய ஸ்ரீ ஸுமங்களரவர்களைக் கொண்டு விடைகளெழுது வித்து அனுப்பிப் பேருதவி செய்தவர்கள்.]

கொழும்பு, *10 செப். 1889.*

ஸ்ரீ உ. வே. சாமிநாத ஐயரவர்களுக்கு;

ஐயா,

நீங்கள் அனுப்பிய கடிதமும் பத்துப்பாடல் மூன்றும் வந்து சேர்ந்து மிக மகிழ்ச்சியடைந்தேன். தமிழுக்கு நீங்கள் செய்யும் பேருதவிக்குத் தமிழால் என்ன கைம்மாறு செய்யத் தக்கது? தங்களைப்போல் இன்னுஞ் சிலர் சிதைந்து போகின்ற நூல்களை யச் சிடுவார்களாகில், தமிழுக்குக் குறைச்சல் வேறென்ன?

சிலப்பதிகாரம் அச்சிடுவதில் இனி முயல வேண்டியது. சீக்கிரத்தில் முடிவு செய்யும்படி கேட்கின்றேன். பின்வேறு நூல்களை யச்சிட இவ்வூர்ப் பிரபுக்களைக் கொண்டு உங்களுக்குப் பொருளுதவி செய்யும்படி முயற்சி செய்வேன்.

ம-ா-ா-ஸ்ரீ தாமோதரம் பிள்ளையவர்கள் மூலமாய் ஆறுமுக நாவலர் மருகர் பொன்னையா என்பவரிடமிருக்கும் சிலப்பதிகாரப் பிரதியை அழைப்பித்தால் ஒரு வேளை மூன்று காண்டங்களும் அப்பிரதியில் இருக்கும்.

பத்துப்பாடலில், எனக்குப் பத்துப் பிரதியனுப்பினுல் இங்கே செலவு செய்து பணமனுப்புவேன். விலையின்னதென்று எழுதுக. செலவானதன்பின் இன்னும் வேண்டுமாகில் எழுதுவேன்.

இங்ஙனம் தங்கள் அன்பன்,

போ. குமாரசாமி.

## 4. சுந்தரம் பிள்ளை

[மனோன்மணீயம் எழுதிய புரொபஸர் சுந்தரம் பிள்ளை, ஐயரவர்களுடைய நண்பர்களில் ஒருவர்; மனோன்மணீய நாடகத்தின் பகுதிகள் பாடமாக வைக்கப்பட்ட காலங்களில் ஐயரவர்களை வேண்டி அவர்கள் செய்த திருத்தங்களை விருப்பத்தோடு ஏற்று மகிழ்ந்தவர்.]

16, கார்த்திகை,
திரு அனந்தை.
*(29-11-1896)*

சிவமயம்

தயவுசெய்து அனுப்பித்த எழுத்தும் திருத்தங்களும் கை சேர்ந்தன. நேற்று சாயரக்ஷைவரையும் இரண்டு பிரசங்கங்கள் எழுதி வாசிக்க வேண்டிய அவசர அலுவல் வழக்கமானவற்றோடு தொடர்ந்து கொண்டமையால் சற்றும் சாவகாசமில்லாமல் மறுபடிக்கும் வந்தனத்திற்கும் காலம் தாழ்ந்தமை மன்னிக்க வேண்டுகிறேன். திருத்தங்களைக் கவனித்து மேலும் யாதேனும் சந்தேகம் தோற்றுகிறவைகளைத் தெரிவித்துக் கொள்வேன். கண் வியாதியோடு இவ்வளவு எனக்காகச் சிரமம் எடுத்துக் கொண்டதற்காக மனப்பூர்வமாக நன்றி பாராட்டுதலன்றி மற்றென்ன உபசாரம் யான் சொல்லத்தக்கது? கண் வியாதிகள் அறிந்த நல்ல வைத்தியரிடம் அன்றிச் சாதாரணமானவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டு யாதும் பிரயோகிக்கத் தக்கதன்றே. இப்போது எது தன்மையிலிருக்கிறதென்று அறிய அவாவுறுகிறேன். தாங்கள் தமிழுக்கு ஒரு கண். தங்கள் கண்ணுக்கு வருத்தமென்று கேட்க மனம் சகிக்கிறதில்லை. இனியும் தங்களால் ஆக வேண்டுபவை அனந்தம். சகாயத்திற்கு ஒன்றோ இரண்டோ ஆள் அவசியம். அவ்வகைச் செலவிற்கு என்ன செய்யக்கூடியதாக இருக்கும்? என்னுலியன்றவை செய்ய ஆயத்தம்.

தஞ்சாவூரில் ம-ா-ா-ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யர் அவர்களை யான் சென்ற ஆண்டு கண்டகாலை இவ்வகையான முயற்சிக்குத் தாம் அநுகூலிக்கும் விருப்பமுடையராகப் பேசினர். அவர்கள் ஒரு வாக்குச் செலவிடுவதானால் மடங்களில் அழியும் பொருளில் எவ்வளவு இதில் கதியடையக் கூடாததாகும்? அவர்களைத் தாங்கள் ஏன் பிரேரிப்பிக்கலாகாது? சாது சேஷய்யர் அவர்கள் மூலமாயினும் இலகுவில் நிறைவேறலாமே. தாங்கள் இனித் தனியே யாவும் பார்க்கலாமென்ற எண்ணத்தைத் தயவுசெய்து விட்டுவிடவேணும். சஹாயத்திற்கு ஆளின்றி இனியும் முயற்சிக்கில் எங்ஙனம் தங்கள் நேத்திர வியாதி வருத்திவிடுமோ என்று அஞ்சி யிவ்வளவு எழுதலானேன். நம்மனையார் தேகநிலையைக் கருதும்போது "இருதலைக் கொள்ளியினுள் ளெறும்பு" என்றே யுண்மையாய் எண்ண வேண்டியதாக இருக்கிறது. உழைத்தால் சரீர உபாதி துணியாக நிற்கிறது. உழைக்காவிட்டால் சரீரமிருந்தென்ன பயனென்ற சோகமும் அப்படியே. ஏது செய்ய? கடவுள் இச்சை போல நடக்கட்டும்.

தங்கள் நண்பன்,

பி. சுந்தரம் பிள்ளை.

## 5. ஜூலியன் வின்சன்

[ஐயரவர்களுடைய அயல்நாட்டு நண்பர்களுள் இவர் ஒருவர். இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் அவர்களுக்குப் பல கடிதங்கள் எழுதியிருக்கிறார். பாரிஸ் நகரத்திலுள்ள பெரிய புஸ்தகசாலையிலுள்ள தமிழ்ச் சுவடிகளை ஆராய்ந்து சிலப்பதிகாரம், மணிமேகலை யென்னும் இரண்டும் இருப்பதாக அறிவித்தார். இச்செய்தி அந்நூற்பதிப்புக்களின் முகவுரைகளில் ஐயரவர்களாற் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.]

பாரிஸ், *17-4-1895.*

எனதன்பிற்குரிய ஐயாவே,

நீரனுப்பின 2-புத்தகங்களும் எழுதின கார்டும் என் கிட்ட சேர்ந்தன. ஆதலால் மிகவுஞ் சந்தோஷம் பெற்றிருக்கிறேன். நீர் பெரிய வேலைக்காரனென்றும் மகாகனம் பொருந்திய வித்துவானயிருக்க வேணுமென்றும் நினைத்துவருகிறேன். பணமோ வென்றால் இன்றுமெப்படியதை யனுப்பலா மென்றெனக்குத் தெரியாது. ஆனால் சில நாள்களில் எப்படியாகிலும் புதுச்சேரி வழியாய் சென்னப் பட்டணம் வழியால் அனுப்புவேன். மணிமேகலை அச்சிட முடிக்கும்போது 2 பிரதிகளை அனுப்புக. அது உரையின்றி இருக்குமோ? உரையை எழுதினீரோ?

இங்ஙனம்

தங்கள் அன்பன்,

J. VINSON

(ஜே. வின்சன்)

[தொகுத்தவர் : எஸ். ஸ்ரீநிவாசன்]

# இளவேனில்



இந்தப் பக்கத்தின் ஓரங்களில் காண்பது, திரு. சோமுவின் கவிக்கோவை இரண்டாம் பதிப்பு அட்டைப்படத்தின் ஒரு பகுதி. இங்கே காணும் கறுப்புப் பூ, பல வர்ண மூலப் படத்தில், செவ்விதழ்கள் பரப்பிப் பகட்டுகிறது. இங்கே காணும் கருங் குருவிகள், அதிலே, பல வர்ணப் பறவைகளாய்த் தளிர்க் கொடி ஒன்றில் மயங்கி இருந்து மயக்குகின்றன. இங்கே காணாத மஞ்சள் மலர் ஒன்றின் மணத்திலே, வண்ணத்துப் பூச்சி ஒன்று சொக்கிக் கிடக்கிறது. இவைகளுக்கு ஊடே, இவைகளின் சாயல்கள் எல்லாம் பொருந்திய பெண்-முகம் ஒன்று ஆவலைத் தூண்டுகிறது.

புத்தகத்துக்கு உள்ளே எத்தனையோ விதமான கவி மலர்கள்—எல்லாம் ஆசிரியரின் இளவேனிற் காலத்தில் பூத்தவை. நெடுகிலும், கற்பனைக் கொடிகள், வளைந்தும் நெளிந்தும் படர்ந்திருக்கின்றன. கனவுப் புள்ளினங்கள் பாடுகின்றன. ஒய்யாரிகளும் சிங்காரிகளும் ஆடிப்பாடி மயக்குகிறார்கள்; உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறார்கள்.

இளமையின் ஆசைகளும், துடிதுடிப்பும், வர்ணக் கனவுகளும், ஏமாற்றங்களும், வேடிக்கைப் போக்குகளும், விநோத மன ஓட்டங்களும், இளவேனிற் பாடல்களிலே பின்னிக் கிடக்கின்றன.

“தமிழ் மரபோடு ஒட்டி, ஆனால் ஆங்கில ‘லிரிக்’களைப் போன்ற அமைப்பிலே, சில பாடல்கள் எழுதிப் பார்க்கலாம் என்ற ஆசையில் அவ்வப்போது நான் சில பாடல்கள் எழுதி வந்தேன்”

என்று முகவுரையில் ஆசிரியர் கூறியிருக்கிறார். அவருடைய இந்த ஆசை, "இளவேனில்தானோ?" "காதல் நாயகி," "கனவு" ஆகிய பாடல்களில் நன்றாக நிறைவேறி இருக்கிறது.

இவற்றில், "இளவேனில்தானோ?" என்ற பாட்டை முழுதுமாய் இங்கே தருகிறேன்:

"இளவேனில் தானோ நீ
எந்நிழையே சொல்லிடடி
இளவேனில் தானோ நீ!

இளவேனில் போன்றாய் நீ
என்றுலவ் வேனிற்கும்
உளதோ உன் குளுமையெலாம்
உளதோடி பெண்ணிலவே
இளவேனில் தானோ நீ

உன்முகம்போல் மலருண்டு
உன்குரல்போற் குயிலுண்டு;
உன்னைப்போல் இளவேனில்
ஒருமுறுவல் பூத்திடுமோ?
உன்னைப்போல் மௌனத்தால்
உரைசெயுமோ பூங்குயில்கள்?
உன்னைப்போல் இளவேனில்
உளதோ நீ சொல்லிடடி
இளவேனில் தானோ நீ

ஒருமுத்தம் தந்திடுமோ
உன்னைப்போல் இளவேனில்
ஒரு முத்தம் தந்துவிட்டு
உயிரெல்லாம் கொண்டிடுமோ!
இளவேனில் தானோ நீ

ஆசிரியரின் கவிதை-நடைக்கும், நேர்த்தியான உத்திக்கும், அழகு-உணர்ச்சிக்கும், சொல் நயத் தேர்ச்சிக்கும், இது ஒரு நல்ல உதாரணம்.

"உளதோ உன் குளுமையெலாம்
உளதோடி பெண்ணிலவே"

என்ற வரிகள், குளுமையை அப்படியே அள்ளித் தெளிக்கின்றன. "பெண்ணிலவே" என்ற புதிய சொற்கோப்பு ஒன்றை, நயமாக ஆசிரியர் படைத்திருக்கிறார்.

"உன்னைப் போல் மௌனத்தால்
உரை செயுமோ பூங்குயில்கள்!"

என்ற கேள்வி எவ்வளவு ரஸமாய் அமைந்திருக்கிறது பாருங்கள். "மௌனத்தால் உரை செயுமோ" என்ற வார்த்தைகள், காதல் நாயகியின் மயக்குப் பார்வையை அப்படியே கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறது.

"உயிரெல்லாம் கொண்டிடுமோ" என்று இந்தப் பாட்டில் வரும் வரியும், மற்றப் பாடல்களில் வரும் மற்றும் சில வரிகளும், டென்னிஸன், பைரன், கீட்ஸ் போன்ற ஆங்கிலக் கவிஞர்களின் கருத்துக்களைத் தழுவியனவாய் இருக்கின்றன. ஆங்கில "லிரிக்" களை நன்றாகச் சுவைத்துப் படித்ததன் பலனாக, அவற்றின் சாயல்கள் அங்கங்கே பதிந்துள்ளன. ஆயினும் இவருடைய பாடல்கள் எல் லாம், தமிழுக்கு உரிய பண்புகள் சிறிதும் கெடாத விதத்திலேயே அமைந்துள்ளன.

பெண்களைப் பற்றியும், இளம் மனத்தின் இன்ப நினைவுகள் பற்றியும் பாடும் கவிஞர், நடுவிலே, மரணம் போன்ற பொல்லாத விஷயங்களைப் பற்றிப் பாடியிருப்பதைப் பார்க்கும்போது என்னவோ போல் இருக்கிறது.

மடிய வேண்டுமென்றால்—இந்த
மனமும் உறுதியில்லை
மடிய ஆசை யென்றால்—அந்த
மரணம் வருகுதில்லை.

இந்தக் கொடிய ஆசைக்குக் காரணம்?

நம்புதற் காருமில்லை—நம்மையும்
நம்புவார் யாருமில்லை
வம்புகள் செய்திடுவார்—வலிய
வம்புக் கிழுத்திடுவார்
நெஞ்சினில் ஆசையில்லை—வாழ்விலே
நேசம் கடுகுமில்லை
பஞ்சினில் மென்மையில்லை—என்றன்
படுக்கை நோகுதம்மா......

இந்தப் பாட்டில் தொனிப்பதை ஒரு பாவமாக அல்லாமல், ஒரு பாவனையாகத்தான் கொள்ள வேண்டும்.

நாட்டுப் பாடல்களின் பாணியில் ஆசிரியர் பாடியிருக்கும் சில பாடல்கள் என்னைச் சொக்க வைத்துள்ளன.

ஆத்திலே பச்சைத் தண்ணி
ஆடிக்கிட்டே போவுதடா
காத்திலே வாசம் வந்து—தங்க ராசாவே
கமகமன்னு கமளுதடா—பொன்னு ராசாவே

இதிலே நாட்டுப் புற வாசனை அப்படியே கமழ்கிறது.

கதைக் கவிதைகள் சிலவற்றையும், ஆசிரியர், ஆங்கில வழியை யொட்டிப் புனைந்திருக்கிறார். இவற்றிலே, "மதுக் கிண்ணம்" மிகச் சிறப்பானது. அதிலிருந்து ஒரு பாடல்:

வண்ண மதுஇது முதியதடா—இதை
வார்க்கும் வனிதையோ கன்னியடா;
கிண்ணம் பழைய கிண்ணமடா—இது
கிளறும் கனவுகள் புதுமையடா.

—"சுந்தா"

[இளவேனில் இரண்டாம் பதிப்பு. ஆசிரியர்: சோமு. வெளியிட்டோர்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை—1. விலை ரூ. 2—8—0.]

---

## உலக சரித்திரம் — மூன்றாவது புத்தகம்

தமிழாக்கம்: **அமைச்சர் திரு ஒ. வி. அளகேசன்**

உலகின் தலை சிறந்த சிந்தனையாளரும் பிரபல எழுத்தாளருமான ஸ்ரீ ஜவஹர்லால் நேரு எழுதிய அமர நூல், உலக சரித்திரத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு, சென்ற ஆண்டு வெளியான இந்த மூன்றாவது புத்தகத்துடன் பூர்த்தி அடைகின்றது. முதல் புத்தகம், 672 பக்கங்களுடன் 1947-ம் ஆண்டி லும், இரண்டாவது 1948-ம் ஆண்டிலும் வெளியாகியுள்ளன. தமிழ் இலக் கியத்தை மேலும் வளப்படுத்தும் மாபெரும் நூல் இது. உலக சரித்திரத்தைத் தமிழில் படம் பிடித்துக் காட்டும் மிகப் பெரிய நூல்; தமிழில் இவ்வளவு பெரிய நூல் இதுவரை வந்ததில்லை; இதுவே முதலாவது மாபெரும் சரித்திர நூல்.

நேருஜீ சிறையிலிருந்த காலத்தில், பத்தே வயதான தமது மகள் புரிந்து கொள்ளுவதற்காக எழுதிய இந்த நூலை, அதன் இனிமையும் எளிமையும் குன்றாமல், அழகுற மொழிபெயர்த்துள்ள திரு அளகேசன், தமிழகத்தின்

பாராட்டுக்குரியவராகிறார். தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடும், குன்றாத ஆர்வமும் உடைய ஸ்ரீ அளகேசன், தமக்கென தனியொரு நடையை வகுத்துக் கொண்டுள்ளார்; அதுவும் படிக்கப் படிக்க, மூல நூலோ இது எனக்கூட வியப்புறும் வகையில் சரளமான நடையில் எழுதியுள்ளார். வட மொழிச் சொற்களை அறவே விலக்கவும் இல்லை; அளவுக்கு மீறிச் சேர்க்கவும் இல்லை. தக்க இடங்களில் கலைப் பதங்களுக்கு ஆங்கிலச் சொற்களை அப்படியே உபயோகித்திருக்கிறார். விஞ்ஞானம் சம்பந்தப்பட்ட பகுதியைத் தமிழாக்குவது என்பது சிரமமான காரியம்; மொழிபெயர்ப்பாசிரியர், அதை அபாரத் திறமையுடன் செய்துள்ளார். விஞ்ஞான முன்னேற்றம் என்ற அத்யாயத்திலிருந்து ஒரு பகுதியைப் பாருங்கள் :—

> "ஐன்ஸ்டைன் ஸ்துலப் பிரபஞ்சத்தை ஆராய்ந்தார். இன்னொரு கோடியில் விஞ்ஞானிகள் சூட்சம அணுவை ஆராய்ந்தார்கள். ஒன்று அண்டதத்துவம்; மற்றொன்று பிண்டதத்துவம். ஒரு ஊசி முனையை எடுத்துக்கொள். அதாவது கண்ணால் பார்க்கக்கூடிய மிகச் சிறிய வஸ்து. இந்த ஊசி முனை ஒரு வழியில் பிரபஞ்சத்துக்கு ஒப்பாகவுள்ளது என்று விஞ்ஞானமுறைகளால் நிரூபிக்கப்பட்டுள்ளது. அது ஒன்றையொன்று சுற்றி ஓடும் பேரணுக்களை (molecules) கொண்டிருக்கிறது. ஒவ்வொரு பேரணுவிலும் பல அணுக்கள் அடங்கியுள்ளன. அவ்வணுக்கள் ஒன்றை ஒன்று தொடாது சுற்றிச் சுற்றி ஓடிவருகின்றன. ஒவ்வொரு அணுவிலும் எண்ணற்ற மின்அணுக்கள் அசாத்ய வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கின்றன. அவற்றைப் புரோடான், எலக்ட்ரான் என்று சொல்லுகிறார்கள்."

மொழி பெயர்ப்பின் நடை அழகுக்கு இன்னொரு உதாரணம் :—

> "உலகமகா யுத்தம் நாலு வருஷம் நடந்தது. அந்த நாலு வருஷத்தில் ஐரோப்பாக் கண்டமும், ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களில் சில பகுதிகளும், சுடுகாடாயின. லட்சக்கணக்கான இளைஞர்களின் உயிரை அகாலமிருத்யு வாரிச் சென்றது. யுத்தம் என்பது இனிமை தருகிற ஒரு விஷயமல்ல. அதன் சொரூபம் மகா விகாரமானது; ஆனால் அதன் புகழையே நாம் அதிகமாகக் கேட்கிறோம். அதன் குணங்கள் கற்பனைசக்தியுடன் வருணிக்கப்படுகின்றன. நெருப்புப் புடமானது பொன்னை மாசு நீக்கி சுடருறச் செய்வது போலப் போர் நெருப்பானது ஐம்புல இன்பங்களில் ஆழ்ந்து தன்னீர்மை கெட்டு, நொய்மை கொண்ட ஒரு நாட்டின் சோர்வை ஓட்டி அதற்கு ஆண்மையும் திறனும் அளிக்கிறதென்று அவர்கள் கூறுகிறார்கள். போரிலே காட்டப்படும் உயர்ந்த வீரத்தையும்

மன முருக்கும் தியாகத்தையும் அவர்கள் தங்கள் கூற்றுக்குச் சான்றாக எடுத்துப் பொழிகிறார்கள். அவர்கள் சொல்வதைப் பார்த்தால் மேற்கூறிய குண நலன்களுக்குப் போரே பிறப்பிடம் என்று நினைக்கத்தோன்றும்.''

பள்ளி மாணவர் முதல் எல்லோரும் படித்து இன்புறக்கூடிய நூல் இது. மூல நூலாசிரியரின் உணர்ச்சியும் வேகமும் தமிழ் நூலில் பிரதி பலிப்பதைக் காணலாம்.

ஓ. என். நாகரத்னம்.

[பிரசுரம்: நவயுகப் பிரசுராலயம், 135, பவளக்காரத் தெரு, சென்னை-1. 895 பக்கங்கள். விலை ரூ. 12—8—0.

---

## தேன் மொழியாள்

ஒரு செழிப்பான நந்தவனம்; வண்ண மலர் நிறைந்த செடிகளும் கொடிகளுமாகப் பூத்துக் குலுங்கின்றன. மல்லிகை, முல்லை, இருவாட்சி, ரோஜா, சம்பங்கி முதலிய மலர்கள் ஒரேயடியாகப் பூத்துக் கலீரெனச் சிரிக்கின்றன. இந்த நந்தவனத்துக்குள் நுழைந்த ஒருவருக்கு 'எல்லாம் நாம் ஏற்கெனவே எத்தனையோ தடவை பார்த்த மலர்கள் தானே! 'புதிதாக என்ன இருக்கிறது?' என்று எண்ணத் தோன்றுமா? தோன்றவே தோன்றாது. பார்க்கப் பார்க்கப் பரமானந்தமாயிருக்கும்.

அதே மாதிரிதான் கதைகளில் வரும் காதலும். எத்தனையோ தடவை படித்திருந்த விஷயமானாலும் எழுதுகிறவரின் கை வண்ணங் காரணமாகப் புது மெருகுடன் புது ஒளி பெற்றுப் பொலிகின்றது.

இனியன் தேன்மொழியைக் காதலித்தான்; தேன்மொழி இனியனைக் காதலித்தாள். இனியன் உயர் குலத்தில், பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன்; தேன்மொழி அவனது தகப்பனாரிடம் பண்ணையாளாக வேலை பார்ப்பவனின் மகள்.

இதுதான் இந்தக் கதையின் ஆதார சுருதி; அது மட்டுமல்ல. இந்த சுருதிக்குப் பக்க பலமாக எந்தச் சம்பவமும் நிகழவில்லை. கதையில் மர்மம், சிக்கல், திடுக்கிடும் சம்பவம், எதிர்பாராத நிகழ்ச்சி-இப்படி எதுவும் இல்லை. கதையின் ஆரம்ப முதல் கடைசி வரையில் எதிர்பார்க்கக்கூடிய சம்பவங்கள்தான் நிகழ்கின்றன. அப்படியானால் கதையில் என்ன விசேஷம் இருக்கிறது என்று கேட்கத் தோன்றும்.

ஆமாம். கேட்கவேண்டிய கேள்விதான்.

இந்தக் கதை முழுவதும் இதயமும் இதயமும் பேசுகின்றன; உணர்ச்சியும் உணர்ச்சியும் உறவாடுகின்றன; உள்ளமும் உள்ளமும் தள்ள முடியாத பாசத்தில் பிணைகின்றன. உணர்ச்சிக் குவியலான இந்தக் கதையின் ஓட்டத்தில் உயிர்த் துடிப்பு இருக்கிறது. பட்டண வாசத்துச் சூழ்நிலையில், கல்லூரியில் திடீரென்று தோன்றி மறையும் பொருளற்ற காதலை இந்நூலாசிரியர் சிறிதும் பொருட்படுத்தவில்லை. கிராமச் சூழ்நிலையில் இயல்பாகவே பிறக்கும் காதல்தான் இக்கதையில் இடம் பெறுகிறது. மின்சார விசிறி, ரேடியோ, சினிமா, முதலிய நகர்ப்புறத்து நவீன சாதனம் எதையும் இந்நூலாசிரியர் தம் கதையில் உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை. அவற்றுக்குப் பதிலாக வைக்கோலின் நறுமணம், கன்றுக்குட்டியின் குழந்தைக் குரல், உழவர்களின் உண்மையான வாழ்க்கை ஆகியவைகளையே தம் கதையில் புகுத்திக் கதையை விறுவிறுப்பாகக் கொண்டு செல்கிறார். கதையின் தங்கு தடையற்ற ஓட்டத்துக்கு ஆசிரியரின் அழகான தமிழ்நடை, புதிய காருக்குத் தார் ரோடு போலப் பெரிதும் உதவி செய்கிறது.

இந்தச் சுவை நிறைந்த கதைக்கு, "கல்கி" ஆசிரியர் சோமு அவர்கள் முன்னுரை அளித்திருக்கிறார்.

**—ஸோமாஸ்**

[தேன் மொழியாள். ஆசிரியர்: பகீரதன்; பிரசுரம்: கலைஞன் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 3–8–0]

---

## செட்டி நாடும் தமிழும்

செட்டி நாட்டின் வரலாற்றை, தமிழோடு இணைந்த அதன் வரலாற்றை, சங்க காலம் முதல் இக்காலம் வரை, இந்தப் புத்தகத்தில் எடுத்துச் சொல்லியுள்ளார் திரு "சோமலெ." செட்டி நாட்டின் தமிழ் ஆர்வத்துக்கு ஓர் உதாரணமாய் விளங்கும் ஆசிரியர், செட்டி நாடு தமிழுக்கு ஆற்றியுள்ள பணிகளையும், தமிழ் அறிஞர்களுக்குச் செய்துள்ள பேருதவிகளையும். தனிப் பண்புடன் தமிழை வளர்த்துள்ள விதங்களையும், அழகான தமிழ் நடையில், இதிலே எழுதி இருக்கிறார்.

எத்தனையோ செய்திகளைத் திரட்டியும், எத்தனையோ நுட்பங்களை ஆராய்ந்தும், பலருடன் ஆலோசித்தும் கடிதப் போக்கு வரத்து நடத்தியும், இந்த அருமையான புத்தகத்தை ஆசிரியர் வரைந்து, தமிழ் மக்களுக்கு ஒரு நன்

கொடைபோல வழங்கியுள்ளார். செட்டி நாட்டின் பெருமை, தமிழோடு ஒட்டிய அதன் பெருமை, இத்தகையதா என்று படித்துப் படித்து வியக்கிறோம். மிகையானது எதையும் ஆசிரியர் சொல்வதில்லை; உள்ளதை உள்ளபடித்தான் சொல்கிறார்—அதுவே வியப்பூட்டுவதாய் இருக்கிறது.

இந்தப் புத்தகம் எவ்வளவு ரஸமானது என்பதைத் தெரிவிக்க, இதன் உள்ளுறைப் பகுதிகளின் பெயர்களை எடுத்து எழுதினாலே போதும் :

செட்டி நாடு; சங்க காலம்; சிலப்பதிகாரக் காலம்; பல்லவர் காலம்; சோழர் காலம்; பாண்டியர் காலம்; புரவலர்கள்; செட்டி நாடு ஆதரித்த புலவர்கள்; செட்டி நாட்டுப் புலவர்கள்; சன்மார்க்க சபை; மிதிலைப் பட்டிக் கவிராயர்கள்; நூல் வெளியிடு; இதழ் வெளியிடு; தமிழ் இசை; பிற கலைகள்; கடல் கடந்த நாடுகளில் தமிழ்ப் பணி; குழந்தை இலக்கியம்; தாலாட்டு; ஒப்பாரி; செட்டி நாட்டுத் தமிழ்.

[செட்டி நாடும் தமிழும். ஆசிரியர் : "சோமலெ". வெளியிட்டோர் : பாரி நிலையம். 59, பிராட்வே, சென்னை—1. விலை ரூ. 3/-]

---

## உதிர்ந்த மலர்—ஒரு மனத் தத்துவ நாவல்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே, இயற்கை தோற்றுவித்துள்ள கவர்ச்சி காரணமாய், எத்தனையோ இன்பங்கள், துன்பங்கள், சிக்கல்கள்! இந்த இன்பங்களும் துன்பங்களும் சிக்கல்களுந்தான், எத்தனையோ நாவல்களுக்கு அடிப்படை. இந்த அடிப்படையை ஒவ்வொரு ஆசிரியரும் ஒவ்வொரு விதமாய்ப் பயன்படுத்திக் கொள்கிறார்.

அழகிய, எளிய தமிழ்நடையைக் கொண்டுள்ள, திரு "உமாசந்திரன்," சம்பவங்களை முக்கியமாய்க் கொள்ளாமல், சம்பவங்களுக்கு உள்ளாகும் ஆண்கள் பெண்களின் மன நிகழ்ச்சிகளையே முக்கியமாய்க் கொண்டுள்ளார்.

"உயிர் போவதானாலும் உங்கள் மடியிலேயே தலை வைத்து, கடைசி நிமிஷம்வரை உங்கள் கனிவான முகத்தையே பார்த்தவாறு போகவேண்டும்" என்று, அன்பு மனைவி ஒருத்தி துடித்துக் கொண்டிருக்கிறாள். அந்தத் துடிப்பை, அவளுடைய கணவன் உணரத்தான் செய்கிறான். அப்படி இருந்தும் அவன் மனத்தை ஆட்டி வைக்கப் புயல் ஒன்று தோன்றுகிறது.

நாவலின் போக்கு எப்படி இருக்கும் என்பதை இது ஒருவாறு புலப்படுத்துகிறது அல்லவா!

[உதிர்ந்த மலர். ஆசிரியர் : உமாசந்திரன். வெளியிட்டோர் : பூர்ணிமா பிரசுரம், கதிட்ரல், சென்னை—6. விலை ரூ. 1–14–0.]



# அன்பு விழியும் இன்பச் செவியும்

க. சி. கமலையா

**ப**ண்டைத் தமிழர், வாழ்க்கையென்பதை இரு கூறுக்கினர். ஒன்று உணர்ச்சி; மற்றொன்று செய்கை. இவற்றை முறையே அகப்பொருளென்றும் புறப்பொருளென்றும் பிரித்து வைத்தனர் நம் மூதாதையர். அகப்பொருளாவது, வாழ்க்கைக்கு இன்றியமையாத தலைவியுடன் தலைவன் பிளவுபட்ட கருத்தில்லாதவனுயும் ஒன்றுபட்ட மனத்தினனுயும் இருந்து நுகரும் இன்பமும், அதற்குக் கருவியான காட்சியுமாம். வாழ்க்கைக்கு இன்றியமையாதனவும் தன்னோடு ஒன்றுபட்டு இயங்கும் தன்மையில்லாதனவும் ஆகியவைகளைப் பற்றிச் சொல்வது புறப்பொருள் எனப்படும்.

பத்துப்பாட்டுள் ஒன்ருகிய முல்லைப்பாட்டில், முல்லை நிலத்தின் கண் தலைவனைப் பிரிந்து நிற்கும் தலைவியின் நிலைமை கூறப்பட்டிருக்கிறது. அகப்பொருளை இன்பம் பயக்கும் வகையில் ஆசிரியர் எடுத்துரைத்திருப்பதே ஒரு தனி யழகு வாய்ந்ததாகும். நூற்றுமூன்று அடிகளையுடைய இந்நூலின் ஆசிரியர், காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்த பொன்வாணிகனர் மகனர் நப்பூதனர். அகப் பொருள் துறைக்குரிய தலைவனின் பெயர் கொடுப்பது மரபில்லையாதலின் அது நூலில் கொடுக்கப்படவில்லை. பாடப்பட்டவன் தலையாலங்கானத்துப் பாண்டியன் நெடுஞ்செழியன் என்று கருதப்படுகிறது.

பிறநாட்டின்மேல் போருக்குச் சென்றிக்கும் தலைவனைப் பிரிந்திருந்த தலைவி, பிரிவினுலுண்டான வருத்தத்தைப் பொறுத்துக் கொண்டு முல்லை நிலத்தில் தங்கியிருக்கின்ருள். கார்காலம் தொடங்கும் பொழுது வருவதாக வாக்களித்துச் சென்ற தலைவன் வராமை கண்டு, தலைவி அளவிலாத் துயரடைகிருள். தனிமையாலுண்டான பிரிவு நோயால் உடல் மெலிகிருள்; வளைகள் கைகளினின்றும் நழுவியோடுகின்றன. அடிக்கடி சோர்வடைந்து பெரு மூச்சுவிடுகிருள். அம்பாலடிபட்ட மயில்போல் துடிக்கிருள். நீலோற்பலம் போன்ற மையுண்ட கண்களிலிருந்து நீர்த்துளிகளாகிய வெண் முத்தல்கள் உதிர்கின்றன. தலைவியின் பரிதாப நிலையைக் கண்ட

முதிர்ந்த பெண்கள், அவளுக்கு ஆறுதல் கூறுகின்றனர். முது பெண்டிர் கூறிய சொற்கேட்டு, "இவர் கூறுவதுண்மை" என்று ஒருவாறு தேறி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தலைவியிருக்கிற பொழுது, கார் காலத் தொடக்கத்தில் ஒரு நாள், காதலரை வருத்தும் அந்திமாலைப் பொழுதில், மேகம் பின்வருமாறு இருக்கிறது. சுதரிசன மென்ற சக்காயுதத்தையும், பாஞ்ச சன்னியம் என்ற வலம்புரிச் சங்கையும் கையில் தரித்த திருமால் வாமனவதாரத்தில் தாரை வார்த்துக் கொடுத்த பொழுது நீரை யேற்றுக் கொண்டு ஆகாயம் நோக்கிச் சென்றதுபோல, மேகமானது கடலின் நீரையுண்டு, விரிந்த பூவுலகை வளைத்துக் கொண்டு, வேகமாகத் தண்ணீர் பொழிகிறது. எழுநிலை மாடத்தின் கூடல் வாயிலிருந்து விழுகின்ற அருவி, தலைவியின் காதுக்கினிய ஒலியை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது.

தலைவி இவ்வாறிருக்கையில், அரசனுடன் சென்ற படைவீரர், காட்டாறு சூழ்ந்த முல்லை நிலக் காட்டில் பிடவச் செடிகளோடு பசும்புதர்களையும் வெட்டி யெறிந்து, காட்டு முட்களை வேலியாக வளைத்துக் கட்டிப் பரந்த பாசறை யொன்றை அமைக்கின்றனர். அப்பாசறையில் தழையாலே வேயப்பெற்ற கூரைகள் உள்ள ஒழுங்காயமைந்த தெருக்களின் நாற்சந்தியிலே, யானைகள், காவலாக நிற்கின்றன. மதம் ஊற்றெடுக்கின்ற யானைகள் கரும்புகளுடன் விளைந்த கதிர்களின் இடையிடையே நெருக்கிக் கட்டப்பட்ட அதிமதுரத் தழையையும் உண்ணாமல், கொம்புகளில் கைகளை வைத்துக் தூக்கொண்டு நிற்கின்றன. யானைப்பாகர், கவளத்தைத் தின்னும்படி, பிளவுபட்ட முள்ளையுடைய கருவி கொண்டு, பல வட சொற்களைச் சொல்லிக் குத்துகின்றனர். வலிமை பொருந்திய விற்களை வரிசையாக வீரர் நட்டு, அவற்றின்மேல் அம்புறுத்துணிகளை மாட்டி, பூவேலை செய்யப்பட்ட குந்தாயுதங்களையும் கேடயங்களையும் வரிசையாக வைக்கின்றனர். விற்களாலாகிய அரணே காவலாக நிற்க, பல மொழிகள் பேசும் சேனைகளுக்கு நடுவில், அரசனுக்கென்று ஓர் இடத்தை அமைக்கின்றனர். இரவைப் பகலாக்கும் படியாக ஒளி பொருந்திய வாளையுடைய இடுப்புக் கச்சினைக் கட்டிய பெண்கள், நெய்யை வெளியிடுகின்ற குழாயையுடைய நெய்ப்பாத்திரத்தை உடையவர்களாய், திரியைக் கொளுத்திக்கொண்டு, விளக்குகள் அவியுந்தொறும், தங்கள் கையினுள்ள திரியால் அவைகளைக் கொளுத்துகிறார்கள். மணி ஒலிக்காத நடு யாமத்திலும் காவலாளர் காவல் புரிந்து கொண்டிருக்கின்றனர். காலத்தைக் கருவியால் அளந்து சொல்பவர்கள், "கடல் சூழ்ந்த உலகத்தை வெல்லப் புறப்பட்ட காவலனே! உனது நாழிகை வட்டிலில் சென்ற நாழிகை இவ்வளவு," என்று சொல்லுகிறார்கள். போரின் மேலுண்டான விருப்பத்தினால் உறக்கத்தை விரும்பா மன்னவன், ஆயுதம் பாய்ந்த

த்தாலே பெண் யானைகளை மறந்து நின்ற ஆண்யானைகளையும், செஞ் சோற்றுக்கடன் கழிக்க இறந்து பட்ட வீரர்களையும், கூர்மையான அம்புகள் பாய்ந்ததால் தீனியை உண்ணாமல் வருந்தும் குதிரைகளை யும் நினைந்து, ஒரு கையை மற்றொரு கையுடனே பொருந்தவைத்து, நெடுநேரம் சிந்தனையிலாழ்ந்து, மறுநாள் பகைவரைக் கொன்று வெற்றிமாலை சூடுகிறான். அடுத்த நாள், தோற்றஅரசர் நடுக்கமுற முரசு வாத்தியம் முழங்குகின்ற பாசறையில் உறங்குகிறான்.

எழு நிலை மாடத்தில் கூடுவாய்களினின்று விழுகின்ற அருவி யின் இனிய ஒலியைக் கேட்டுக்கொண்டு, தலைவி படுத்திருக்கிற பொழுது, தலைவன் அவளுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, கொம்பு வாத்தியமும் சங்க வாத்தியமும் முழங்க, தன் குதிரைகளை வேகமாய்ச் செலுத்தி வந்து கொண்டிருக்கிறான். வருகின்ற வழியில், தெள்ளிய மணலில் நெருங்கிய இலைகளையுடைய காயாம்பூச்செடிகள், பெண்கள் கண்களில் தீண்டப்பட்ட மை போல் மலர்ந்து கிடக்கின் றன. பொன்போன்ற மலர்களைக் கொன்றை சொரிந்து நிற்கிறது. திரட்சியுற்ற செங்காந்தள், இரத்தம் போன்ற சிவந்த பூக்களைப் பூக்கவும், வரகுக் கொல்லையில் முறுக்குண்ட கொம்பினையுடைய ஆண் மான்களோடு பெண்மான்கள் துள்ளி விளையாடிக் கொண்டிருக் கின்றன. இக்காட்சிகள் கொண்ட பாதை, முல்லை நிலத்தில் தலைவி தங்கியுள்ள எழு நிலைமாடம் நோக்கிவந்து கொண்டிருக்கிறது. மாடத்துக்குப் பக்கத்தில் வீடு சேரவிருக்கும் தலைவனுடைய வேலைப் பாடமைந்த தேரிலே கட்டப்பெற்ற குதிரைகள் ஆரவாரிக்கின்றன.

இவ்வாறு முடிவடைகின்றது முல்லைப் பாட்டு. இந்நூலிருந்து நாம் தெரியக் காண்பது பல. காட்டாறு சூழ்ந்த சேரிடத்தில் பாசறையமைத்தலும், அப்பாசறைக்கு முள்வேலியை அரணாகக் கோலுதலும்,

> " இடு முட் புரிசை யேமுற வளை இ "
>
> [புரிசை – மதில்கள் ஏ முற வளை இ – காவலாக வளைத்து.]

என்பதால் அறியப்படுகின்றது.

> " குறுந்தொடி முன்கைக் கூந்தஞ் சிறுபுறத்து
> இரவு பகற்செய்யும் திண்பிடி ஒள்வாள்
> விரவு வரிக்கச்சிற் பூண்ட மங்கையர்
> நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
> கையமை விளக்கம் நந்துதொறு மாட்ட "

[கூந்தலஞ் சிறுபுறம் – அழகிய சிறு முதுகு; சுரையர் – குழாயை உடையவர்; மாட்ட - கொளுத்த; கை அமை விளக்கம் - வேலைப் பாடமைந்த விளக்கு; நந்து தொறும் - அணையுந் தொறும்.]

இதிலிருந்து இரவைப் பகல் செய்யும்படியான வாளை இடுப்பில் கச்சையுடன் கட்டியுள்ள பெண்கள் போர்முனையில் சேவை செய்தார்களென்று தெரிகிறது.

"குறுநீர்க் கன்னல் இனைத்து"

என்ற சொற்றொடர் அந்நாளில் நாழிகை கண்டு பிடிப்பதற்காக உபயோகப் படுத்தப்பட்ட நாழிகை வட்டிலைக் குறிப்பிடுகிறது.

தலைவியினுற்றுமையைக் கூறும் வரிகள், வெகு அழகாகத் தலைவியின் நிலையை எடுத்துக் காட்டுகிறது.

"துயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியும் ஒடுவளை திருத்தியும்
மையல் கொண்டும் ஒய்யென உயிர்த்தும்
ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி இழை நெகிழ்ந்து"

[நீடு நினைந்து - வெகு நேரம் எண்ணி
தேற்றியும் - மனதைத் தேற்றிக் கொண்டும்
மையல் - சோர்வு
ஏ உறு - அம்பால் அடிபட்ட
மஞ்ஞை - மயில்
இழை - அணி, ஆபரணம்]

அவள் தலைவன் பிரிவாற்றுமையினுல் பட்ட துயரமெல்லாம் தலைவன் தேரிற் பூட்டப்பட்ட குதிரைகளின் ஆரவார ஒலியினைக் கேட்டு மாயமாய் மறைந்தது.

---

## கொல்லாமை

கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்கும்.
கொல்லாவிரதம் குவலயம் எல்லாம் ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவது என்னிச்சை பராபரமே.
கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லோர் :மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே.
எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே.

—தாயுமானவர்.

# மொழியும் மொழி பெயர்ப்பும்

"துபாஷ்"

மொழிபெயர்ப்பு என்பதே 'ட்ரான்ஸ்லேஷன்' என்கிற ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்பு. இது நல்ல மொழிபெயர்ப்பு. 'தமிழாக்கம்' என்ற சொல்லும் நல்ல சொல்லே. ஆயினும், ஒருவர் ஒன்றைத் 'தமிழாக்கினர்' என்று சொல்லாமல், 'தமிழில் ஆக்கினர்' என்று சொன்னால்தான் நன்றாய் இருக்கிறது.

மொழிபெயர்ப்பு என்ற பெயரில், மொழியின் முழியைப் பெயர்த்து அதை நொண்டும்படி செய்யக்கூடாது; மொழியின் விழியைப் பெயர்த்து, அது கண்ணாமூச்சி அடிக்கும்படியும் செய்யக் கூடாது.

"டுபாக்கோ," புகையிலை என்பதாக, நல்ல தமிழில் அமைந்து விட்டது. புகையிலையால் செய்த 'ஸிகார்,' சுருட்டு என்றும் நல்ல தமிழில் அமைந்துவிட்டது. ஆனால் ஸிகரெட் என்பது ஸிகரெட்டாகவே நிலைத்துவிட்டது. புகையிலையும் சுருட்டும், பண்டிதர்கள் ஆக்கிய சொற்கள் அல்ல; மக்களே ஆக்கிய சொற்கள். மக்களே ஆக்கிய சொற்களெல்லாம், தாய்மொழிக்குப் பொருத்தமான, நயமான சொற்களாகவே இருக்கும். பிடிச்சுராவி, மணிக்கூண்டு, தீப்பெட்டி, உப்புத்தாள் முதலியவற்றை ஆக்கியவர் மக்களே.

ரெயில்களின்மேல் ஓடுவதையே ரெயில் அல்லது ரயில் என்று, மக்கள் தவறாகச் சொன்னார்கள். அந்தப் பிசகை அறிவாளிகள் திருத்தி, ட்ரெய்ன் என்ற சரியான ஆங்கிலச் சொல்லையோ, புகை வண்டி என்ற படைப்புச் சொல்லையோ வீணே புகுத்தவேண்டியதில்லை. தாமும் தாராளமாய், **ரயிலிலேயே** ஊருக்கு ஊர் செல்லலாம். ரயில் டிக்கெட்டை, டிக்கட்டு என்றே சொல்லி வாங்கிக் கொள்ளலாம். அதைக் 'கட்டணச் சீட்டு' என்றோ, 'கட்டண அட்டை' என்றோ சொல்லி, டிக்கட் விற்பவரைத் திணற அடிக்க வேண்டாம்.

எல்லாவற்றையும் தமிழிலேயே ஆக்கிவிட வேண்டும், ஆக்கிவிட முடியும் என்று மார்தட்டிக் கூறுவோர், ஒரு சைக்கிளை (ஈருருளியை அல்ல) அக்கு அக்காகக் கழற்றி, அதன் உறுப்புகளைத் தமிழில் ஆக்கமுடியுமா என்று ஆராய்ந்து பார்க்கட்டும். சைக்கிளின் 'வீலை'ச் 'சக்கரம்' என்று பேஷாகச் சொல்லலாம். ஆனால் டயரை என்னவென்று தமிழில் சொல்வது? டயருக்கு உள்ளே

யுள்ள டியூபையும், டியூபின் மூலப் பொருளான ரப்பரையும் எப்படி நல்ல தமிழில் ஆக்க முடியும்?

பம்ப் (pump) என்பதைப் பம்பு என்று தமிழில் எடுத்துக் கொள்ளலாம். 'காற்றடைப்புக் கருவி' என்று ரொம்பக் கஷ்டப் பட்டுத் தமிழில் பம்பை அடிக்கவேண்டியதில்லை. ஆனாலும், "பம்பு அடி" என்றுதான் சொல்ல வேண்டுமே யன்றி, 'பம்பு' என்று, ஆங்கிலத்தை யொட்டி, அதை வினைச் சொல்லாக மாற்றக் கூடாது. பம்பைப் பம்ப முடியுமானால், மோட்டாரை மோட்டார முடியும்.

முன்பு, 'டெலக்ராம்', கம்பி வழியே சென்றதாலும், அதற்கு 'வயர்' என்று இன்னொரு ஆங்கிலச் சொல் இருந்ததாலும், 'தந்தி' என்ற தமிழ்ச் சொல், அதற்குச் சரியான நேர்பதமாகவே இருந்தது. ஆனால் இப்போது கம்பி இல்லாமலேயும் 'டெலக்ராம்' செல்லுகிறது. இந்த 'வயர்லெஸ் டெலக்ராமை', 'கம்பி இல்லாத் தந்தி' என்று சொல்ல முடியுமா?

பல்லக்கு, குறிச்சி, பாங்கி, பித்தளை, பேனா, பித்தான் முதலிய நூற்றுக்கணக்கான அன்னியச் சொற்கள், தமிழ் வடிவு கொண்டு, தமிழோடு தமிழாய்க் கலந்து, "இவை அன்னியச் சொற்களா என்ன!" என்று வியக்கக்கூடிய விதத்தில் வழங்குகின்றன. தமிழில் நன்றாக வழங்கும் சொற்கள் எல்லாம் தமிழ்ச் சொற்களே. நம் வீட்டு பீரோ எப்படி நமக்குச் சொந்தமோ, அப்படியே பீரோ என்ற சொல்லும் தமிழுக்குச் சொந்தம். சிலர் பீரோவை அன்னிய வார்த்தையாகக் கருதி, அதைத் தூக்கி எறிந்துவிட்டு, அலமாரியை வைத்துக்கொள்கிறார்கள்—அதாவது, அலமாரி என்பது தூய தமிழ் என்பதாக எண்ணி!

வோட் அல்லது வோட்டு என்பது ஒரு சர்வதேசச் சொல். இதை 'வாக்கு' என்று தமிழில் எடுத்துக்கொண்டு, ஏற்கனவே வாக்குக்கு உள்ள பொருள்களுடன் இதை வீணே குழப்புவானேன்? வோட்டைப்போலவே, கார், ரேடியோ, பஸ், ஸினிமா, டாக்கி, பல்ப் முதலியவை, சர்வதேசச் சொற்கள்—ஆங்கிலச் சொற்கள் மட்டும் அல்ல.

உலகத்தில் எந்த மொழியும் தூய வடிவில் இல்லை. பிற மொழிச் சொற்கள் கலந்தேதான் இருக்கின்றன. பிற மொழிச் சொற்களைத் தாராளமாய் ஏற்கும் மொழியே, செழிப்பு மிகுந்த மொழியாகும். தன் சொற்களுக்கே, புதிய புதிய பொருள்களை, பொருந்தா வகையில் ஏற்றுவதால், துல்லியத்தன்மை அழிந்து போகிறது. குழப்பம் விளைகிறது.

'கூலி'யை ஆங்கிலத்தில் அமர்த்திக் கொண்டதைக் கேலி செய்யவும் வேண்டாம்; 'போர்ட்டரை' நாம் அமர்த்திக்கொண்டது குறித்து நாணவும் வேண்டாம்.

'தபசில்' என்ற வார்த்தை, tafseel என்ற உருது வார்த்தையின் தமிழ் வடிவம். இதை 'தப்ஸீல்' என்று, பூர்வ வடிவத்துக்கு மாற்றுவானேன்? காப்பி, பைசல். முசாபரி, போலீஸ், நோட்டு, ஆஸ்பத்திரி, பிஸ்கோத்து, ஜனவரி, முதலிய சொற்களை, பூர்வ வடிவங்களுக்கு மாற்ற முயலுவது, பரிணாம தத்துவத்தை எதிர்ப்பதாகும். ஒவ்வொரு சொல்லும் வேறொரு மொழியில் புகும்போது, உருமாறிப் பரிணமிப்பது இயற்கையே.

'கோர்ட்டை' நீதிமன்றம் என்றும், 'வக்கீலை' வழக்கறிஞர் என்றும் சிலர் எழுதிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் வழக்காடும் சாதாரண கிராமவாசிகூட, ஒரு வக்கீலைத்தான் அமர்த்திக்கொள்கிறான். கோர்ட்டில்தான் பிராதைத் தாக்கல் செய்கிறான். வாயிதாக் கேட்கிறான். ஜப்தி செய்யவும் வாரண்டில் பிடிக்கவும் உத்தரவு கேட்கிறான்......கோர்ட்டில் வழங்கும் அந்நியச் சொற்களை யெல்லாம் அப்புறப்படுத்த முயன்றால் என்னவாகும்?

நம்மிடம் கடிதம் இருக்கும்போது, லிகிதமும் லெட்டரும் எதற்கு? நம்மிடம் திரை இருக்கும்போது, படுதாவும் ஸ்கிரீனும் எதற்கு? வேண்டவே வேண்டாம். தமிழில், உரிய பொருளுடன் வழங்கும் நல்ல சொற்களை எல்லாம், நன்றாக எடுத்தாளுவோம். ஆனால், நம்மிடம் இல்லாதவற்றைத் தயக்கமின்றி எங்கிருந்தும் ஏற்றுக்கொள்வோம்.

ஆக்க முடிகிற சொற்களை நாமே உண்டாக்குவோம்—அதாவது, தமிழ் மரபுக்கும், தமிழரின் நாவுக்கும், செவிக்கும் ஏற்றபடி. இவ்வாறு ஆக்கமுடியாத சொற்களை உடைமை ஆக்கிக் கொள்ளுவோம்.

# ஆருவது தமிழ் மகாநாடு

“இந்தியாவின் கலாசாரத்துக்கும் இலக்கியத்துக்கும் தென்னுடு பெரிதும் உதவியிருக்கிறது. நாட்டின் முன்னேற்றத்துக்கும் ஹிந்து மத வளர்ச்சிக்கும் தென்னுடு குறிப்பிடத்தக்க வகையில் பணி ஆற்றியிருக்கிறது.” இவ்வாறு மத்திய அரசாங்க உள் விவகாரத் துணை மந்திரி ஸ்ரீ பி. என். தாத்தார், புது டெல்லியில், வட இந்தியத் தமிழ்ச் சங்கங்களின் ஆருவது மகாநாட்டை, கடந்த ஆண்டு பொங்கல் பண்டிகையன்று ஆரம்பித்துவைக்கையில் கூறினர்.

வட இந்தியாவில் உள்ள தமிழ்ச் சங்கங்கள் ஆண்டுதோறும் நடத்தும் இந்தத் தமிழ் மகாநாட்டை, இவ்வாண்டு தில்லித் தமிழ்ச் சங்கம், பொங்கலன்றும் அதற்கடுத்த நாளும் நடத்தியது. பிரபல விஞ்ஞானியும், சங்கத்தின் தலைவருமான டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

ஸ்ரீ தாத்தாரின் ஆரம்ப உரைக்குப் பின்னர், உரைக்கோவை ஒன்று நடந்தது. சமஸ்கிருதம், ஹிந்தி, வங்காளி, மலையாளம், கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய மொழிகளின் வளர்ச்சி பற்றியும், இலக்கியச் சிறப்புகள் பற்றியும், அந்தந்த மொழிகளில் தேர்ந்தவர்கள் பேசினர்கள். பிராசின மொழியான சமஸ்கிருதத்தின் சிறப்பையும் தொன்மையையும் பற்றி, சுப்ரீம் கோர்ட் நீதிபதி திரு டி. எஸ். வெங்கடராம அய்யர், அரியதொரு உரை நிகழ்த்தினர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர், திரு டி. எம். நாராயணசுவாமிப் பிள்ளை, தமிழின் வளத்தையும், இலக்கியச் செழிப்பையும் எடுத்துச் சொன்னர். “தமிழனுக்கு எவரிடமும் விரோதம் கிடையாது. தமிழ் மொழி நீக்குப் போக்குடையது; எந்த மொழியிலிருந்தும் தேவையானதைத் தமிழ் எடுத்துக்கொள்ளலாம். தமிழர்களுக்கு ஹிந்தியிடம் எவ்வித விரோதமும் கிடையாது. இப்போது அநேகம் பேர் அதைக் கற்றும் வருகிருர்கள். ஆனல் அவர்கள், தமது மொழியைப் புறக்கணிக்கத் தயாராயில்லை. குமரி முதல் இமயம் வரையிலும், கடல் கடந்தும், தமிழன் தனது கலையையும் கலாசாரத்தையும் பரப்பிய காலம் உண்டு. இப்போது தமிழ் நாடு ஒரு குறுகிய பிரதேசத்துக்குள் அடங்கிவிட்டது. அதில் தமிழன் தனது மொழியையும் பண்பாட்டையும் பாதுகாத்துக்கொள்ளச் சிறிதும் தயங்கமாட்டான்.”

தொல்காப்பியம், புறநானூறு, கம்பராமாயணம் முதலான நூல்களின் சிறப்பையும், அந்நிய நாட்டவர் தமிழுக்குச் செய்திருக்கும் தொண்டையும் எடுத்துரைத்துவிட்டு, வட நாட்டில் இந்த மாதிரி

மகாநாடு நடத்துவது குறித்து தமது பாராட்டுதல்களையும் திரு. நாராயணசுவாமி பிள்ளை தெரிவித்தார்.

உள் விவகாரத் துணை மந்திரி திரு. தாத்தார், கன்னட இலக்கியத்தின் சிறப்புப் பற்றிப் பேசினார். "சமஸ்கிருதம் வளம்மிக்க மொழிதான். ஆனால் அது ஒருபோதும் பாமர மொழியாக இருந்ததில்லை. பிராந்திய மொழிகள்தான் சாதாரண மக்களைக் கவர முடியும். சங்கரர், ராமானுஜர் போன்ற மகான்கள் தமது போதனைகளைப் பிராந்திய பாஷைகளில் செய்ததால்தான் அவர்களது பிரசாரத்துக்குப் பயன் இருந்தது. கன்னட மொழியில் கிரேக்க பாஷையின் செல்வாக்கு இருந்தது. கன்னட மொழியில் இப்போது புது இலக்கியங்கள் உருவாகிவருகின்றன. பிற மொழியினர் கன்னட மொழியின் வளத்துக்கு உதவியிருக்கின்றனர். மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் தமிழ் நாட்டிலிருந்து வந்தவர். ஆனால் அவர் கன்னட மொழியில் சிறந்த இலக்கியக் கர்த்தா."

சுப்ரீம் கோர்ட் நீதிபதி டி. எல். வெங்கட்ராமய்யர், "சமிஸ்கிருதம் நெடுங்காலமாக எவ்வித இடைவெட்டுமின்றி வளர்ந்து வந்திருக்கிறது," என்று கூறினார்.

பாரத நாட்டைக் கலாசார ரீதியில் எப்போதும் ஒன்றாகப் பிணைத்து வந்திருப்பது சமிஸ்கிருதம் என்று கூறினார்.

வங்க இலக்கியத்தில் கவி டாகூருக்குப் பிந்திய காலத்தின் வளர்ச்சியையும், பங்கிம்சந்தர், சரத்சந்தர், நரேந்திரா ஆகியோரின் எழுத்து வன்மையையும், அகில இந்திய வங்க சாகித்ய சம்மேளனத்தின் தலைவர் திரு. தேபேஷ் தாஸ் ஐ.ஸி.எஸ். எடுத்துச் சொன்னார். தற்காலக் கவி நயங்களை மேற்கோள்களுடன் எடுத்துக் காட்டினார். நாடகம், பிரயாண வரலாறு போன்ற அம்சங்களில் வங்க இலக்கியம் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறது என்பதையும் அவர் தெரிவித்தார்.

ஹிந்தியின் சார்பில், மராட்டியும் ஹிந்தியும் அறிந்த திரு. பிரபாகர் மாச்வே பேசினார். "தென்னாட்டில் சைவ இலக்கியம் சிறப்பாக விளங்கியது. வட நாட்டில் வைஷ்ணவ இலக்கியம் வளம் பெற்றது. ஹிந்தியில் இலக்கியச் செல்வத்துக்குக் குறைவில்லை. அப்படி ஒன்றுமே இல்லாத மொழியாக அதை நினைத்துவிட வேண்டாம். எல்லா மொழியினரும் அதன் வளர்ச்சிக்கு உதவி செய்யலாம்".

மலையாள மொழியின் இயல்புகளையும் சார்புகளையும், சாகித்ய அகடமியைச் சேர்ந்த, பேராசிரியா ஜார்ஜ் அழகாக எடுத்துச் சொன்னார்.

தெலுங்கு மொழி பற்றி, திரு நாராயணாச்சார் சுருக்கமாகப் பேசினர்.

டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன், தமது தலைமை உரையில் இந்த மகாநாட்டின் நோக்கங்களைத் தெரிவித்தார். வட நாட்டில் வசிக்கும் தமிழர்கள், தங்கள் மொழியையும், பண்பாட்டையும் பேணிப் பாது காப்பதற்கும், தமிழின் சிறப்பைப் பிற மொழியினரிடையே பரப்புவ தற்கும், பிற மொழிகளின் நயங்களையும், இலக்கியச் செல்வத்தையும் தமிழர்கள் அறிந்துகொள்வதற்கும் ஊக்கம் ஊட்டுவது, இந்த மகா நாட்டின் நோக்கம் என்று சொன்னர். "நமது மொழிதான் சிறந்தது. பிற மொழிகளில் ஒன்றுமே இல்லை என்று சொல்வது தவறு" என்று அவர் அறிவுறுத்தினர்.

ஜம்ஷெட்பூர், கோல்மூரி, கரக்பூர் முதலான இடங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்து மகாநாட்டில் கலந்துகொண்டனர்.

இரண்டாவது நாள் மாலையில் நடந்த கலை நிகழ்ச்சியில், குமாரி சியாமளாவின் இசையும், திருமதி கிரிஜா பக்கிரிசாமியின் நடனமும், பூர்ணம் விச்வநாதனின் ஹாஸ்ய நாடகமும், 'சுந்தா' அவர்களின் தில்லிக் குறவஞ்சி இசைக் கதையும் நடந்தன. கலை விழாவுக்கு திரு டி. எம். நாராயணசுவாமி பிள்ளை தலைமை வகித்தார்.

—ஆர். எஸ். வி.



திரு. டி. எம். நாராயணசுவாமி பிள்ளை.



"செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே"—வட
இந்தியாவில் வந்து வாழ்ந்திடும் நாம் இந்தத்
தேனைப் பருகாத போதிலையே!

"காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி"—இவை
மேவி வளர்த்திட்ட வண்ணங்களை இங்கே
மெச்சிடக் காட்டி மகிழ்ந்திடுவோம்.

யாதும் யாதும் ஊரே யாவரும் கேளிரே
எங்கேயும் வாழ்வோமே இங்கிதமாய்;
வாதுகள் செய்யாமல் நற்பணி ஆற்றுவோம்
வேண்டிப் பொதுநலம் பேணுவோமே.

கன்னித் தமிழினைக் காத்திடுவோம்—தமிழ்
காத்திட்ட பண்புகள் போற்றிடுவோம்;
மன்னும் இமயத்தில் வீசிடச் செய்குவோம்
மாண்புதரும் தமிழ்த் தென்றலினை.

# நன்றியுரை

ஆண்டுதோறும் வருஷப் பிறப்பு மலராக வெளியாகும் நமது சுடர், இந்த ஆண்டில், ஒரு மாதம் தள்ளி, மிகவும் பொருத்தமாக, புத்த ஜயந்தி மலராய் வெளியாகிறது.

இதில் கதை கட்டுரைகள் எழுதி இருப்பவர்களில் பெரும்பாலோர், தில்லித் தமிழர்கள். நையாண்டிக் கவிஞர் "சிட்டி", நகைச்சுவை எழுத்தாளர் "சுகி" இளங்கவிஞர் மு. ஸ்ரீனிவாசன் ஆகிய வெளி எழுத்தாளர்கள் மூலம் இம்மலர் பெருமை அடைந்துள்ளது.

திரு ரா. சாரங்கன், மலருக்குப் பொருத்தமாய், மூவர்ண அட்டைப் படமும், முகப்புப் படமும் மிக அழகாக வரைந்து உதவி இருக்கிறார்.

தாமாகவே சித்திரக் கலை பயின்றுவரும் திரு எஸ். ஜனார்த்தனின் கை வண்ணத்தை ஒவ்வொரு விஷயத்தின் தலைப்பிலும் காணலாம்.

திரு "சிட்டி"யின் கவிதை-நாடகத்துக்கு, திரு "சாமா"வின் சித்திரம் மிகப் பொருத்தமாய் அமைந்துள்ளது.

Press Information Bureau, புத்தர் புகைப் படங்களைக் கொடுத்து உதவி செய்தது.

சுடர் அலுவல் கமிட்டியில், திருவாளர்கள் ஆர். சக்ரவர்த்தி, அ. வி. குப்புசுவாமி, கிருஷ்ணமாச்சாரி, கோவிந்தஸ்வாமி ராஜு, என். அருணாசலம், ஓ. என். உமாஷங்கர், ஆர். வி. ராஜகோபாலன், டி. கே. சுப்பிரமணியன், மூர்த்தி ஆகியோர் பணியாற்றினார்கள்.

திருவாளர்கள் அ. வி. குப்புசுவாமி, என். அருணாசலம், டி. கே. சுப்பிரமணியன், ஆர். வி. ராஜகோபாலன், ராஜாமணி ஆகியோரின் உழைப்பு மிகச் சிறப்பானது.

திரு பி. எஸ். வீரராகவன் நல்லுதவி செய்தார்.

Amalgamation Private Ltdயின் சார்பில், ஸ்ரீ எஸ். எஸ். ராகவாச்சாரியார், சுடருக்கென 250/- ரூபாய் நன்கொடை அளித்தார்.

வர்த்தக ஸ்தாபனத்தார்கள் விளம்பரங்கள் தந்து, பண ஆதரவு அளித்தார்கள்.

வழக்கம்போலவே, இந்த ஆண்டும், ஜூபிடர் அச்சகத்தார், மலரைச் சிறப்பாகத் தயாரித்துக் கொடுத்திருக்கிறார்கள்.

திரு சுந்தா, மலரின் கட்டுக்கோப்பை வகுத்து, இலக்கியப் பணி செய்திருக்கிறார்.

எல்லோருக்கும் நன்றி.

ஆசிரியர்.

---

Edited and Published by Sri. T. G. Anantaswami
for The Delhi Tamil Sangham, New Delhi.
Printed by K. S. S. Rajan at The Jupiter Press Private Ltd., Madras-18.



Nritya Samrat,
RAMANI GOPAL, M.A., A.S.
Founder - Director & Principal

JAI SHANKAR
*Presents*

# RAMANI GOPAL ARTS COLLEGE

OF

**BHARATA NATYAM - DANCING AND MUSIC**

ESTD. 1939

All love to learn Indian Dances under the experienced and expert guidance of the World famous South Indian exponents and Artists :-

## MESSRS. LAKSHMI - RAMANI GOPAL

Smt. Lakshmi Ramani Gopal is giving her solo Bharata Natyam and South Indian Folk dance demonstrations all over North India in the Conferences, Exhibitions and at many other occasions.

**(Special private coaching also undertaken)**

*For further particulars please contact or write to :*

**The Principal, R. G. Arts College,**
6/73, W. E. A., Karolbagh, New Delhi-5.





Smt. LAKSHMI RAMANI GOPAL,
Director of Ramani Gopal Arts College, honouring the visiting artists from Paris (France) at Arts College premises, New Delhi